# ஷேக்ஸ்பியர் வரிசை

# அந்தோனியும் கிளியோபாட்ராவும்

# ANTONY AND CLEOPATRA

பொற்கிழிக் கவிஞர்
அரு.சோமசுந்தரம்

— ஷேக்ஸ்பியரின் —

# அந்தோணியும் கிளியோபாட்ராவும்

(Antony and Cleopatra)

''பொற்கிழிக் கவிஞர்''

அரு. சோமசுந்தரன், M.A., B.T.,




போன்: 2124

பொன்முடி : 23

உரிமை : ஆசிரியருக்கே

முதற் பதிப்பு : ஜூன், 1969
இரண்டாம் பதிப்பு : டிசம்பர், 1975
மூன்றாம் பதிப்பு : 1985
நான்காம் பதிப்பு : மே, 1991

விலை ரூ. 25-00

Publishers :
Ponmudi Pathippagam
(Founded on 3—6—1963)
123, Muthupattinam III St,
Karaikudi, P. T. T. Dt. : 623 001
Tamil Nadu, Phone : 2 1 2 4

அச்சிட்டோர் :
மூவேந்தர் அச்சகம்
இராயப்பேட்டை
சென்னை-600 014

# முதற் பதிப்பின் முன்னுரை

ஆங்கிலப் பெருங்கவிஞர் ஷேக்ஸ்பியரின் நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடும் பணியில் இது மூன்றாவது படைப்பாகும். ஏற்கெனவே "இரண்டாம் ரிச்சர்டு", "மாக்பெத்" என்னும் இரு நூல்களைத் தமிழில் பெயர்த்தளித்தேன். இப்பொழுது "அந்தோனியும் கிளியோபாட்ராவும்" வெளி வருகிறது. இதனைத் தொடர்ந்து இன்னும் பல நூல்களைப் பெயர்த்தளிக்கத் திட்டமிட்டுள்ளேன். கல்வி உலகு கைகொடுக்கும் என்ற நம்பிக்கை உண்டு.

அன்புசால்,

முதல்வர், C. T. C.
காரைக்குடி

அரு. சோமசுந்தரன்
27–6–1969

## கதாபாத்திரங்கள்

1. ஆக்டேவியஸ் சீசர் : ரோமப் பேரரசை ஆளும் "மூவர் குழுவில்" முக்கிய மானவர்.
2. அந்தோனி : மேற்படி மூவர் குழுவில் ஒருவர்; வீரம் மிகுந்தவர்; கதாநாயகர்.
3. லெப்பிடஸ் : மேற்படி மூவர் குழுவில் மூன்றாம் உறுப்பினர்.
4. கிளியோபாட்ரா : எகிப்திய அரசி, கதாநாயகி
5. ஆக்டேவியா : அந்தோனியின் இரண்டாம் மனைவி; ஆக்டேவியஸ் சீசரின் சகோதரி.
6 செக்ஸ்டஸ் பாம்பேயஸ் : புரட்சிக்காரன்.
7. மெனஸ், 8. மெனக்ரேட்ஸ், 9. வேரியஸ் : கடற்கொள்ளைக்காரர்கள் பாம்பேயின் நண்பர்கள்
10. எனோபார்பஸ் 11. வென்டிடியஸ் 12. ஈராஸ் 13. ஸ்காரஸ் 14. டெமட்ரியஸ் 15. டெர்செட்டஸ் 16. பிலோ : அந்தோனியின் நண்பர்கள்
17. மெசீனஸ் 18. அக்ரிப்பா 19. டோலபெல்லா 20. புரோக்கியூலியஸ் 21. தைரஸ் 22. காலஸ் : ஆக்டேவியஸ் சீசரின் நண்பர்கள்
23. டாரஸ் : சீசரின் தளபதி
24. கனிடியஸ் : அந்தோனியின் தளபதி
25. சிலியஸ் : வென்டிடியசின் அணியில் ஓர் அதிகாரி
26 யூப்ரோனியஸ் : ஆசிரியர், அந்தோனியின் தூதன்
27. அலெக்சாஸ் 28. செல்யூகஸ் 29. டயோமெட் 30. மார்டியான் (அலி) : கிளியோபாட்ராவின் ஆட்கள்
31. சார்மியான் 32. ஈராஸ் : கிளியோபாட்ராவின் தோழியர்
33. சோதிடன் 34. முட்டாள் : மற்றும் பலர்.

ஷேக்ஸ்பியரின்

# அந்தோனியும் கிளியோபாட்ராவும்

## களம்: 1 காட்சி : 1

இடம் : *அலெக்சாண்டிரியா (எகிப்தின் தலைநகர்) எகிப்திய அரசி பேரழகி கிளியோபாட்ராவின் அரண்மனை.*

[*கதைத் தொடக்கம் : ரோமாபுரிப் பேரரசின் மாபெரும் தளபதியும், நாட்டை ஆளும் "மூவர் குழுவின்" சக்தி வாய்ந்த உறுப்பினனும் ஆகிய அந்தோனி எகிப்துக்குப் படை எடுத்து வந்தான். ஆனால் அந்நாட்டு அரசி பேரழகி கிளியோபாட்ராவின் எழிலில் மயங்கி, அவளது அன்புக்குப் பாத்திரமான காதலனாக ஆகி, அடிமையாக உழல்கிறான். காதல் வெறியில் தாய்நாட்டையும் கடமையையும் மறந்து திரிகிறான். தாயகத்து மக்கள் அவனைப் பெரிதும் மதித்தாலும், அவனது காதல் வெறி அவர்களுக்கு ஆத்திரத்தையும் வெறுப்பையும் ஊட்டுகிறது. எனவே போற்றிய மக்கள் அவனைத் தூற்றத் தொடங்கு கின்றனர். எகிப்துக்கு அந்தோனியுடன் வந்த அவனது படைத் தளபதிகளும், வீரர்களும் தலைவனின் கடமை*

மறந்த காதல் வெறிகண்டு துயரப்படுகின்றனர். இந் நிலையில் எகிப்தின் தலைநகரான அலெக்சாண்டிரியா வில் கிளியோபாட்ராவின் அரண்மனையில் கதை தொடங்குகிறது. அந்தோனியின் படை வீரர்களான டெமட்ரியஸ், பிலோ என்னும் இருவர் அந்தோனியைப் பற்றி விமரிசனம் செய்கின்றனர்.]

[டெமட்ரியஸ், பிலோ இருவரும் அரங்கில் தோன்று கின்றனர்.]

பிலோ : இல்லை...ஆனால் நம் தளபதியின் காதல் வெறி கரை கடந்து ஓடுகிறது. ஒரு காலத்தில் போர்க்களத்தில் மாவீரர்களின் மத்தியில் ஒளி வீசிய அவரது எழில்மிகு கண்கள் இப்பொழுது ஒரு விலைமகளின் முகத்திற்குத் தலைபணிகின்றன. போரின் மத்தியில் வீரத்தால் விம்மி மார்புப் பித்தான்களை எல்லாம் உடைத்தெறிந்த அவரது உரம்பெற்ற நெஞ்சம் இப்பொழுது உயிரிழந்து, உருவிழந்து கிடக்கிறது. நாடோடி ஒருத்தியின் காதல் வெறியைத் தணிக்கும் விசிறியாகிக் கிடக்கிறது.

(முரசு முழங்குகிறது. அந்தோனி, கிளியோபாட்ரா, தோழியர், அலி ஆகியோர் வருகின்றனர். தோழியர் கிளியோபாட்ராவுக்கு வெண்சாமரை வீசுகின்றனர்)

பிலோ : (டெமட்ரியசிடம்) கவனி...அவர்கள் எங்கே வருகிறார்கள் என்று கவனி. நன்றாகக் கவனி... நாயகத்தை ஆளும் "முப்பெரும் குழுவின்" தலைமகன் ஒருவன், வேசி ஒருத்தியின் அடிவருடியாகிவிட்டதைக் கவனி,

கிளியோபாட்ரா : (அந்தோனியை நோக்கிக் காதல் மொழி பேசுகிறாள்) நீங்கள் என்னை உண்மையிலேயே காதலித்தால் சொல்லுங்கள் அந்தக் காதல் எவ்வளவு என்று......

அந்தோனி : அளவிடக் கூடிய காதல் பிச்சைக்காரர் காதலாகும். நம்காதல் அளவிட முடியாதது.

கிளியோபாட்ரா : நான் அதற்கு ஒரு எல்லை வகுக்கிறேன்.

அந்தோனி : அப்படியானால் நீ ஒரு புதிய சொர்க்கத்தையும் புதிய பூமியையும் கண்டுபிடிக்க வேண்டும்.

(வேலையாள் ஒருவன் உள்ளே வந்து)

வேலையாள் : செய்தி பிரபு!—ரோமாபுரியிலிருந்து செய்தி வந்திருக்கிறது.

அந்தோனி : செய்தியா? வெறுக்கிறேன். சுருக்கமாகச் சொல்.

கிளியோ : இல்லை. கேளுங்கள். அந்தோனி...... செய்தியைக் கேளுங்கள். உங்கள் அருமை மனைவி புல்வியா ஒருகால் கோபமாயிருக்கலாம்; அல்லது "அரும்பு மீசை" சீசர் உங்களுக்குக் கண்டிப்பான ஆணை அனுப்பியிருக்கலாம். "இதைச் செய், அல்லது அதைச் செய். அந்த அரசைக் கைப்பற்று; அதை விடுவி. அதைச் செய் அல்லது உன்னைக் கண்டிக்கிறோம்" என்று சீசர் செய்தி அனுப்பியிருக்கலாம்.

அந்தோனி : எப்படி...அன்பே!

கிளியோ : இருக்கலாம் ... இல்லை ... நிச்சயம் அப்படித்தான் இருக்கும் ... நீங்கள் இங்கே நீண்ட நாள் இருக்க முடியாது. உங்களை விடுவிக்கும்

உத்தரவு சீசரிடமிருந்து வந்திருக்கும். ஆகவே அந்தச் செய்தியைக் கேளுங்கள். அந்தோனி! அது புல்வியாவின் குற்றச்சட்டா? அல்லது சீசரின் ஆணையா? இரண்டுமே இருக்கலாம். தூதுவர்களை வரச்சொல்க. நான் எகிப்தின் அரசி! கன்னம் சிவந்த அந்தோனி! தங்கள் இரத்தம் சீசரோடு தொடர்புடையது! கீச்சுக்குரல் புல்வியா தங்களைத் திட்டும் பொழுது தங்கள் கன்னம் இப்படித்தான் வெட்கிச் சிவக்கும்; எங்கே தூது வர்கள்......!...

அந்தோனி: (காதல் வெறியில் கடமை மறந்து பேசுதல்) ரோமாபுரி தைபர் நதியில் கரையட்டும்; பரந்த பேரரசு சரியட்டும். என் இடம் இங்கேதான் இருக்கிறது. நாடுகள் மண்ணாங்கட்டிகள்! நமது புத்தியற்ற பூமி, மனிதனையும் மிருகத்தையும் ஒன்றாகத்தான் வாழ வைக்கிறது. ஆகவே அதை இழப்பதால் ஒன்றும் போய் விடாது. வாழ்க்கையின் இன்பம் இதில்தான் இருக்கிறது. (கிளியோபாட்ராவைக் கட்டி அணைக்கிறான்) இப்படி ஒரு இணை இருக்கும் பொழுது வேறு எதுவும் முக்கியமில்லை. எந்தத் தண்டனைக்கும் அஞ்சாது சொல்கிறேன்... இந்த உலகத்தி நம் காதலுக்கு ஈடு இணையில்லை.

கிளியோ: அருமையான பொய்! தாங்கள் புல்வியாவை ஏன் மணந்து கொண்டீர்கள் அவளைக் காதலிக்கா விட்டால்? தாங்கள் சொல்வதை எல்லாம் நம்ப நான் ஒரு முட்டாள் இல்லை—அந்தோனியே அது!

அந்தோனி: ...ஆனால் கிளியோபாட்ராவால் ஈர்க்கப் பட்டவன்! நாம் நமது இனிய நேரத்தை வெறும் விவாதத்தில் வீணாக்கக் கூடாது. புதிய இன்பம் இன்றி

ஒரு நிமிடமும் நம் பொன்னான வாழ்வு கழியக்கூடாது'. இன்று இரவு என்ன களியாட்டம்?

கிளியோ : முதலில் தூதுவர்களை அழைத்துச் செய்தியைக் கேளுங்கள்.

அந்தோனி : நிறுத்து!...ஊடல் அரசியே! திட்டுவதும், சிரிப்பதும், அழுவதும் எல்லாம் உனக்குப் பொருத்த மாக இருக்கின்றன. எல்லா உணர்ச்சிகளும் உனக்கு அழகையே ஊட்டுகின்றன. உனது தூதனைத் தவிர இன்னொரு இதனை இனி நான் பார்க்கமாட்டேன். இன்றிரவு நாம் தனியே வீடுகளில் திரிந்து மக்களின் குணங்களைக் காண்போம். வா! என் அரசியே! நேற்றிரவு அதனை நீ விரும்பினாய். இனிப் பேசாதே.

(அந்தோனியும் கிளியோபாட்ராவும் தோழியரும் போகின்றனர்)

டெமட்ரியஸ் : (பிலோவிடம்) அந்தோனி சீசரை இப்படிக் குறைத்துப் பேசுவாரா?

பிலோ : நண்பா...சில சமயங்களில் அவர் அந்தோனியாக இல்லாதபோது இப்படிப் பேசுவார். அந்தோனியின் அரிய பண்புகள் குறைகின்றன. அவை மீண்டும் அவரிடம் துளிர்க்க வேண்டும்.

டெமட்ரியஸ் : நான் மிகவும் வருந்துகிறேன். அவரைப் பற்றி ரோமாபுரி வீதிகளில் உலவும் வதந்தியை அவர் உறுதிப்படுத்துகிறார். ஆனால் விரைவில் நல்ல திருப்பம் ஏற்படுமென்று நம்புகிறேன். உனக்கு நலம் விளைக.

(இருவரும் போதல்)

## காட்சி—2

இடம் : கிளியோபாட்ராவின் அரண்மனை. வேறொரு அறை.

[கிளியோபாட்ராவின் தோழியரான சார்மியான்; இராஸ், அலெக்சாஸ் பிரபு மற்றும் ஒரு ஜோசியர் ஆகியோர் வருகின்றனர்.]

சார்மியான் : பிரபு அலெக்சாஸ், இனிய அலெக்சாஸ், உயர்ந்த அலெக்சாஸ், நீங்கள் அரசியிடம் பெரிதும் புகழ்ந்த ஜோசியர் எங்கே? எனது துரதிர்ஷ்டம் பிடித்த கணவன் யார் என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

அலெக்சாஸ் : ஏ ஜோசியரே!

ஜோசியர் : என்ன செய்யவேண்டும்?

சார்மியான் : (வியப்புடன்) இவர்தான் ஜோசியரா? (ஜோசியரைப் பார்த்து) ஐயா! எல்லாம் அறிந்தவர் நீர்தானா?

ஜோசியர் : இயற்கையின் எல்லையற்ற மர்மப் புத்தகத்திலிருந்து ஒரு சிறிது நான் படிக்க வல்லேன்.

அலெக்சாஸ் : (சார்மியானை நோக்கி) உன் கையை இவனிடம் காட்டு.

(அந்தோனியின் நம்பிக்கைக்கு உகந்த தளபதி எனோபார்பஸ் வருகிறான்.

எனோபார்பஸ் : விரைவில் விருந்து படையுங்கள்; கிளியோபாட்ராவின் நலத்துக்கு வாழ்த்திக் குடிக்கப் போதுமான மதுவும் கொண்டு வாருங்கள்.

சார்மியான் : (ஜோசியரை நோக்கி) ஐயா நல்லவரே! எனக்கு நல்ல அதிர்ஷ்டத்தைக் கொடும்.

ஜோசியர் : அதிர்ஷ்டத்தை நான் ஆக்க முடியாது. ஆனால் முன்கூட்டி அறிய முடியும்.

சார்மியான் : அப்படியானால் உங்களை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன். ஒரு அதிர்ஷ்டத்தை அறிந்து சொல்லுங்கள்.

ஜோசியர் : நீ இப்பொழுது இருப்பதைவிட எதிர்காலத்தில் இன்னும் எழிலோடு இருப்பாய்.

சார்மியான் : உடல் அழகைப் பற்றி அவர் சொல்கிறார்.

இராஸ் : (கேலியாக) இல்லை. நீ கிழவியாகும் பொழுது வர்ணம் பூசி ஒப்பனை செய்து கொள்ளப் போவதைச் சொல்கிறார்.

சார்மியான் : எனக்கு முகத்தில் சுருக்கங்கள் இரா. ஆகவே வர்ணம் பூசவேண்டிய அவசியம் இராது.

அலெக்சாஸ் : அவரது ஜோசியத்தைப் பழிக்காதீர்கள். கவனமாகக் கேளுங்கள்.

சார்மியான் : உஸ்......

ஜோசியர் : (சார்மியானை நோக்கி) நீ நேசிக்கப்படுவதை விட மிகுதியாக நேசிப்பாய்.

சார்மியான் : நான் சற்று மது அருந்தி எனக்கு உற்சாக மூட்டிக் கொள்ள விரும்புகிறேன்.

அலெக்சாஸ் : இல்லை. மேலும் கவனமாகக் கேள்.

சார்மியான் : இப்பொழுது எனக்குச் சில நல்ல அதிர்ஷ்டங்களைச் சொல்லுங்கள். நான் ஒரே நாட் காலையில்

மூன்று மன்னர்களை மணந்து அவர்களை விதவைகள் ஆக்கவேண்டும். எனக்கு ஐம்பது வயதில் ஒரு புதல்வன் இருக்கட்டும். அவனுக்கு மிகக் கொடியவனான ஹெராட் ஜூப்ஜுரி அடிபணியட்டும். நான் ஆக்டேவியஸ் சீசரை மணந்து எனது தலைவிக்குச் சமமாகட்டும்.

ஜோசியர் : நீ உன் தலைவியைவிட மிகுதியாக வாழ்வாய்.

சார்மியான் : நன்று நன்று. நான் அத்திமரத்தைவிட நீண்டநாள் வாழ்வை விரும்புகிறேன்.

ஜோசியர் : உனது எதிர்காலத்தைவிட இறந்த காலம் மிகச் சிறந்ததாகும்!

சார்மியான் : எனக்கு எத்தனை புதல்வர்களும் புதல்வி களும் இருப்பார்கள்?

ஜோசியர் : உனது ஆசைகள் ஒவ்வொன்றும் கருவானால் உனக்குப் பத்து இலட்சம் குழந்தைகள் இருப்பார்கள்.

சார்மியான் : (கோபமாக) முட்டாள்! வெளியே போ...... நீ ஒரு ஜோசியன் என்பதனால் மன்னித்தேன். போகட்டும் வா. இராஸ்! உனக்கு இப்பொழுது ஜோசியம் சொல்லட்டும்.

அலெக்சாஸ் : நாம் எல்லோரும் நமது அதிர்ஷ்டத்தைத் தெரிந்து கொள்வோம்.

எனோபார்பஸ் : என்னுடைய அதிர்ஷ்டமும், பெரும்பா லும் நம் எல்லோருடைய அதிர்ஷ்டமும் இன்றிரவு வயிறுமுட்டக் குடித்துவிட்டுத் தூங்குவதே ஆகும்.

இராஸ் : (தன் கையை நீட்டி) இந்தக் கை வேறு எதைக் காட்டாவிட்டாலும் கற்பைக் காட்டுகிறது அல்லவா!

சார்மியான் : (கேலியாக) நைல் நதியின் வெள்ளம் பஞ்சத்தைக் காட்டுவதுபோல, உன் கை கற்பைக் காட்டுகிறது.

இராஸ் : போடி குறும்புக்காரி! நீ ஜோசியம் சொல்ல முடியாது.

சார்மியான் : இல்லை. வேர்க்கும் உள்ளங்கை சரியான ஜோசியமாக இல்லாவிட்டால் நான் என் காதை அறுத்துக் கொள்கிறேன். (ஜோசியரைப் பார்த்து) ஐயா! உம்மை வேண்டிக் கொள்கிறேன். இவளுக்குச் சாதாரணமான ஜோசியம் சொல்லும்.

ஜோசியர் : (இராசின் கையைப் பார்த்து) உன்னுடைய அதிர்ஷ்டமும் அவளுடையதைப் போலவே இருக்கிறது.

இராஸ் : எப்படி? எப்படி? விபரமாகச் சொல்லுங்கள்.

ஜோசியர் : நான் முன்பே சொல்லிவிட்டேன்.

இராஸ் : நான் அவளைவிட ஒரு அங்குலம்கூட அதிக அதிர்ஷ்டம் பெறவில்லையா?

சார்மியான் : (இராசிடம்) நல்லது. நீ என்னைவிட ஒரு அங்குலம் அதிக அதிர்ஷ்டம் பெறுவதாக இருப்பின் எந்த விஷயத்தில் அதனைப் பெறுவாய்?

இராஸ் : என் கணவனின் மூக்கில் அல்ல.

சார்மியான் : நமது தீய எண்ணங்களை நல்ல எண்ணங்களாக இறைவன் மாற்றட்டும். அலெக்சாஸ்! வா! அவனுடைய அதிர்ஷ்டம்! அவனுடைய அதிர்ஷ்டம்! ஓ! இனிய ஐசிஸ்! நான் வேண்டிக் கொள்கிறேன். அவன் தீயவள் ஒருத்தியைத் திருமணம் செய்து கொள்ளட்டும்! அவள் சாகட்டும்! இன்னும் மட்டமான ஒருத்தி அவனுக்கு மறு மனைவியாகட்டும்! மேலும் மேலும் தீயன தொடரட்டும்! அவனும் அவளும் சமாதி அடையட்டும்! இனிய ஐசிஸ்! என்னுடைய பெரிய வேண்டுதல்களை நீ வழங்கா விட்டாலும் இதனை யாவது வழங்கு! இனிய ஐசிஸ்! உன்னை நான் மன்றாடுகிறேன்.

இராஸ் : அப்படியே ஆகுக! இனிய தேவதையே! மக்களின் அந்த வழிபாட்டைக் கேள்!

சார்மியான் : அப்படியே ஆகுக.

எனோபார்பஸ் : உஸ்... அதோ அந்தோனி வருகிறார்.

சார்மியான் : இல்லை. அது அந்தோனி இல்லை. கிளியோபாட்ரா!

(கிளியோபாட்ரா வருகிறாள்)

கிளியோ : எனது பிரபுவைப் பார்த்தீர்களா!

எனோபார்பஸ் : இல்லை, அரசியாரே!

கிளியோ : அவர் இங்கு வரவில்லையா?

சார்மியான் : இல்லை, தேவி!

கிளியோ : அவருக்கு மகிழ்ச்சி ஊட்டினேன். ஆனால் அவருக்குத் திடீரென்று "ரோமானிய எண்ணம்" (தாயக எண்ணம்) ஏற்பட்டுவிட்டது, எனோபார்பஸ்!

ஏனோ : தேவி!

கிளியோ : அவரைக் கண்டுபிடித்து இங்கே அழைத்து வா! அலெக்சாஸ் எங்கே?

அலெக்சாஸ் : இதோ உங்கள் சேவையில்தான் இருக்கிறேன்...அதோ...நம் பிரபு வருகிறார்...

கிளியோ : நாம் அவரைச் சந்திக்கக் கூடாது. எல்லோரும் என்னுடன் வாருங்கள்.

(அனைவரும் போகின்றனர்.)

(அந்தோனி வருகிறான். அவனுடன் ஒரு தூதுவனும், சில வீரர்களும் வருகின்றனர்.)

தூதுவன் : தங்கள் மனைவி புல்வியா முதலில் போர்க் களத்திற்கு வந்தாள்.

அந்தோனி : எனது சகோதரன் லூசியசுக்கு எதிராகவா?

தூதுவன் : ஆம். ஆனால் விரைவில் அந்தப் போர் முடிந்தது. காலச் சூழ்நிலை அவர்களை இணைத்தது. சீசருக்கு எதிராக அவர்கள் இருவரின் படைகளும் இணைந்தன. ஆனால் அவர்களது படைகளை முதற் போரிலேயே சீசர் முறியடித்து இத்தாலியை விட்டே அவர்களை ஓட்டிவிட்டார்.

அந்தோனி : சரி...இன்னும் மோசமான செய்தி என்ன?

தூதுவன் : அந்தக் கொடுஞ் செய்தியைச் சொல்ல என் நாக் கூசுகிறது! அதைத் தாங்க...

அந்தோனி : முட்டாளாலும் கோழையாலும் முடியாது. ஆனால் என்னால் முடியும். சொல். கடந்த காலத்தில் நடந்த நிகழ்ச்சிகளை முடிந்ததாகவே கருதுபவன்

நான். என்னைப் பொறுத்தவரை என் கொள்கை இது தான்...எவன் ஒருவன் உண்மை சொல்கிறானோ அவன் சொல்லில் எனது மரணச் செய்தியே இருந்தாலும்கூட அவனுடைய வார்த்தைகளை நான் புகழ் மாலைகளாக ஏற்கிறேன்.

தூதுவன் : நான் சொல்லுவது சற்று கடினமான செய்தியாகும்...லெபேனியஸ் தனது பார்த்தியப் படைகளோடு யூப்ரேட்சிலிருந்து ஆசியப்பரப்பை விரிவுபடுத்தி உள்ளான். அவனது வெற்றிக்கொடி சிரியா முதல் லிடியா, ஐயோனியா வரை பட்டொளி வீசிப் பறக்கிறது. ஆனால்...

அந்தோனி : ஆனால் அந்தோனி இப்படி மோகத்தில் மூழ்கிக் கிடக்கிறான் என்று சொல்லப் போகிறாய் இல்லையா?

தூதுவன் : பிரபு!

அந்தோனி : அஞ்சாதே! வெளிப்படையாகப் பேசு! ரோமில் பொதுமக்கள் என்னைப்பற்றி என்ன பேசுகிறார்களோ அதை மறைக்காமல் அப்படியே சொல். ரோமில் கிளியோபாட்ராவைப் பற்றி என்ன பேசுகிறார்களோ அந்த வார்த்தைகளை வழங்கு. புல்வியா எந்த வார்த்தைகளால் திட்டுவாளோ அவற்றை அப்படியே சொல். எனது குற்றங்களை முழு உரிமையோடு தூய்மையாகவும் கடுமையாகவும் எடுத்துக் கூறு. அப்பொழுதுதான் நாம் களை பறித்தவர்கள் ஆகிறோம். குறைகளைக் கூறுவது உழுது பண்படுத்துவதற்கு ஒப்பாகும். ஆகவே அஞ்சாது சொல்.

தூதுவன் : அப்படியே. (வெளியே செல்கிறான்)

அந்தோ : சிசியானிலிருந்து செய்தி கொண்டு வந்திருப்பவன் யார்? அவனை வரச்சொல்.

முதல் வீரன் : சிசியானிலிருந்து வந்திருக்கும் மனிதன் யார்? அப்படி யாராவது வந்திருக்கிறார்களா?

இரண்டாம் வீரன் : அவன் தங்கள் ஆணைக்காகக் காத்திருக்கிறான்.

அந்தோ : அவன் வரட்டும். இந்த எகிப்திய விலங்குகளை நான் முறித்தெறிய வேண்டும், அல்லது மோகத்தில் மூழ்கி அழிய வேண்டும்.

(இரண்டாம் தூதுவன் வருகிறான்)

அந்தோ : என்ன செய்தி? சொல்.

இரண்டாம் தூதுவன் : தங்கள் மனைவி புல்வியா இறந்து விட்டார்கள்.

அந்தோ : (கவலையுடன்) என்ன? இறந்து விட்டாளா? எங்கே இறந்தாள்?

இரண்டாம் தூதுவன் : சிசியானில் நோயால் இறந்தார்கள். தங்களுக்கு இன்னும் மிக முக்கியமான செய்தி இக் கடிதத்தில் இருக்கிறது. (கடிதத்தைக் கொடுக்கிறான்)

அந்தோ : நீ போகலாம் (இரண்டாம் தூதுவன் போகிறான், மனைவியின் மரணம் குறித்துத் தனியே அந்தோனி வருந்துகிறான்). மாபெரும் உயிர் மறைந்து விட்டது! நான் இப்பொழுது நினைக்கிறேன்...... நாம் எதை வெறுத்து இழக்கிறோமோ அது மறைந்ததும் அதனை விரும்புகிறோம். இப்போதைய இன்பம் காலச் சுழற்சியில் துன்பமாக மாறிவிடும். அவள் மிகவும் 'நல்லவள், செத்த காரணத்தால்......' அவளைச் சமாதிக்கு அனுப்பிய கைகள் மீண்டும் அவளைத் தேடுகின்றன. நான் இந்த மாயாஜால அரசியிடமிருந்து விடுதலை

பெற வேண்டும். நான் இங்கே காலத்தை வீணாக்குவதால், நான் அறிந்த தீமைகளை விட ஆயிரக்கணக்கான தீமைகள் உருவாகின்றன. இருக்கட்டும் கவனிப்போம். எனோபார்பஸ்!

(எனோபார்பஸ் திரும்பி வருகிறான்)

எனோபார்பஸ் : தலைவ! தங்கள் விருப்பம் என்னவோ?

அந்தோ : நான் இங்கிருந்து உடனே ரோமுக்கு விரைந்து செல்ல வேண்டும்.

எனோபார்பஸ் : ஏன்...அப்படியானால் நான் நமது பெண்களை எல்லாம் இங்கே கொன்றவர்கள் ஆகிறோம். நமது அன்பற்ற செய்கை அவர்கட்குச் சாவையே நினைவூட்டும். நாம் பிரிந்தால் அவர்கள் சாவையே பற்றித்தான் பேசுவார்கள்.

அந்தோ : நான் போயே தீரவேண்டும்.

எனோபார்பாஸ் : கட்டாயமான சூழ்நிலையில் பெண்கள் செத்தால் சாகட்டும். ஆனால் ஒன்றும் இல்லாததற்காக அவர்களைச் சாகடிப்பது பரிதாபத்திற்குரியதாகும். மாபெரும் காரியத்திற்குக் குறுக்கே அவர்கள் நின்றால் அவர்களை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. கிளியோபாட்ரா தங்கள் பிரிவைப் பற்றிச் சிறிது அறிந்தாலும் அந்த விநாடியே செத்துவிடுவாள். இதை விடச் சிறிய காரியங்களுக்கே அவள் இருபது முறை சாகக் கண்டிருக்கிறேன். சாவில் ஒரு அன்பு இருக்கிறது என்று நினைக்கிறேன். அதனால்தான் சாவு அவளை நோக்கி நேசக்கரம் நீட்டுகிறது. உடனே அவளும் சாவைச் சரணடைகிறாள்.

அந்தோ : அவள் மனித சிந்தனைக்கு அப்பாற்பட்டவள்.

எனோ : இல்லை! தலைவா! அவளது உணர்ச்சிகள் தூய்மையான அன்பைத் தவிர வேறு எதனாலும் உருவாக்கப் படவில்லை. அவளுடைய பெருமூச்சையும் கண்ணீரையும் வெறும் காற்று என்றோ நீர் என்றோ சொல்லிவிட முடியாது. அவை பஞ்சாங்கமும் கணித்துரைக்க முடியாத மாபெரும் புயலும் வெள்ளமும் ஆகும்! அவற்றில் ஒன்றும் சூழ்ச்சி இல்லை. உண்மையைச் சொன்னால் அவள் வர்ணபகவானைப் போலக் கண்ணீர் மழை வடிக்கிறாள்.

அந்தோ : நான் அவளையே பார்க்காமல் இருந்திருந்தால்...

எனோ : ஐயோ! ...ஒரு அழகான கலையுருவையே காணாமல் விட்டிருப்பீர்கள்! உங்கள் பயணமே பொலிவற்றதாகி இருக்கும்!

அந்தோ : புல்வியா இறந்து விட்டாள்!

எனோ : என்ன?

அந்தோ : புல்வியா இறந்து விட்டாள்!

எனோ : புல்வியா......

அந்தோ : இறந்துவிட்டாள்!

எனோ : ஏன் ஐயா! கடவுளுக்கு வணக்கம் செலுத்துங்கள்! தேவதைகள் ஒரு மனிதனின் மனைவியைப் பறித்துக் கொள்கின்ற பொழுது, அவை அவனுக்குத் தையற்காரனை நினைவுபடுத்துகின்றன. பழைய உடைகள் கிழிந்ததும் புதிய உடைகளைத் தைத்துத் தர ஆட்கள் இருக்கிறார்கள். அதுபோல் ஆறுதல் பெற வேண்டும். புல்வியாவைத் தவிர வேறு பெண்களே உலகில் இல்லை என்றால் அப்பொழுது அது உண்மையான இழப்புத்தான், அதற்காக வருந்த வேண்டியதுதான். ஆனால் இப்பொழுது ஏற்பட்டுள்ள துயரம் ஆறுதல் அளிப்பது தானே! உங்களது பழைய சட்டை இப்பொழுது புதிய உடையாக மாறியிருக்கிறது. நீங்கள் கண்ணீர் வடிக்க

விரும்பினால் ஒரு வெங்காயம் போதுமே! ஏன் அனாவசியமாக வருந்துகிறீர்கள்.

அந்தோ: அவள் சாவதற்கு முன் செய்திருக்கும் அரசியல் காரியங்கள் நான் ரோமுக்குச் செல்லாமல் தீரமாட்டா;

ஏனோ: ஆனால் நீங்கள் இங்கே செய்திருக்கும் காரியங்கள் நீங்கள் இல்லாமல் தீர மாட்டா! அதிலும் குறிப்பாக கிளியோபாட்ராவைப் பொறுத்தவரை நீங்கள் இருந்தே தீரவேண்டும்.

அந்தோ: வீண்வாதம் தேவையில்லை....நமது நோக்கம் என்ன என்பதை நமது அதிகாரிகள் அறிந்து கொள்ளட்டும். நமது பிரிவுபற்றிய செய்தியை அரசியிடம் நான் சொல்லி விடை பெறுகிறேன். புல்வியாவின் மரணம் மட்டுமன்று; இன்னும் பல முக்கியமான காரியங்கள் நம்மை ரோமுக்கு அழைக்கின்றன. நமது ரோமானிய நண்பர்கள் பலர் எழுதியிருக்கும் கடிதங்களும் நம்மை விரைந்து அழைக்கின்றன. செக்ஸ்டஸ் பாம்பேயஸ் புரட்சி செய்து சீசருக்கு எதிராகச் சவால் விடுத்து கடலாதிக்கம் செலுத்துகிறான். வாழ்ந்தோருக்கு மாரடிக்கும் நமது உறுதியற்ற மக்கள் அவனுக்குப் பெரும் மரியாதை செலுத்துகின்றனர். அவனது தந்தைக்குரிய பழைய மரியாதைகளை எல்லாம் செய்து தலைவணங்குகின்றனர். அவன் புகழிலும் சக்தியிலும் உச்சத்தில் இருப்பதால் மாபெரும் எதிர்ப்புச் சக்தியாகத் திகழ்கிறான். அவனது தன்மை நமது நாட்டை ஆபத்துக்குரியதாக்குகிறது. இன்னும் பல தீமைகள் உருவாகின்றன. குதிரையின் மயிர் தண்ணீரில் கிடந்தால் எப்படி விஷப்பாம்பாக மாறுகிறதோ அதைப்போல அவனும் கொடிய கடற் கொள்ளைக்காரனாக மாறி இருக்கிறான். ஆகவே நாட்டு நடப்பு நம்மை இங்கிருந்து விரைந்து ஓட்டுகிறது!

ஏனோ: புறப்பட ஆவன செய்கிறேன். (போகிறான்)

## காட்சி—3

இடம் : கிளியோபாட்ராவின் அரண்மனை.
மற்றொரு அறை.

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ், அலெக்சாஸ் ஆகியோர் வருகின்றனர்.]

கிளியோபாட்ரா : அவர் எங்கே?

சார்மியான் : அவரை நான் பார்க்கவில்லை.

கிளியோ : அவர் எங்கே இருக்கிறார்? அவருடன் இருப்பது யார்? அவர் என்ன செய்கிறார்? என்பதை எல்லாம் போய்ப் பார் ... உன்னை நான் அனுப்பியதாகச் சொல்லாதே. அவர் வருத்தமாக இருந்தால் நான் நடமாடுவதாகச் சொல். அவர் மகிழ்ச்சியாக இருந்தால் நான் திடீரென்று நோயால் வாடுவதாகச் சொல். போ. வேகமாகச் சென்று திரும்பி வா...... (அலெக்சாஸ் போகிறான்.)

சார் : தேவி! நீங்கள் அவரை மிகவும் நேசித்தால் அவருடைய நேசத்தைப் பெறுவதற்குத் தகுந்த முறையை நீங்கள் கையாளவில்லை என்று நினைக்கிறேன்.

கிளியோ : நான் என்ன செய்ய வேண்டும்? என்ன செய்யக் கூடாது?

சார்மி : ஒவ்வொரு காரியத்திலும் அவரது உணர்ச்சிக்கு ஏற்ப இணைந்து செல்லுங்கள். எதிலும் எதிர்மாறாக நடவாதீர்கள்.

கிளியோ : போடி முட்டாள்! அவரை இழப்பதற்கு உரிய வழிகளை முட்டாளைப்போலப் போதிக்கிறாய்.

சார்மி : அதிகமாக அவருக்கு உணர்ச்சி ஊட்டாதீர்கள். அவருக்கு எதிர்மாறான செய்கைகளில் எல்லை கடந்து செல்லாதீர்கள். நாம் எதற்கு அடிக்கடி அஞ்சுகிறோமோ அதைச் சில சமயத்தில் வெறுக்கவும் நேரும். ஆகவே விழிப்புடன் இருங்கள்... ஆனால்... இதோ அந்தோனி வருகிறார்......

[அந்தோனி வருகிறான்.]

கிளியோ : (நடித்தல்) எனக்கு நோயும் வலியும் வேதனை தருகின்றன.

அந்தோனி : எனது நோக்கத்தைப் பற்றி நான் பேசத் தொடங்குவதற்காக வருந்துகிறேன்.

கிளியோ : (அந்தோனியைக் கவனிக்காமல்) அன்பான சார்மியான்! எனக்கு உதவி செய்! நான் விழப் போகிறேன்! இப்படி நீண்ட நேரம் என்னால் இருக்க முடியாது! என்னால் இனி எதையும் தாங்க முடியாது.

அந்தோ : அன்பான அரசியே!

கிளியோ : உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். சற்று விலகி நில்லுங்கள்.

அந்தோ : என்ன காரணம்?

கிளியோ : நான் அறிகிறேன்...ஏதோ நல்ல செய்தி காத்திருக்கிறது என்பதை உங்களது கண்கள் காட்டுகின்றன. உங்கள் மனைவி என்ன சொல்கிறாள்? நீங்கள் போகலாம். நீங்கள் திரும்பி வரவே அவளது அனுமதி கிடையாதா? உங்களை இங்கே நிறுத்தி வைத்திருப்பது நான்தான் என்று அவள் சொல்ல முடியாது. உங்கள்மீது

எனக்கு யாதொரு ஆதிக்கமும் கிடையாது. நீங்கள் அவளுடையவர்!

அந்தோ : கடவுளுக்கு நன்றாகத் தெரியும்—

கிளியோ : ஓ! இப்படித் துரோகமிழைக்கப்பட்ட அரசி என்னைப்போல் எவளுமில்லை! ஆரம்பத்திலேயே துரோகம் விதைக்கப்பட்டதை நான் அறிவேன்.

அந்தோ : கிளியோபாட்ரா!

கிளியோ : நீங்கள் என்னுடையவர் என்றும், உண்மையானவர் என்றும் நான் ஏன் நினைக்க வேண்டும்? நீங்கள் புல்வியாவுக்குத் துரோகம் செய்து ஏற்கெனவே கடவுளை ஏமாற்றியிருக்கிறீர்கள். வெறும் வாய் உறுதி மொழிகளை நம்புவது பைத்தியக்காரத்தனம்!

அந்தோ : மிக இனிய அரசியே!

கிளியோ : இல்லை...உங்களை வேண்டுகிறேன். நீங்கள் போக விரும்பினால் வீண் காரணங்களைத் தேட வேண்டாம். போகிறேன் என்று சொல்லி விட்டுப் போங்கள். இல்லை, தங்க விரும்பினால் பேசுங்கள். பிறகு போக முடியாது."சொர்க்கமே எனது இதழிலும், விழியிலும் இருக்கிறது! வான இன்பமே எனது புருவ வளைவில் இருக்கிறது! எனது அழகின் சாதாரண அங்கமும் தெய்வீக சக்தி பெற்றிருக்கிறது'' என்றெல்லாம் முன்பு வர்ணித்தீர்கள். அவை இன்னும் இருக்கின்றன. ஆனால் நீங்களோ......உலகத்தின் மிகப் பெரிய மாவீரர் இன்று மாபெரும் பொய்யராக மாறி இருக்கிறார்.

அந்தோ : எப்படி...தேவி!

இனியோ : நானும் உங்களைப் போல் உடலமைப்பில் இருக்க விரும்புகிறேன். எகிப்தில் உங்களுக்காக ஒரு இதயம் இருக்கிறது என்பதை நீங்கள் உணர்ந்தால் போதும்...

அந்தோ : அரசி! கேள். காலத்தின் தேவையானது என்னை வரும்படிக் கட்டளையிடுகிறது. ஆனால் எனது முழு இதயமும் இங்கே உனது முழு உபயோகத்தில்தான் இருக்கிறது. நமது இத்தாலியில் உள்நாட்டுக் குழப்பம் உருவாகியிருக்கிறது. செக்ஸ்டஸ் பாம்பேயஸ் ரோமாபுரித் துறைமுகத்தை நோக்கி ஏறுநடை போடுகிறான். சமமான இரண்டு உள்நாட்டு சக்திகள் தேவையற்ற பிளவுகளை உண்டாக்குகின்றன. வெறுக்கப்பட்டவர்கள் பலம் பெறுகின்றபொழுது புதிதாக நேசிக்கப்படுகிறார்கள். புறக்கணிக்கப்பட்ட பாம்பே தனது தந்தையின் மரியாதைகளைப் பெற்று மக்களால் நேசிக்கப்படுகிறான். (பாம்பேயின் தந்தையார் தனக்குரிய ஜமீன், பட்டம், பதவி, செல்வம் அனைத்தையும் புரட்சியால் இழந்தவர்) அவனுக்குக் கிடைத்திருக்கும் ஆதரவு அஞ்சத்தக்கது. ஒரு மனிதனின் ஓய்வு, நோயைத் தருவதைப் போல, தாய்நாட்டின் அமைதி உள்நாட்டுக் குழப்பத்தைத் தருகிறது. நான் போவதற்கு மற்றொரு தனிப்பட்ட காரணம் புல்வியாவின் மரணமாகும்!

இனியோ : என் வயது என் மனக்குழப்பத்தை நீக்காவிட்டாலும், குழந்தைத் தன்மையை நீக்கிவிட்டது. என்னை ஏமாற்ற முடியாது. புல்வியா சாக முடியுமா?

அந்தோ : என் அரசியே! அவள் இறந்துவிட்டாள்... இங்கே பார்...உனக்கு ஓய்வு கிடைக்கும் பொழுது.

அவன் நடத்திய போர்களைப் பற்றிப் படித்துப் பார். இறுதியில் சிறப்பாக அவன் எப்பொழுது எங்கே இறந்தான் என்பதையும் தெரிந்து கொள்.

கிளியோ : (நடிப்பாக) மகத்தான போலி அன்பு! அவள் இறந்தாள் என்றால் தாங்கள் வடித்த கண்ணீரால் நிறைந்த கிண்ணம் எங்கே? இதிலிருந்து எனக்கு நன்றாகத் தெரிகிறது. தெரிகிறது...என் சாவை எப்படி ஏற்றுக் கொள்வீர்கள் என்பது புல்வியாவின் சாவை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் விதத்திலிருந்து நன்கு தெரிகிறது.

அந்தோ : மேலும் சண்டை செய்யாதே. நான் செல்வதன் நோக்கத்தைத் தெரிந்து கொள். உன் ஆலோசனையைப் பொறுத்து என் திட்டம் நிறைவேறும்; அல்லது கைவிடப்படும். நைல்நதி பொன்கொழிக்கும் நன்னிலத்தில் ஒளிவீசும் ஞாயிற்றின் பேரால் ஆணையிட்டுக் கூறுகிறேன். நான் இங்கிருந்து உனது வீரனாக, வேலையாளாகச் செல்கிறேன். உன் விருப்பப்படி சண்டையோ சமாதானமோ செய்து வருவேன்.

கிளியோ : (வியாதி குணமானதுபோல் நடிக்கிறாள்) சார்மியான்! வா! இந்தக் கட்டை அவிழ்..வேண்டாம்... அப்படியே இருக்கட்டும். அந்தோனியின் அன்புக்கேற்ப என் வியாதி நிறைவதும் குறைவதுமாக இருக்கிறது.

அந்தோ : என் விலைமதிப்பற்ற அரசியே! என் அன்பைச் சோதிக்க உண்மையான ஒரு வாய்ப்பைக் கொடு. என் அன்பு சோதனையைக் கடந்து நிற்கும்.

கிளியோ : அப்படித்தான் புல்வியா என்னிடம் சொல்லி இருக்கிறாள். உங்களை நான் வேண்டிக் கொள்கிறேன். முகத்தைத் திருப்பிக் கொண்டு அவளுக்காகச் சிறிது அழுங்கள். பிறகு அந்தக் கண்ணீரைக் காட்டி அவை என் பிரிவுக்காகச் சிந்தப்பட்டன என்று நடித்து விடை பெறுங்கள். தங்கள் ஏமாற்று வித்தைக்கு ஒரு சிறந்த உதாரணத்தைக் காட்டுங்கள்: பிறகு அதைத் தங்களது சீரிய பண்புக்கு உறைகல்லாகக் கூறுங்கள்.

அந்தோ : (கோபமாக) நீ என் கோபத்தைத் தூண்டு கிறாய். வேறொன்றுமில்லை.

கிளியோ : நீங்கள் இன்னும் சிறப்பாக நடிக்கலாம். ஆனால் இதுவே பொருந்தும்.

அந்தோ : இப்பொழுது...என் வீரவாளின் பேரால்...

கிளியோ : கவசத்தின் பேராலும் ஆணையிடுங்கள்...... இப்பொழுது இவர் நடிப்பு நன்றாயிருக்கிறது. சார்மி யான்! நன்றாகப் பார்...இந்த நடிப்பு உச்சகட்டம் என்று சொல்ல முடியாது. இந்த ஹெர்க்குலிய ரோமன் கோபத்தின் உருவமாகவே ஆகிவிட்டார்.

அந்தோ : தேவி! உன்னை நான் பிரிந்து செல்கிறேன்.

கிளியோ : மாண்புமிக்க பிரபு! ஒரே ஒரு வார்த்தை. நீங்களும் நானும் பிரியவேண்டும். ஆனால் நான் சொல்ல வந்தது அது அன்று. நீங்களும் நானும் நேசித் தோம். ஆனால் என் செய்தி அதுவுமன்று. நீங்களே அதை நன்கு அறிவீர்கள். உண்மையிலேயே இன்றி யமையாத ஒன்றை நான் சொல்ல விரும்புகிறேன்... ஐயோ! என்நினைவாற்றலும் என் அந்தோனிபோலவே

துரோகம் செய்து என்னைக் கைவிடுகிறதே...நான் மறந்துவிட்டேன்.

அந்தோ : தேவி! சிலேடையாகப் பேசி நேரத்தை வீணாக்கு கிறாய்.

கிளியோ : நீங்கள் எளிதாக நினைப்பதுபோல் என் மன உணர்ச்சிகளைப் பொறுத்துக் கொள்வது அவ்வளவு சுலபமல்ல. ஆனால், பிரபு! என்னை மன்னித்து விடுங்கள். உங்கள் மனத்தை மகிழ்விக்காவிட்டால் என் உணர்ச்சிகள் என்னைக் கொல்கின்றன. உங்கள் கவுரவம் உங்களை அழைக்கிறது. ஆகவே என் சலனங் களுக்கு நீங்கள் செவி சாய்க்காதீர்கள். எல்லாக் கடவு ளரும் உங்களோடு துணைக்கு வரட்டும்! உங்கள் வீரவாளில் வெற்றி தழைக்கட்டும்! நீங்கள் செல்லும் பாதையில் எல்லாம் வெற்றிகள் உங்கள் காலடியில் சரணாகதி அடையட்டும்!

அந்தோ : நாம் போகலாம் வா...நாம் தற்காலிகமாகவே பிரிகிறோம். நீ இங்கே இருந்தாலும் என்னுடன் போர்க்களத்திற்கு வருகிறாய். நான் இங்கிருந்து சென்றாலும் உன்னுடனேயே இருக்கிறேன். வருகிறேன், வணக்கம்.

(செல்கிறான்)

## காட்சி—4

இடம் : ரோம்—சீசரின் அரண்மனை

[ஆக்டேவியஸ் சீசர் கடிதம் ஒன்றைப் படித்தவாறு வருகிறார். ரோமப் பேரரசை ஆளும் ''மூவர் குழுவில்'' முதல்வராக இருந்து நாட்டை ஆள் பவரே ஆக்டேவியஸ் சீசர். ''மூவர் குழுவின்" மூன்றாவது உறுப்பினரான லெப்பிடஸ் பிரபு பின் தொடர்ந்து வருகிறார். அவரைத் தொடர்ந்து பலர் வருகின்றனர்.]

சீசர் : லெப்பிடஸ்...நன்றாகத் தெரிந்து கொள்ளுங்கள். நமது மாபெரும் போட்டியாளரான அந்தோனியை வெறுப்பது நமது இயற்கைப் பண்பன்று. அலெக் சாண்டிரியாவிலிருந்து வந்துள்ள செய்தி இதுதான். அவர் மீன் பிடிக்கிறார். குடிக்கிறார். களியாட்டங் களில் காலத்தை வீணடிக்கிறார். கிளியோபாட்ராவை விட மோசமாக, ஆண்மையற்றவராக நடந்து கொள் கிறார். அவளும் நாணமுடைய பெண்ணாக நடந்து கொள்ளவில்லை. நமது தூதர்களுக்கு அவர் காட்சிக்கு எளியராகவோ, "மூவர் குழுவில்" ஒருவர் என்ற எண்ண முடையவராகவோ நடந்து கொள்ளவில்லை. சுருங்கச் சொன்னால் மனிதக்குற்றங்களின் மாபெரும் மொத்தச் சின்னமாக நடக்கும் ஒரு மனிதரைத்தான் நாம் அங்கே காண்கிறோம்.

லெப்பிடஸ் : அவருடைய எல்லாக் குணங்களையும் மறைக் கின்ற அளவுக்குஅவருடைய குறைகள் இருப்பதாக நான் நினைக்கவில்லை. அவரது குறைகள் சந்திரனில் தெரியும் களங்கம்போலத் தெரிகின்றன. சந்திரனின் களங்கம் தெரிவதற்குக் காரணம் இரவின் கருமையே ஆகும். அது போல் அவரது குற்றம் தெரிவதற்குக் காரணம் அவரது

குணங்களே ஆகும். அவருக்கு உரிய குறைகள் பரம்பரை யாக வந்தனவே ஒழியத் தானாக அடைந்தன அல்ல. தான் மாற்ற முடியாததை அவர் ஏற்கிறார்.

சீசர் : நீ மிகவும் கருணையுள்ளவன். போகட்டும், போகட்டும். அந்தோனி கிளியோபாட்ராவுக்கு அடிமை ஆனதிலே தவறில்லை என்றே வைத்துக் கொள்வோம். ஆனால் களிப்புக்காக நாட்டையே கொடுத்து விடுவதா? அடிமைகளோடு குடித்துக் கூத்தாடுவதா? இரவிலே வீதிகளில் அலைவதா? கண்டவர்களோடு விருந் துண்பதா? இப்படியாக அவன் மாறியிருக்கிறான். அவனுடைய தரம் என்ன? குற்றங்களின் கூடாரமாக அவன் இருக்கலாமா? அவனுடைய காமக் களியாட்டம் மன்னிக்க முடியாதது. அவனுடைய பாரத்தையும் சேர்த்து நாம் தாங்க முடியுமா? அவன் தன் நேரத்தை யெல்லாம் காதலுக்கு இரையாக்கினால், அதன் உச்ச கட்டமே அவனுக்கு உரிய தண்டனை ஆகிவிடும். ஆனால் நாட்டின் அரசியல் சூழ்நிலை அவனது களியாட்டத்தை நிறுத்த எச்சரிக்கை முரசு கொட்டு கிறது. நமது நிலைமையை அது தெளிவாக எடுத்துச் சொல் கிறது. "அறிவு தெளிந்த நீ அனுபவத்தை மீறி நிலை மற்ற இன்பத்தில் ஈடுபடலாமா?'' என்று சவால் விடுகிறது.

(தூதுவன் ஒருவன் வருகிறான்)

லெப்பிடஸ் : இதோ—மேலும் செய்தி வருகிறது.

தூதன் : தங்கள் ஆணையை நிறைவேற்றி விட்டேன். மதிப்பு மிக்க சீசர் அவர்களே! போர் நிலை எப்படி இருக்கிறது என்பதைப் பற்றி ஒவ்வொரு மணியும் தங்கட்குச் செய்தி வரும். பாம்பே கடலில் பேராதிக்கம்

செலுத்துகிறான். சீசருக்கு அஞ்சியவர்கள் எல்லாம் அவனை ஆதரிப்பதுபோல் தெரிகிறது. அதிருப்தி அடைந்தவர்கள் எல்லாம் துறைமுகத்துக்கு ஓடி அவன் பக்கம் சேருகிறார்கள். துபரத்துக்கு ஆளான ஒருவனை பற்றிப் பேசுவதைப்போல மக்கள் அவனைப் பற்றிப் பேசுகிறார்கள்.

சீசர் : நான் குறைவின்றித் தெரிந்து கொள்ள வேண்டும். ஒருவன் அதிகாரத்திற்கு வந்ததும் செல்வாக்கு இழக்கின்றான் என்பது பாலபாடம்! உயர்ந்த மனிதன் மரணத்திற்குப் பிறகுதான் பெரிதும் நேசிக்கப்படுகிறான். இந்தப் பொதுமக்கள், நீரோட்டத்தில் இங்கும் அங்கும் அடித்துச் செல்லப்பட்டு நைந்து மறையும் கடற்பாசிக்கொடி போன்றவர்கள்.

தூதன் : சீசர் அவர்களே! மற்றொரு முக்கியமான செய்தி! மெனக்ரேட்ஸ், மெனஸ், என்னும் கடற்கொள்ளைக்காரர் இருவரும் கடலைத் தம் ஆதிக்கத்தில் வைத்துள்ளனர். கப்பலைக் கொண்டு கடலை உழுகின்றனர். இத்தாலிக்குள் பல சூடான தாக்குதல்களை நிகழ்த்துகின்றனர். கடற்கரையில் வாழும் மக்கள் தாக்குதலைப் பற்றிக் கேட்டதுமே அஞ்சிச் சாகின்றனர். அந்தக் கடற்கொள்ளையரை எந்தக் கப்பலும் ஊடுருவிச் செல்ல முடியவில்லை. அவர்கள் பிற கப்பல்களைக் கண்டதுமே பிடித்து விடுகின்றனர். பாம்பேயின் காட்சியும் சண்டையும் அச்சுறுத்துவதை விட அவனது பெயரே பேரச்சத்தை விளைவிக்கிறது!

சீசர் : (கவலையுடன்) அந்தோனியோ! உன் மோகத்தை விட்டுவிடு. முன்னொருநாள்...ஹிரிஷியஸ், பான்சா முதலிய வீரர்களை நீ வீழ்த்திய காலத்தில் "மாடனா"

போர்க்களத்தில் நீ தோற்கடிக்கப்பட்டு ஓடியபொழுது, உன்னைத் தொடர்ந்து பெரிய பஞ்சமே வந்தது. செல்வத்தில் நீ வளர்ந்தபோதும் வறுமையை எதிர்த்துச் செம்மையாகப் போராடினாய். காட்டுமிராண்டிகளும் தாங்க முடியாத துன்பத்தைப் பொறுமையோடு தாங்கினாய். மிருகங்களும் வெறுக்கின்ற சேற்று நீரையும், குதிரைச் சிறுநீரையும் குடித்தாய். முள்வேலியில் முளைத்துக் கிடந்த காய்கனிகளைத் தின்றாய். போர்வையைப்போலப் பனிமூடிக் கிடந்த புல்வெளியிலும், மரக்கிளையிலும் மானைப்போலப் பறவைபோலப் படுத்துக் கிடந்தாய். ஆல்ப்ஸ் மலையில் ஒரு சமயத்தில் ஏதோ ஒரு மாமிசத்தைத் தின்றாய். ஆனால் அதை கண்ட சிலர் காணச் சகிக்காது செத்தனர். இவையெல்லாம் உன் பெருமையின் சின்னங்கள்! நீ தொடர்ந்து வந்த துன்பம் அனைத்தையும் வீரனுக்கு உரிய முறையில் பொறுத்துக் கொண்டாய். இப்பொழுது உன் பழம் புகழைப் பேசுவதே பாவம்!

லெப்பிடஸ் : அவன் நிலை பரிதாபத்துக்குரியது.

சீசர் : அவனது குற்றங்கள் அவனை ரோமுக்கு விரைந்து விரட்டட்டும். பாம்பேக்கு எதிராக நாம் இருவரும் போர்க்களத்தில் நம் வீரத்தைக் காட்ட வேண்டிய சமயம் இது! அதற்குரிய ஆலோசனைகளை உடனே செய்வோம். பாம்பே நம் சோம்பேறித்தனத்தால் வளர்கிறான்.

லெப்பிடஸ் : சீசர்! நிலத்திலும், நீரிலும் அவனைத் தற்சமயம் சமாளிப்பது பற்றிய விரிவான செய்திகளை நாளை உங்கட்கு அறிவிக்கிறேன்.

சீசர் : நானும் அவனது படைநிலை பற்றி அதுவரை ஆலோசிக்கிறேன். வணக்கம்.

லெப்பிடஸ் ; பிரபு! வணக்கம்! இதற்கிடையில் போர் பற்றிய வேறு செய்திகள் தங்கட்குக் கிடைப்பின் எனக்கும் தெரிவியுங்கள்.

சீசர் : ஐயப்பட வேண்டாம். அது பற்றித் தங்கட்குத் தெரிவிப்பது என் கடமை, வருகிறேன்.

(போகிறான்)

## காட்சி—5

இடம் : அலெக்சாண்டிரியா—கிளியோபாட்ராவின் அரண்மனை.

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ், மார்டியான் ஆகியோர் வருகின்றனர்.]

கிளியோ : சார்மியான்!

சார்மியான் : தேவி!

கிளியோ : ஆ! ஆ! எனக்குத் தூக்க மருந்து கொடு!

சார்மியான் : எதற்கு தேவி!

கிளியோ ; எனது அந்தோனி பிரிந்திருக்கும் இந்த இடைக் காலத்தைத் தூங்கியே கழிப்பதற்குத்தான்.

சார்மியான் : நீங்கள் அவரைப் பற்றி அதிகமாக நினைக்கிறீர்கள்.

கிளியோ : ஓ! அது குற்றமா?

சார்மியான் : இல்லை, தேவி!

கிளியோ : ஏ அலி... மார்டியான்!

மார்டியா : அரசியே! தங்கள் விருப்பம் யாது?

கிளியோ : உன் பாட்டை நான் இப்பொழுது கேட்க வில்லை. ஓ சார்மியான்! அவர் இப்பொழுது எங்கிருப்பார் என்று எண்ணுகிறாய்? அவர் உட்கார்ந் திருப்பாரா? அல்லது நிற்பாரா? அவர் நடப்பாரா? அல்லது குதிரைமேல் செல்வாரா? ஓ! மகிழ்ச்சி மிக்க குதிரையே! அந்தோனியைத் தாங்கும் பேறு உனக்கும் கிடைத்திருக்கிறது. செய், வீரமிக்க குதிரையே! நீ யாரைத் தாங்குகிறாய் என்பது உனக்குத் தெரியுமா?

பூமியின் பாதிப்பாரத்தைத் தாங்குபவன், தாக்குதலி லும், தற்காப்பிலும் இணையற்றவனாகவும், கவசமாக வும் விளங்குபவன் ஆகிய அந்தோனியைத் தாங்கு கிறாய். அவர் இப்பொழுது பேசிக் கொண்டிருப்பாரா? அல்லது முணுமுணுப்பாரா? “பழைய நைல் நதியின் எனது பாம்பழகி எங்கே?” என்று என்னைப் பற்றி அழைப்பாரா! இன்ப நினைவுகளாகிய இனிய நஞ்சினை நான் இப்பொழுது குடிக்கிறேன். ஞாயிற்றின் நேசக் கரங்களால் நான் கருநிறமாக விளங்குகிறேன். காலத் தின் சுழற்சியால் சுருக்கங்கள் பெற்றுள்ளேன் என்று நினைக்கிறாரா? பரந்த தலையுடைய ஜூலியஸ் சீசர் இந்நாட்டிற்கு வந்த பொழுது நான் அம்மாபெரும் மன்னருக்கு உரிய காதலியாக விளங்கினேன். இனி பாம்பே வந்தாலும் அவனும் என்னையே உற்று நோக்கு வான். உயிரையும் விடத் தயாராக இருப்பான்.

(அந்தோனியை அனுப்பச் சென்ற அலெக்சாஸ் வருகிறான்)

அலெக்சாஸ் : எகிப்தியப் பேரரசி! வணக்கம்!

கிளியோ : அந்தோனி எப்படியிருக்கிறார்? நீ அவரிட மிருந்து வருவதால் அந்தத் தங்கத்தின் மெருகு உன்னிடமும் தங்கியிருக்கிறது. என்னுடைய மாவீரன் அந்தோனி எவ்வாறு நடந்து கொண்டார்?

அலெக்சாஸ்: அன்பான அரசியே! அவர் என்னிடம் விடைபெறுமுன் செய்த கடைசிச் செய்கை என்ன வென்றால்... இந்தக் கீழ்த்திசை முத்தைப் பன்முறை முத்தமிட்டார். (ஒரு விலையுயர்ந்த முத்தைக் காட்டுகிறான்) அப்பொழுது அவர் மொழிந்த அவருடைய பேச்சு என் நெஞ்சில் பதிந்திருக்கிறது.

கிளியோ: அப்படியானால் என் காதுகள் அவற்றை அங்கிருந்து பறிக்க விரும்புகின்றன.

அலெக்சாஸ்: அந்தோனி புறப்படுமுன் என்னிடம் சொல்லியதாவது,— "இனிய நண்பா! நீ போய்ச் சொல்... உறுதி வாய்ந்த ரோமன், எகிப்திய அரசிக்கு இந்த விலைமதிப்பற்ற முத்தை அளிக்கிறான். அவளுடைய காலடியில் பல நாடுகளைப் பரிசாக வைக்கிறான். கீழ்த்திசை முழுதும் அவளைத் தன் தலைவியாக அழைக்கும்" என்று சொல்லித் தலையை அசைத்தான். பிறகு தன் சக்திவாய்ந்த குதிரைமீது தாவினான். உடனே குதிரை பெரிதாகக் கனைத்தது. அதன் ஒலியில் என் பதில் மூழ்கிவிட்டது.

கிளியோ: சொல். அவர் வருத்தமாயிருந்தாரா? அல்லது மகிழ்ச்சியாய் இருந்தாரா?

அலெக்சாஸ்: அதிகக் குளிரும் அதிக வெப்பமும் இல்லாத இடைக் காலத்தைப்போல அவரும் வருத்தமும் மகிழ்ச்சியும் இல்லாமல் இருந்தார்.

கிளியோ: ஓ! சரியான நிலைமை! சார்மியான் யோசித்துப் பார்... அவர்தான் சரியான மனிதர்... அவர் வருத்தமாக இல்லை. அதற்குக் காரணம் அவருடைய வீரர்கள் வருத்தப்படக் கூடாது என்பதற்காக. அவர் மகிழ்ச்சியாக இல்லை. அதற்குக் காரணம் அவரது நினைவு எகிப்தில் இருக்கிறது என்பதற்காக. இரண்டுக்கும் இடையில் தெய்வீகமான மனநிலை! அவர் மகிழ்ச்சியாக இருந்தாலும், வருத்தமாக இருந்தாலும் அவரது பண்பு அதில் பிரதிபலிக்கும்! வேறு எந்த மனிதராலும் அவ்வாறு செய்ய முடியாது. அலெக்சாஸ்! எனது தூதுவர்களை நீ சந்தித்தாயா?

அலெக்சாஸ்: ஆம் தேவி! இருபது விதமான தூதுவர்களைச் சந்தித்தேன். எதற்காக அத்தனை பேர்களை அனுப்பினீர்கள்?

கிளியோ: நான் அந்தோனிக்குத் தூதர்களை அனுப்ப மறந்த நாளில் பிறந்த மனிதன் பிச்சைக்காரனாகச்

சாகட்டும்!...சார்மியான்!... தாளும் மையும் கொண்டு வா... எனது இனிய அலெக்சாஸ்! உனக்கு நல்வரவு... சார்மியான்! நான் ஜூலியஸ் சீசரை எப்பொழுதாவது இப்படி நேசித்திருக்கிறேனா?

சார்மியான்: ஓ! அந்த மாவீரன் சீசரையா?

கிளியோ: இனி ஒரு முறை நீ சீசரை அப்படிப் பெருமையாக அழைத்தால் உன் கழுத்தைத் திருகிக் கொன்று விடுவேன். மாவீரன் அந்தோனி என்று சொல்...

சார்மியான்: விரமிக்க சீசர்...

கிளியோ: (கோபமாக) ஐசிஸ் பேரால் சொல்கிறேன். எனது மனிதகுல திலகத்தைச் சீசரோடு இனி நீ ஒப்பிட்டால் உன் பல்லை உடைத்து விடுவேன்.

சார்மியான்: அரசி! என்னை மன்னித்து விடுங்கள். ஒரு காலத்தில் நீங்கள் சீசரைப் பற்றி எந்த வார்த்தைகளால் புகழ்ந்தீர்களோ அந்த வார்த்தைகளை இப்பொழுது நான் பின்பாட்டாகப் பாடினேன். அவ்வளவு தான்.

கிளியோ: அது பழங்காலம். அப்பொழுது நான் சிறுமி! பக்குவமடையாத உள்ளம், சூடேறாத இரத்தம்! முதிர்ச்சியடையாத முடிபுகள்! அனுபவமில்லாததால் சீசரை நான் அப்படிப் புகழ்ந்திருப்பேன்... ஆனால் இப்பொழுது என் நிலைமை வேறு......போ போ...... தாளும் மையும் கொண்டுவா......அந்தோனி ஒவ்வொரு நாளும் என்னிடம் இருந்து பல தூதுவர்களைப் பெறுவார். அதற்கரக நான் எகிப்தையே காலி செய்தாலும் சரி, எல்லோரையும் தூதுவர்களாக அனுப்பினாலும் சரி...நான் கவலைப்படப் போவதில்லை.

(செல்கிறாள்)

# களம் 2 காட்சி 1

இடம்: மெசீனா. புரட்சிக்காரன்
பாம்பேயின் அரண்மனை

[புரட்சிக்காரனான பாம்பே, கடற்கொள்ளைக்காரர்களான மெனக்ரேட்ஸ், மெனஸ் ஆகியோர் போர் உடையில் தோன்றுகின்றனர். இவர்கள் ஆக்டேவியஸ் சீசரின் ஆட்சியை எதிர்த்துக் கடற்புரட்சி செய்பவர்கள்]

பாம்பே: கடவுளர்கள் நியாயவான்களாக இருந்தால் நியாயமாக நடப்பவர்களுக்குத்தான் துணை புரிவர்!

மெனக்ரேட்ஸ்: தகுதிமிக்க பாம்பே! தெரிந்துகொள்ளுங்கள். கடவுளர்கள் நம் பிரார்த்தனைக்குச் செவிசாய்க்கத் தாமதமாகிறது என்பதற்காக அவர்கள் நம் வேண்டுகோளை மறுக்கிறார்கள் என்று அர்த்தமன்று.

பாம்பே: நாம் இன்னும் கடவுளர்களுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பதால், நாம் எதற்காகப் பிரார்த்தனை செய்கிறோமோ அது தன் மதிப்பை இழந்து வருகிறது. நம் பிரார்த்தனைக்குப் பலன் உடனே கிடைக்காவிட்டால் அது தன் மதிப்பு முழுவதையுமே இழந்து விடுகிறது.

மெனக்ரேட்ஸ்: நாம் அறியாதவர்களாக இருப்பதால் சில சமயம் நம் அழிவுக்கே கூடப் பிரார்த்தனை செய்கிறோம். ஆனால் கடவுளர்கள் நம் நன்மைக்காகவே அந்தப் பிரார்த்தனையை ஏற்க மறுக்கிறார்கள். அதனால் நாம் பிரார்த்தனைப் பலனை இழந்தாலும் இலாபமே பெறுகிறோம்.

பாம்பே : இனிமேல் எனக்கு ஏற்றம்தான்...மக்கள் என்னை நேசிக்கிறார்கள். கடல் என் கைக்குள் இருக்கிறது. எனது சக்தி வளர்கிறது. அது முழுமை அடையும் என்று என் நம்பிக்கை கூறுகிறது. எகிப்தில் அந்தோனி விருந்தில் மூழ்கியிருக்கிறான். எகிப்துக்கு வெளியே இனி அவன் போருக்கு வரமாட்டான். ஆக்டேவியஸ் சீசர் மக்களிடமிருந்து வரி வசூலிக்கிறான்; ஆகவே அவர்களின் இதயத்தை இழந்து வருகிறான். லெப்பிடஸ், சீசரையும் அந்தோனியையும் புகழ்பாடு கிறான். அவர்கள் அவனைப் புகழ்பாடுகின்றனர். ஆனால் அவன் அவர்களையோ, அவர்கள் அவனையோ மனமார விரும்பவில்லை.

மெனஸ் : சீசரும் லெப்பிடசும் போர்க்களத்துக்கு வந்துள்ளனர். அவர்களிடம் ஒரு மாபெரும் படை இருக்கிறது.

பாம்பே : இது பொய்...உனக்கு எப்படி இந்தச் செய்தி கிடைத்தது?

மெனஸ் : சில்வியசிடமிருந்து கிடைத்தது—

பாம்பே : அவன் கனவு காண்கிறான்...சீசரும் லெப்பிடசும் அந்தோனியை எதிர்பார்த்து ரோமில் காத்திருக்கிறார் கள். ஆனால் அந்தோனியோ... பேரழகி கிளியோ பாட்ராவின் இதழ் இன்பத்தில் மூழ்கிக் கிடக்கிறான். அவன் அப்படியே கிடக்கட்டும்! அவளுடைய அழகோடும், காதலோடும், மந்திர சக்தியும் சேர்ந்து கொண்டு அவனை மயக்கட்டும்! விருந்துகளில் அவன் திளைக்கட்டும்; அவனுடைய மூளை மதுவில் மயங் கட்டும். சிறந்த சமையல்காரர்கள் தெவிட்டாத உணவு களை அவனுக்குப் படைக்கட்டும்! அந்த உணவு ம்

உறக்கமும் அவனது மரியாதைகளைப் போக்கி மயக்கத்தில் ஆழ்த்தட்டும்!

(வேரியஸ் வருகிறான்)

பாம்பே : வேரியஸ்! என்ன செய்தி கொண்டு வந்திருக்கிறாய்?

வேரியஸ் : நான் சொல்லப் போகும் செய்தி உறுதியானது. அந்தோனி ரோமில் எந்த நேரமும் எதிர்பார்க்கப் படுகிறான். அவன் எகிப்தை விட்டுப் புறப்பட்டுவிட்டதால் இதற்குள் நெடுந்தொலைவு கடந்து வந்திருப்பான்.

பாம்பே : இதைவிடச் சிறிய செய்தியை என் செவிகள் மகிழ்ச்சியுடன் ஏற்றிருக்கும்...மெனஸ்!...இந்தக் காம வீரன் அந்தோனி இது போன்ற ஒரு சிறிய போருக்குத் தன் கவசத்தை அணிவான் என்று நான் கருதவில்லை. சீசர், லெப்பிடஸ் ஆகிய இருவரையும்விட அவன் இரு மடங்கு சிறந்த வீரன்! நமது புரட்சியானது எகிப்திய விதவை கிளியோபாட்ராவின் மடியிலிருந்து, காமவீரன் அந்தோனியைப் பறித்து வந்திருக்கிறது என்பதற்காக நாம் பெருமைப்படலாம்.

மெனஸ் : சீசரும் அந்தோனியும் ஒருவரை ஒருவர் அன்பாக வரவேற்பார்கள் என்று நான் நம்பவில்லை. அந்தோனியின் இறந்த மனைவி புல்வியா சீசருக்குத் தீங்கு விளைவித்தாள். அவனுடைய சகோதரன், சீசருடன் போர் தொடுத்தான். ஆனால் அந்தப் போரை அந்தோனி ஆதரிக்கவில்லை.

பாம்பே : மெனஸ்! அவர்கள் அனைவருக்கும் எதிராக நாம் நிற்காவிட்டால் அவர்களது சிறிய குரோதங்கள் பெரிய பிரிவுகளுக்கு இடம் கொடுக்கும்! ஆனால்

இப்பொழுது அவர்கள் தமக்குள் ஒன்றுபட வேண்டிய முதிர்ந்த கட்டம்! அவர்கள் தமது கத்தியை இணைந்து ஏந்த வேண்டிய வேளை இது! அதற்குத் தக்க காரணமும் இருக்கிறது. ஆனால் நம்மைப் பற்றிய அச்சம் அவர்களை எப்படி இணைத்து, அவர்களது கீழ்மையான பிளவுகளைப் போக்கும் என்பது புலப்பட வில்லை. கடவுள் சித்தம் போல் நடக்கட்டும்! நாம் நமது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால் நமது முழு ஆற்றலையும் பயன்படுத்த வேண்டும். வா, மெனஸ்.

(போகிறான்)

## காட்சி—2

இடம் : ரோம். லெப்பிடஸ் அரண்மனை

[கோபமாக உள்ள அந்தோனியும் சீசரும் சந்திக்கும் காட்சி. எனோபார்பஸ், லெப்பிடஸ் இருவரும் வருகின்றனர்.]

லெப்பிடஸ் : நல்ல எனோபார்பஸ்! உனது தலைவனை நீ மன்றாடி மென்மையாகவும் நாகரிகமாகவும் பேசும்படி செய்தால் அது சிறந்த சேவையாகும். உனக்குப் பெருமையாகும்.

எனோ : நான் அவரை மன்றாடி அவருக்கேற்ப முதலில் உரையாட வைக்கிறேன். ஆனால் சீசர் அவருக்குச் சினமூட்டினால் அவர் சீசரை நோக்கிப் போர்த் தேவதை போல் முழங்குவார். ஜூபிடரின் பேரால் சொல்கிறேன், நான் அந்தோனியாக இருந்தால் சீசரைச் சந்திக்குமுன் தாடிகூட எடுக்க மாட்டேன்.

லெப்பிடஸ் : தனி கவுரவம் பாராட்ட இது சமயமில்லை.

எனோ : சந்தர்ப்பங்கள் உருவாகின்றபொழுது எந்த நேரத்திலும் எந்த சந்தர்ப்பத்தையும் சமாளிக்கலாம்.

லெப்பிடஸ் : ஆனால் பெரிய காரியங்களுக்குச் சிறு காரியங்கள் வழிவிட வேண்டும்.

எனோ : ஆனால் சிறியது முன்னால் வந்தால் வழிவிடாது. லெப்பிடஸ்! உன் பேச்சில் கோபம் தொனிக்கிறது. ஆனால் உன்னை வேண்டிக் கொள்கிறேன். பழைய சச்சரவுகளைக் கிளப்பாதே. இதோ மதிப்பு மிக்க அந்தோனி வருகிறார்.

(அந்தோனியும் தளபதி வென்டிடியசும் வருகின்றனர்)

எனோ : அதோ... சீசர் வருகிறார்...

(ஆக்டேவியஸ், சீசர், மெசினஸ், அக்ரிப்பா முதலியோர் வருகின்றனர்)

அந்தோனி : நாம் பார்த்தியாவுக்குப் புறப்படுவோமா?... கேள்...வெண்டிடியஸ்!

சீசர் : எனக்குத் தெரியாது மெசினஸ், அக்ரீப்பாவைக் கேள்.

லெப்பிடஸ் : இனிய நண்பர்களே! நம்மை இணைத்தது ஒரு பெரிய காரியமாகும். ஆகவே சிறிய காரியங்கள் நம்மைப் பிரிக்க நாம் இடம் கொடுக்கலாகாது. நமது வேறுபாடுகளை மெல்லப்பேசித் தீர்த்துக் கொள்ளலாம். அப்படி இல்லாமல் கோபத்தோடு முறையிட்டால் காயத்தை ஆற்றுவதற்குப் பதிலாக மரணத்தை விளைவிக்கிறோம். ஆகவே, என் இனிய பங்காளிகாள்! உங்களை அன்போடு கேட்டுக் கொள்கிறேன். மனத்தைப் புண்படுத்தும் செய்திகளையும்கூட இனிய வார்த்தைகளால் பரிமாறிக் கொள்ளலாம். இல்லாவிட்டால் நிலைமை இன்னும் மோசமாகிவிடும்.

அந்தோ : நன்றாகப் பேசினீர்கள். படைகளுக்கு முன்னால் நின்று சண்டை போட நேரிட்டால்கூட, நான் பக்குவமாகவே நடந்து கொள்வேன்.

சீசர் : (அந்தோனியை நோக்கி) ரோமுக்கு வந்திருக்கும் உங்களை வரவேற்கிறேன்.

அந்தோ : வரவேற்புக்கு நன்றி!

சீசர் : உட்காருங்கள்.

அந்தோ : நீங்களும் உட்காருங்கள்.

சீசர் : இல்லை...பிறகு...

அந்தோ : நான் அறிவது என்னவென்றால்......நீங்கள் இல்லாத காரியங்களையும் பொல்லாததாக எடுத்துக் கொள்கிறீர்கள். உங்களுக்குச் சம்பந்தம் இல்லாததிலும் தலையிட்டுக் கொள்கிறீர்கள்...

சீசர் : உங்கள் பேரில் உலகத்திலுள்ள அனைவரிலும் அனாவசியமாக நான் வெறுப்புற்றிருந்தால், சிரிப்புக்கு ஆளாவேன் ஆகுக!

அந்தோ : சீசர் அவர்களே! நான் எகிப்தில் இருந்தேன். அதனால் உங்களுக்கு வந்தது என்ன?

சீசர் : நான் இங்கே ரோமில் இருந்ததைப் போலத்தான் நீங்கள் அங்கே எகிப்தில் இருந்தது 1! அதைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. ஆனால் நீங்கள் அங்கிருந்து கொண்டு எனக்கும் என் நாட்டுக்கும் எதிராகச் சதி செய்தீர்கள். அதைப்பற்றித்தான் எனக்கு அக்கறை!

அந்தோ : ''சதி'' என்ற சொல்லால் நீங்கள் குறிப்பிடுவது என்ன?

சீசர் ; அதன் பொருளை நீங்கள் அறிவீர்கள். உங்கள் மனைவியும், சகோதரனும் எனக்கு எதிராகக் கலகம் செய்தார்கள்! அதற்குக் காரணம் நீங்கள்.

அந்தோ : தாங்கள் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். என் சகோதரன் என்னைக் காரணம் காட்டி ஒருகாலும் தங்களுடன் சண்டை செய்தது கிடையாது. நான் அதுபற்றி விசாரித்தேன். உங்களுடன் சேர்ந்து சண்டையிட்ட சில வீரர்களின் வாயிலாகத் தெரிந்து கொண்டேன். அவன் தங்களை எதிர்த்துக் கலகம்

செய்ததன் காரணமாக என் அதிகாரத்தையும் எதிர்த்த தாக ஆகிறது இல்லையா? நம் இருவர் நலன்களும் ஒன்றே ஆகையால் அவன் எனக்கும் எதிரிதான். இது பற்றி எனது முந்திய கடிதங்களே உங்களுக்குத் திருப்தி அளித்திருக்கவேண்டும். நீங்கள் என்னுடன் சண்டை பிடிக்கவேண்டுமென்று கருதினால் வேறு காரணம் கண்டுபிடியுங்கள். என் சகோதரனை விட்டுவிடுங்கள்.

சீசர் : எனது நியாய உணர்வைக் குறைகூறி உங்களை நீங்கள் புகழ்ந்துகொள்கிறீர்கள். நொண்டிச் சமாதானம் கூறுகிறீர்கள்.

அந்தோ : அப்படியல்ல. உங்களை நான் குறைகூறவில்லை. உறுதியாகச் சொல்கிறேன். ஆட்சிப்பொறுப்பில் நான் உங்கள் பங்காளியாகையால், என் சகோதரனின் கலகத்தால் விளையும் இலாபநட்டம் என்னையும்தானே பாதிக்கும். ஆகவே நான் அவனது கலகத்தை அங்கீ கரிக்கவில்லை. என் மனைவி புல்வியாவைப் பொறுத்த வரை அவளை அடக்குவது எவ்வளவு கடினம் என்பது உங்களுக்கும் அவளைப் போல் ஒரு மனைவி இருந்தால் தான் தெரியும். நாட்டின் மூன்றில் ஒருபகுதியை நீங்கள் கட்டியாள்வது எளிது; ஆனால் இவளைப் போன்ற ஒரு மனைவியைக் கட்டி ஆள்வது மிகவும் அரிது.

எனோ : நாம் அனைவரும் அத்தகைய மனைவியரைப் பெற்றிருந்தால் ஆண்கள் அனைவரும் மொத்தமாகப் பெண்களோடு சண்டைக்குப் போகலாம்.

அந்தோ : சீசர் அவர்களே! அவள் அடங்காதவள்! ஆகவே அவ்வளவு கலகம் செய்திருக்கிறாள். அதற்குக் காரணம் அவளது சொந்த உணர்ச்சிகளும், சூழ்ச்சிகளுமே ஆகும். வருத்தத்தோடு ஒப்புக்கொள்கிறேன். அவை உங்களுக்குத் துன்பத்தைத் தந்திருக்கும். ஆனால் அவை தவிர்க்க முடியாதவை.

சீசர் : அலெக்சாண்டிரியாவில் நீங்கள் களிப்பில் மூழ்கி யிருந்தபொழுது உங்களுக்குக் கடிதம் எழுதினேன். ஆனால் நீங்கள் அக்கடிதத்தைப் படிக்காமலே பையில் போட்டிருக்கிறீர்கள். மேலும் என் தூதுவனை அவமதித்து அனுப்பியிருக்கிறீர்கள்.

அந்தோ : ஐயா! நான் அனுமதி அளிக்கு முன்பே அவன் என்முன் தோன்றினான். அப்பொழுது நான் மூன்று அரசர்களுக்குப் புதியதாக விருந்தளித்திருந்ததால் குடி மயக்கத்தில் இருந்தேன். அதனால் அவனை அவமதித்து விட்டேன். ஆனால் மறுநாள் அவனிடம் விளக்கம் கூறி விட்டேன். அது கிட்டத்தட்ட மன்னிப்புக்கேட்டதற்குச் சமமாகும். நமக்கிடையில் இருக்கும் கருத்து வேறு பாட்டுக்கு இந்தப் பயல் ஒரு காரணமன்று. நமக்குத் திருப்தி ஏற்பட்டால் அவனை நம் சச்சரவிலிருந்து நீக்கிவிடலாம்.

சீசர் : நீங்கள் உங்கள் சத்தியத்தை மீறிவிட்டீர்கள். அதை நீங்கள் மறுக்க முடியாது.

லெப்பிடஸ் : கோபமில்லாமல் பேசுங்கள் சீசர்.

அந்தோ : இல்லை...லெப்பிடஸ்; அவர் பேசட்டும். அவர் இப்பொழுது எழுப்பியிருப்பது தன்மானப் பிரச்னை. அது மிகவும் புனிதமானது. அது எனக்கு இல்லை என்கிறார். சீசர் அவர்களே! சொல்லுங்கள், நான் செய்த சத்தியம் என்ன?

சீசர் : எனக்குத் தேவை ஏற்படும்பொழுது ஆயுத உதவி யும், பொருள் உதவியும் செய்வதாகச்சத்தியம் செய்தீர் கள். ஆனால் இரண்டையும் பிறகு மறுத்து விட்டீர்கள்.

அந்தோ : இல்லை. மறுக்கவில்லை; புறக்கணித்தேன். அதற்குக் காரணம் நான் என்னை மறந்திருந்ததே

ஆகும். அதற்காக உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். வெளிப்படையாக எனது பலஹீனத்தை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அங்ஙனம் நான் ஏற்றுக் கொள்வது எனது பெருமைக்கு இழுக்காகாது. உண்மை என்னவென்றால் என்னை எகிப்திலிருந்து இழுப்பதற்காக என் மனைவி புல்வியா இங்கே உங்களோடு சண்டை செய்தாள். அதற்காக நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். அதனால் பெருமை குறைந்துவிடாது.

லெப்பிடஸ் : பெருந்தன்மையான பேச்சு!

மெசினஸ் : உங்களுக்கு விருப்பமாக இருந்தால், மேலும் அதுபற்றிப் பேச வேண்டாம். சந்தர்ப்ப சூழ்நிலை நீங்கள் இருவரும் இணைவதை மிக இன்றியமையாத தாக்குகிறது.

லெப்பிடஸ் : சரியான பேச்சு, மெசினஸ்...

எனோ : அல்லது நீங்கள் இருவரும் ஒருவர் மற்ற வருடைய அன்பைத் தற்சமயத்துக்கு மட்டும் கடனாக வாங்கிக் கொள்ளுங்கள். பிறகு பாம்பேயைப் பற்றிய பிரச்னை தீர்ந்ததும் அதனைத் திருப்பிக் கொடுத்துக் கொள்ளுங்கள். அதன்பிறகு உங்களுக்கு வேலையிராது. ஆகையால் நீங்கள் வேண்டியவரை உங்களுக்குள் சச்சரவு செய்து கொள்ள நேரமிருக்கும்.

அந்தோ : (கோபமாக) நீ ஒரு வீரன் மட்டுமே! பேச்சை நிறுத்து.

எனோ : அந்த உண்மையை நான் மறந்து விட்டேன்.

அந்தோ : அந்தஸ்தைக் கெடுக்கிறாய். அறிவிழந்து பேசாதே.

ஏனோ : இனி நான் பேச மாட்டேன். வெறுங் கல்லாகவே இருப்பேன்.

சீசர் : அவன் சொன்ன செய்தியை நான் அதிகம் வெறுக்க வில்லை. ஆனால் அவன் சொன்ன முறையை வெறுக் கிறேன். செய்கைகளில் இவ்வளவு பெரிய வேறுபாடு இருக்கும் பொழுது நாம் இருவரும் எப்படி நண்பர் களாக இருக்க முடியும்? ஆனால் எது நம்மை உறுதி யாகப் பிணைக்குமென்று தெரிந்தால் அதுபற்றிக் கடைசிவரை நான் பரிசீலிக்கத் தயாராய் இருக்கிறேன்.

அக்ரிப்பா : சீசர் அவர்களே! நான் பேசலாமா?

சீசர் : பேசு அக்ரிப்பா!

அக்ரிப்பா : தங்கள் தாய்வழியில் தங்கட்கு ஒரு சகோதரி இருக்கிறார்களே...அழகுவாய்ந்த ஆக்டேவியா...நமது அந்தோனி அவர்களும் இப்பொழுது ஒண்டிக்கட்டை...

சீசர் : அவ்வாறு சொல்லாதே, அக்ரிப்பா! இதைக் கிளியோபாட்ரா கேள்விப்பட்டால் கண்டனத்துக்கு ஆளாவாய்.

அந்தோ : சீசர் அவர்களே! நான் இன்னும் மறுமணம் செய்து கொள்ளவில்லை. அக்ரிப்பா மேலும் பேசுவதை நான் கேட்க விரும்புகிறேன்.

அக்ரிப்பா : உங்கள் இருவரையும் நிலையான அன்பில் நிலைநிறுத்த, உங்களைச் சகோதரர்கள் ஆக்க, அவிழாத முடிச்சால் உங்கள் இதயங்களை இணைக்க, அந்தோனி ஆக்டேவியாவை மணந்து கொள்ளட்டும். அவளுடைய பேரழகுக்குப் பேராற்றல் படைத்த கணவனே தேவை! அவளது பண்பையும் அழகையும் பற்றி யாராலும் வர்ணிக்க முடியாது. பெரிதாகத்

தோன்றும் சிறிய பொறாமைகளும், ஆபத்தை உண்டாக்கக் கூடிய அச்சங்களும் இந்தத் திருமணத்தால் அகன்று விடும். உண்மையான வெறுப்பும் அப்பொழுது கதையாகிவிடும். ஆனால் இப்பொழுது வெறும் வதந்திகளும் உண்மையாக விளங்குகின்றன. ஆக்டேவியாவின் உண்மையான அன்பு உங்கள் இருவரையும் இணைக்கும் காந்தமாக விளங்கும்; மக்களின் அன்பை உங்கள் இருவரோடும் இணைக்கும் சக்தியாகத் திகழும். நான் பேசியதற்காக என்னை மன்னித்து விடுங்கள். என்னுடைய கருத்து திடீரென்று சொல்லப்பட்டதன்று; பல நாளாகச் சிந்திக்கப்பட்டதாகும். எனது கடமை உணர்வு அதுபற்றிச் சிந்திக்கச் சொல்லியது.

அந்தோ : சீசர் அவர்கள் தம் கருத்தைச் சொல்லட்டும்.

சீசர் : இல்லை. அந்தோனியின் கருத்துத் தெரியும் வரை சீசர் பேச இயலாது.

அந்தோ : "அக்ரிப்பா சொன்னது சரி" என்று நான் சொன்னால் அதை நிறைவேற்ற அக்ரிப்பாவுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?

சீசர் : சீசரின் அதிகாரம் அதை நிறைவேற்றும்.

அந்தோ : தடைகளை உடைக்கின்ற இந்த நல்ல நோக்கத்திற்கு நான் தடையாக நிற்கமாட்டேன். சீசர்! உங்கள் கையைக் கொடுங்கள்... நம் எண்ணம் கைகூடட்டும்! இந்த நேரம் முதல் நாம் உடன் பிறவாச் சகோதரர்கள் ஆனோம். பகைவனுக்கு எதிராக நம் சகோதர பாசம் ஆட்சி செலுத்தட்டும்!

சீசர் : இதோ என் நேசக்கரம்......... என் சகோதரியை உங்கட்குத் திருமணம் செய்து தருகிறேன். நான் அவளிடத்தில் அன்பு செலுத்துவதுபோல் எந்தச் சகோதரனும் தன் சகோதரியிடத்தில் அன்பு செலுத்தி-

யிருக்க முடியாது. நம் நாட்டையும் நம் இதயங்களை யும் இணைக்க அவள் நீண்ட நாள் உயிர் வாழட்டும்! நம் அன்பு என்றுமே அழியாதிருக்கட்டும்!! (கைகுலுக்கு கின்றனர்.)

லெப்பிடஸ்: அப்படியே ஆகுக! மகிழ்ச்சி தவழ்க!

அந்தோனி: பாம்பேக்கு எதிராக நான் என் வாளை எடுக்க விரும்பவில்லை. அவன் புதிய மரியாதைகளை யும் பெருமைகளையும் சமீப காலத்தில் எனக்குச் செய்திருக்கிறான். நான் அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். இல்லாவிட்டால் நன்றி கொன்றவன் ஆவேன். இப்பொழுது உடனே அவனைத் தன் படை களோடு என்னைச் சந்திக்கும்படி சவால் விடுங்கள்.

லெப்பிடஸ்: காலம் நம்மை அழைக்கிறது. நாம் அவனைக் கண்டு பிடிக்காவிட்டால் அவன் நம்மைக் கண்டு பிடித்து விடுவான்.

அந்தோ: அவன் எங்கே இருக்கிறான்?

சீசர்: மிசேனம் என்னும் மலையடிவாரத் துறைமுகத்தில் இருக்கிறான்.

அந்தோ: நிலத்தில் அவன் பலம் எவ்வளவு?

சீசர்: இப்பொழுது அதிகம்! இன்னும் வளர்ந்துகொண் டிருக்கிறது. ஆனால் கடலில் அவன்தான் சக்கரவர்த்தி!...

அந்தோ: புகழிலும் அவன் வளர்ந்திருக்கிறான்... நாம் முன்பே பேசியிருக்க வேண்டும்... பரவாயில்லை... போருக்கு நாம் விரைந்து தயாராவோம். ஆனாலும் நாம் ஆயுதம் தாங்குமுன், நாம் பேசி முடிவு செய்த காரியத்தை (திருமணத்தை) முடித்து விடுவோம்.

சீசர் : மிக்க மகிழ்ச்சி! என் சகோதரியைக் காண உங்களை அழைக்கிறேன். நேராக உங்களை அங்கே அழைத்துச் செல்கிறேன்.

அந்தோ ; அப்படியே செய்வோம். லெப்பிடஸ்... நீங்களும் வரலாம்...

லெப்பிடஸ் : மதிப்புமிக்க அந்தோனி! என் வருகையை நோய்கூடத் தடுக்க முடியாது— (முரசு முழங்குகிறது. சீசர், அந்தோனி, லெப்பிடஸ் ஆகிய மூவரும் செல்கின்றனர்.)

மெனிலஸ் : ஐயா! எகிப்திலிருந்து வந்துள்ள உங்கள் வரவு நல்வரவாகுக!

எனோ : சீசரின் பாதி இதயமான மெனிலஸ்! மதிப்புமிக்க நண்பனே அக்ரிப்பா!

அக்ரிப்பா : அன்பான எனோபார்பஸ்!

மெனிலஸ் : எல்லாம் நல்ல விதமாக முடிந்து விட்டதால் நாம் மகிழ்ச்சியடையக் காரணம் இருக்கிறது. நீ எகிப்தில் மிக இன்பமாக இருந்திருப்பாய்!

எனோ : ஆம்... பகல் முழுதும் நாங்கள் தூங்கி, இரவில் களியாட்டத்தில் ஈடுபடுவோம்.

மெனிலஸ் : காலை உணவின்போது எட்டுப் பன்றிகளைக் கொன்று பன்னிரண்டு பேர் விருந்துண்டதாகக் கதை சொல்கிறார்களே... அது உண்மையா?

எனோ : இது என்ன பிரமாதம்! கழுகு முன்னால் ஈ போன்றது நீ சொன்ன உதாரணம்! இன்னும் பெரிய விருந்துகளை எல்லாம் நாங்கள் கண்டோம் உண்டோம்.

மெனிலஸ் : அவள் ஒரு பேரழகி என்று சொல்கிறார்களே...

எனோ : சிட்னஸ் நதிக்கரையில் அவள் அந்தோனியை முதலில் கண்டபொழுதே அவன் இதயத்தைக் கவர்ந்து விட்டாள்.

அக்ரிப்பா : அங்கே அவள் தோன்றினாள் — இல்லையா?

எனோ : எல்லாக் கதையையும் சொல்கிறேன்... கேள்— அவள் அமர்ந்துவந்த படகு மெருகேற்றிய சிம்மாசனம் போல் திகழ்ந்தது. அது நீரில் தீப்பற்றியது போலக் காட்சியளித்தது. கப்பலின் பின்புறம் தங்கத்தால் இழைக்கப்பட்டிருந்தது. படகின் மஞ்சள்நிறப் பாய்கள் இனிய மணம் பெற்று விளங்கின. அதனால் காற்று அவற்றைக் காதலித்தது. வெள்ளித் துடுப்புகள் புல்லாங்குழல் ஓசைக்கு ஏற்ப அசைந்தன. அவற்றால் விலகிய நீர் விரைந்து ஓடியது. அவளைப் பொறுத்த வரை அவள் அழகு! வர்ணனைக்கு எட்டாதது! அவள் தன் படுக்கையில் தங்கரேக்கு உடையோடு வண்ணத்துப் பூச்சிபோல் அமர்ந்திருந்தாள்! அழகுத் தெய்வமாகிய வீனசைவிடப் பேரழகியாக அவள் திகழ்ந்தாள்! அவளது இருபுறமும் அழகிய சிறுவர்கள் வீனசின் மக்கள் போல விளங்கியவாறு அவளுக்கு வெண்சாமரை வீசினர். அதனால் எழுந்த குளிர்காற்று அவள் கன்னத்தைக் குளிர்விப்பதற்குப் பதிலாகச் சூடேற்றியது.

அக்ரிப்பா : அடேயப்பா! அந்தோனி அதிர்ஷ்டக்காரர்!

எனோ : அவளது தோழியர்கள் கடல் தேவதைகள் போல் விளங்கினர். அவளது கண்ணசைவுக்காகக் காத்திருந்தனர். அவர்கள் வணங்கி நின்ற நிலை வர்ணிக்க இயலாதது! தோழி ஒருத்தி படகோட்டினாள். பூப் போன்ற கரங்கள் பட்டதால் படகில் இருந்த பட்டுக் கயிறுகள் பூரித்தன. படகிலிருந்து வந்த நறுமணம் கரையில் இருந்தவர்களைக் கவர்ந்தது. நகர மக்கள்

எல்லாம் அவளைக் காண நதிக்கரைக்கு வந்தனர். அப்பொழுது அந்தோனி கடைத்தெருவில் தனியாக உட்கார்ந்து காற்றில் 'விசில்' அடித்துக் கொண்டிருந்தார். ஆனால் காற்றுக்கூடக் கிளியோபாட்ராவைக் காணச் சென்று வெற்றிடத்தை இயற்கையில் ஏற்படுத்தி விட்டது.

அக்ரிப்பா : அருமையான எகிப்து அழகி!

எனோ : அவள் படகைவிட்டு இறங்கியதும் அந்தோனி அவளை விருந்துக்கு வருமாறு செய்தி அனுப்பி அழைத்தான். ஆனால் அவளோ அவனைத் தன் அரண்மனைக்கு அழைத்தாள். எந்தப் பெண்ணுக்கும் "இல்லை" என்று சொல்லியறியாத தம் மதிப்புமிக்க அந்தோனி அந்த அழைப்பை ஏற்றான்; தன்னை அழகுபடுத்திக்கொண்டு விருந்துக்குச் சென்றான். அவள் அழகைத் தன் கண்களால் உண்டான். அதற்கு விலையாகத் தன் இதயத்தை வழங்கினான்.

அக்ரிப்பா : தெய்வீக அழகு!

எனோ : ஒருமுறை நான் அவளை ஒரு வீதியில் நாற்பது அடி தூரத்தில் கண்டேன். அவள் பேசினாள்; மூச்சுவிட்டாள்; சிறிது நேரம் மூச்சை நிறுத்தினாள்... எல்லாமே அவளுக்கு நிறைவும் அழகும் ஊட்டின.

மெசினஸ் : இப்பொழுது அந்தோனி அவளை முழுமையாகத் துறக்க வேண்டும்.

எனோ : ஒருகாலும் இல்லை...அவனால் துறக்கமுடியாது. வயது அவளை முதிர வைக்காது; அவளது நடை உடை மரபுகள் அவளது அளவிறந்த பாவனைகளைத் தெவிட்ட வைக்க முடியா! மற்ற பெண்கள் மனிதர்

களைத் திருப்தி செய்ய முடியாது! ஆனால் அவள் திருப்தி செய்யும் இடத்தில் மீண்டும்மீண்டும் பசியையும் ஏற்படுத்துகிறாள். குறையுள்ள செய்கைகள்கூட அவளிடம் நிறைவு பெறுகின்றன. அவள் குறும்பு செய்கின்ற பொழுது முனிவர்கள்கூட அவளை வாழ்த்து கின்றனர்.

மெசினஸ் : அழகு, அறிவு, கருணை ஆகியவை அந்தோனி யின் உள்ளத்தை நிறைவு செய்ய முடியுமானால், ஆக்டேவியா அவனுக்குக் கிடைத்த அதிர்ஷ்டப் பரிசு ஆகும்!

அக்ரிப்பா : நாம் போகலாம்...இனிய எனோபார்ஸ்; நீ இங்கிருக்கும்போது என் விருந்தினனாக இரு...

எனோ : ஆகட்டும் ஐயா...மிக்க நன்றி. (போகின்றனர்.)

## காட்சி—3

இடம் : ரோம்—சீசரின் அரண்மனை.

[அந்தோனிக்கும் ஆக்டேவியாவுக்கும் இடையே திருமணம் நடந்து சில நாளில் இக்காட்சி நடை பெறுகிறது. முன்னால் அந்தோனியும், பின்னால் சீசரும், நடுவில் ஆக்டேவியாவும் ஆக வருகின் றனர். சில வீரர்கள் பின் தொடர்கின்றனர்.]

அந்தோனி : நாடும், கடமையும் என்னை உன்னிடமிருந்து சில சமயம் பிரித்து வைக்க நேரலாம்...

ஆக்டேவியா : அப்பொழுதெல்லாம் நான் கடவுள் முன் மண்டியிட்டு உங்கள் வெற்றிக்காகப் பிரார்த்தனை செய்வேன்.

அந்தோனி : (சீசரை நோக்கி) ஐயா! இரவு வணக்கம். (ஆக்டேவியாவை நோக்கி) என் அன்பான ஆக்டேவியா! உலகத்தின் பேச்சிலிருந்து என் குறைகளை எடை போடாதே. இதுவரை என் வாழ்க்கை தூய்மையற்றதாகவோ, பாவமற்றதாகவோ இல்லை. ஆனால் எதிர்காலத்தில் என் வாழ்க்கை ஒழுங்கானதாக இருக்கும். அன்பே! இரவு வணக்கம். ஐயா! இரவு வணக்கம்! (சீசரும், ஆக்டேவியாவும் செல்கின்றனர்.)

(சோதிடன் ஒருவன் வருகிறான்)

அந்தோனி : ஏ! சோதிடரே! நீ இப்பொழுது எகிப்தில் இருக்க விரும்புகிறாய்...இல்லையா?

சோதிடன் : நான் எகிப்தை விட்டே வந்திருக்கக் கூடாது என்று விரும்புகிறேன். நீங்கள் அதைப் பார்த்திருக்கவே கூடாது என்றும் விரும்புகிறேன்.

அந்தோ : அதற்குக் காரணம்...?

சோதிடன் : அது என் மனத்திலிருந்து தோன்றுகிறது. மேலும் நீங்கள் மீண்டும் விரைந்து எகிப்துக்குச் செல்வது நல்லது.

அந்தோ : சொல்...யாருக்கு அதிர்ஷ்டம் அதிகமாக இருக்கிறது? சீசருக்கா? எனக்கா?

சோதிடன் : சீசருக்குத்தான்... ஆகவே... அந்தோனி! சீசருக்கு அருகில் இருக்காதீர்கள். உங்கள் உணர்ச்சி

உங்கள் ஆத்மா மிகவும் பெருந்தன்மை வாய்ந்தது; துணிவானது; உயர்வானது; ஈடு இணையில்லாதது... எல்லாம் சீசர் உங்கள் அருகில் இல்லாதபொழுதுதான். ஆனால் அவர் உங்கள் அருகில் இருந்தால் உங்கள் ஆத்மா பயங்கொள்ளியாக, தோல்வி மனப்பான்மை உடையதாக மாறிவிடுகிறது. ஆகவே அவருக்கும் உங்களுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளியை ஏற்படுத்துங்கள்.

அந்தோ : இதைப்பற்றி இனிப் பேசாதே.

சோதிடன் : உங்களைத் தவிர வேறு யாருடனும் பேச மாட்டேன். நீங்கள் அவருடன் ஏதாவது விளையாடினால் தோல்வி உங்களுக்குத்தான். அவரது இயல்பான அதிர்ஷ்டத்தின் காரணமாக அவர் எத்தனையோ துன்பங்களுக்கு இடையிலும் உங்களைத் தோற்கடித்து விடுகிறார். அவர் உங்கள் அருகில் ஒளிவீசும்பொழுது உங்களது புகழ் ஒளி மங்கிவிடுகிறது. மீண்டும் சொல்கிறேன்...அவருக்கு அருகில் இருக்கும்பொழுது உங்கள் ஆத்மா அஞ்சுகிறது. ஆனால் அவர் விலகினால் அது பொலிவு பெறுகிறது.

அந்தோ : போ.....போய் நான் நம் தளபதி வென்டிடிய சிடம் பேச விரும்புவதாகச் சொல்...(சோதிடன் போகிறான்; அந்தோனி சிந்தனையில் மூழ்குகிறான்.)

அவன் பார்த்தியாவுக்குச் செல்லட்டும்...சோதிடன் சொன்னது சோதிடமாக இருந்தாலும் சரி அல்லது தற்செயலாகச் சொன்னதானாலும் சரி, அவன் சொன்னது முற்றிலும் உண்மை. சூதாட்டத்தில் காய் சீசர் சொன்னபடி கேட்கிறது. விளையாட்டில் வெற்றி அவன் பக்கம் அணைகிறது. திருவுளச்சீட்டும்

அவனுக்கே முந்துகிறது. சேவல் சண்டையில் அவன் சேவல் வெல்கிறது. குருவிச் சண்டையிலும் வெற்றி அவனுக்குத்தான். ஆகவே...நான் எகிப்துக்குச் செல்லப் போகிறேன். சமாதானத்துக்காக நான் ஆக்டேவியாவைத் திருமணம் செய்து கொண்டாலும், கிழக்கில் தான் என் இன்பம் கிடக்கிறது.

(தளபடி வென்டிடியஸ் வருகிறான்.)

வா...வென்டிடியஸ்...நீ உடனே பார்த்தியாவுக்குப் படை எடுத்துச் செல்...அதற்குரிய ஆணைப் பத்திரங்கள் தயாராக உள்ளன. என்னுடன் வந்து அவற்றைப் பெற்றுக் கொள்...

(இருவரும் செல்கின்றனர்.)

## காட்சி – 4

இடம் : ரோம்...ஒரு தெரு

[லெபிடஸ், மெசினஸ், அக்ரிப்பா மூவரும் வருகின்றனர்.]

*லெபிடஸ் :* மேலும் தொந்தரவு செய்துகொள்ளாதீர்கள். உங்கள் தளபதிகள் மிசினத்துக்குப் படை நடத்திச் செல்ல இருக்கிறார்கள். அவர்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்.

அக்ரிப்பா : ஐயா, அந்தோனி ஆக்டேவியாவுக்கு முத்தம் கொடுத்து விடை பெறுவார். நாங்களும் அவரைப் பின்தொடர்வோம்.

லெப்பிடஸ் : காலச்சூழ்நிலைக்கு ஏற்ப நீங்கள் உடனே சென்று போர்உடை அணியுங்கள். வணக்கம்......

மெசீனஸ் : லெப்பிடஸ்...பிரயாணத்தைக் கணக்கிட்டுப் பார்த்தால் உங்களுக்கு முன்னால் நாங்கள் மலையடி வாரத்தில் இருப்போம்...

லெப்பிடஸ் : நீங்கள் செல்லும் பாதை குறுகியது. ஆனால் சூழ்நிலை என்னைச் சுற்றிச் செல்லச் சொல்கிறது. நீங்கள் எனக்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே அங்கு சென்று விடுவீர்கள்.

மெசீனஸ், அக்ரிப்பா : ஐயா! வெல்க!

லெப்பிடஸ் : நன்றி! வணக்கம்! (போகின்றனர்)

## காட்சி—5

இடம் : அலெக்சாண்டிரியா, கிளியோபாட்ராவின் அரண்மனை.

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ், அலெக்சாஸ் ஆகியோர் வருகின்றனர்.]

கிளியோபாட்ரா : சற்று பாடு...பாடு...காதலில் உழல்பவர்களுக்குப் பாட்டுத்தான் உணவு!

வேலையாள் : ஏ, பாடகர்கள் பாடட்டும்!...ஓ!...

(மார்டியான் என்னும் அலி வருகிறான்)

இளியோ : சார்மியான்...வா...நாம் தந்தப் பந்தாட்டம் ஆடுவோம்.

சார்மியான் : என் கையில் புண் இருக்கிறது. ஆகவே மார்டியானுடன் விளையாடுங்கள்...

இளியோ : ஒரு பெண் மற்றொரு பெண்ணுடன் விளை யாடுவதைப்போலவே ஓர் அலியுடனும் விளையாடலாம். வா...மார்டியான்!...என்னுடன் விளையாட முடியுமா?

மார்டியான் : அம்மா!...முடிந்தவரை விளையாடுகிறேன்.

இளியோ : ஒருவன் நல்ல எண்ணத்தோடு ஒரு செயலை மேற்கொண்டால், அதைச் சரியாக நிறைவேற்றாவிட்டாலும் பரவாயில்லை...நான் இப்பொழுது பாட்டும் கேட்கப் போவதில்லை. விளையாட்டும் நடத்தப் போவதில்லை. ஆனால் மீன் பிடிக்கப் போகிறேன். என்னுடைய தூண்டிலைக் கொடுங்கள். நாம் இப்பொழுது ஆற்றுக்குப் போவோம். அங்கே நான் மீன் பிடிப்பேன். மீனின் தாடையில் தூண்டில் முள் பாயும். அவற்றை நான் இழுக்கும் பொழுது ஒவ்வொரு மீனையும் ஒரு அந்தோனியாகக் கற்பனை செய்து, "ஆ! ஆ! அகப்பட்டுக் கொண்டாய்" என்று கூறுவேன்.

சார்மியான் : முன்பு அந்தோனியுடன் நீங்கள் மீன்பிடி போட்டி நடத்தியது வேடிக்கையாக இருந்தது. அன்று உங்களது நீச்சல்காரன் ஒருவன் நீரில் மூழ்கிச் சென்று அந்தோனியின் தூண்டில் முள்ளில் ஒரு கருவாட்டைச் செருகினான். அந்தோனி அதனை இழுத்துக் கருவாடு பிடித்தது மிக வேடிக்கையாக இருந்தது.

இளியோ : அது ஒரு காலம்...என்னே காலத்தின் கோலம்! அன்று நான் அவரைக் கேலி செய்து சிரித்தது அவரது

பொறுமையையே போக்கிவிட்டது. ஆனால் அன்று இரவு மீண்டும் சிரித்து அவருக்குப் பொறுமையை உண்டாக்கினேன். மறு நாட் காலை அவரை நிறையக் குடிக்க வைத்துத் தூங்க வைத்தேன். பிறகு எனது உடைகளை அவருக்கு அணிவித்து, அவரது வீரவாளை நான் அணிந்து கொண்டேன்.

(தூதுவன் ஒருவன் வருகிறான்)

ஓ!...இத்தாலியிலிருந்து வருகிறாயா? நீ அறுத்து வரும் செய்திகளை என் செவியில் கொட்டு! என் காதுகள் செய்தி கேட்டு நீண்ட நாட்களாகி விட்டன.

தூதுவன் : (தயக்கமாக) தேவி! தேவி!!

கிளியோ : என்ன தயக்கம்...சொல்...அந்தோனி இறந்து விட்டாரா? அப்படி நீ சொன்னால் நீ ஒரு கொடியவன்! உன் அரசியை நீ கொன்றவன் ஆகிறாய்! ஆனால் அவர் நன்றாகவும் இனிதாகவும் இருக்கிறார் என்று சொன்னால் உனக்கு நிறையப் பொன் தருவேன். அத்துடன் நீ முத்தமிட எனது கையையே தருவேன். இந்தக் கை அரசர்களின் இதழ் பட்டது. அப்படிப் படும்பொழுது அந்த இதழ்கள் நடுங்கும் பெருமை பெற்றது!

தூதன் : அரசியே! முதலாவது, அவர் நலமாக இருக்கிறார்.

கிளியோ : நல்லது உனக்கு நிறையப் பொன் உண்டு. ஆனால் ... நினைவுபடுத்திக்கொள் ... செத்தவர்கள் நலமாக இருப்பதாகத்தான் நாம்சொல்கிறோம். அப்படி நீ சொன்னால் உனக்குத் தந்த பொன்னையெல்லாம் உருக்கிப் பொய் சொன்ன உன் தொண்டையில் ஊற்றி விடுவேன்.

தூதன் : தேவி, நான் சொல்வதைக் கேளுங்கள்......

கிளியோ : நல்லது...சொல். கேட்கிறேன்...ஆனால் உன் முகத்தில் நல்ல உணர்ச்சி இல்லை. அந்தோனி இனிதாகவும், நலமாகவும் இருப்பின் உன் முகத்தில் கசப்புணர்ச்சி இருக்காது. அவர் நலமாக இல்லாவிட்டால் நீ கோபத்தின் சின்னமாகக் காட்சியளிப்பாய். சாதாரண மனிதனாகக் காட்சி அளிப்பாய்!

ஆதன் : தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்கள்...

கிளியோ : நீ பேசு முன்னால் நான் தலையிடுகிறேன். ஆனாலும்—அந்தோனி உயிரோடு இருக்கிறார் என்றும், நலமாக இருக்கிறார் என்றும், சீசருடன் நட்பாக இருக்கிறார் என்றும், அவருக்கு அடிமையாக இல்லை என்றும் நீ சொன்னால் உன்னைப் பொன் மழையில் நனைய வைத்து முத்துமழையில் குளிர வைப்பேன்.

ஆதன் : தேவி! அவர் நலமாக இருக்கிறார்.

கிளியோ : நன்று சொன்னாய்!

ஆதன் : சீசருடன் நட்பாக இருக்கிறார்.

கிளியோ : நீ ஒரு நேர்மையான மனிதன்!

ஆதன் : சீசரும் அவரும் முன்பு எப்பொழுதையும் விட இப்பொழுது நெருங்கிய நண்பர்களாகி இருக்கின்றனர்.

கிளியோ : உனக்குப் புதையல் தரப் போகிறேன்!!!

ஆதன் : ஆனால்...தேவி!

கிளியோ : இந்த ஆனால் என்பதை விரும்பவில்லை. இது வரை நீ சொன்ன நல்ல செய்திகளை அது நஞ்சாக்குகிறது. "ஆனால்" என்பதை ஒழி! இந்த ஆனால் என்பது சிறைக்குள் ஒரு கொலைகாரனை வைத்துக் கொண்டு காவல் புரியும் சிறைக்காவலனைப் போன்ற

தாகும்...... தூதுவனே! உன்னை வேண்டுகிறேன்... நல்ல செய்தியையும் கெட்ட செய்தியையும் குழைத்து என் காதில் ஊற்று...அவர் சீசருடன் நட்பாக இருக்கிறார்; அவர் நலமாக இருக்கிறார்; அவர் உரிமையோடு இருக்கிறார் என்றெல்லாம் சொல்கிறாய்......

தூதன்: உரிமையா!...... தேவி...... இல்லை...... நான் அப்படிச் சொல்லவில்லை...— அவர் ஆக்டேவியாவுக்கு அடிமைப்பட்டுக் கிடக்கிறார்.

கிளியோ: சார்மியான்!...என் மூச்சு நின்றுவிடும்போல் இருக்கிறது.

தூதன்: தேவி!......அவர் ஆக்டேவியாவைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார்.

கிளியோ: (கோபமாக) மிக மோசமான தொத்துநோய் உன்னைத் தாக்கட்டும். (தூதனை ஆத்திரத்தில் அடிக்கிறாள்)

தூதன்: (பணிவாக) தேவி!——பொறுமை! பொறுமை!!

கிளியோ: என்ன சொன்னாய்? (மீண்டும் அடிக்கிறாள்) அயோக்கிய சிகாமணி! உன் கண்களைப் பிடுங்கிப் பந்தாடி விடுவேன். உன் தலைமயிரைப் பறித்து வழுக்கை ஆக்கிவிடுவேன் (மீண்டும் அடித்து நொறுக்குகிறாள்) உன்னைச் சவுக்கால் அடித்துப் பிய்த்து விடுவேன்; உன்னை உப்பு நீரில் வேகவைத்து ஊறுகாய் போட்டு விடுவேன்.

தூதன்: அவர் திருமணத்திற்கு நான் காரணமில்லை. நான் நடந்ததைத்தான் கூறினேன்.

கிளியோ: அப்படி நடக்கவில்லை என்று சொல். உனக்கு ஒரு மாகாணத்தையே பரிசளிக்கிறேன். அதிர்ஷ்டத்தில்

உன்னை மூழ்க வைக்கிறேன். நீ கோபத்தை உண்டாக்கினாய், அதற்குப் பரிசாக அடி கிடைத்தது. இப்பொழுது மாற்றிச் சொல்......உனக்கு நீ விரும்பும் எந்தப் பரிசையும் தரத் தயாராய் இருக்கிறேன்.

தூதன்: தேவி! அவருக்குத் திருமணம் நடந்தது உண்மைதான்......

கிளியோ: முட்டாள்! முட்டாள்......நீ நீண்ட நேரம் உயிர் வாழ்ந்து விட்டாய் (குத்துவதற்குக் கத்தியை உருவுகிறாள்)

தூதன்: ஐயய்யோ! அப்படியானால் நான் ஓடிவிடுகிறேன் அம்மா! என் பேரில் குற்றமில்லை...(ஓடுகிறான்)

சார்மியான்: அம்மா! உணர்ச்சி வயப்படாதீர்கள்...... அவன் பாவம். ஒன்றும் அறியாதவன்.

கிளியோ: அறியாதவர்கள் கூடச் சில சமயம் ஆண்டவனின் தண்டனைக்கு ஆளாகி விடுகிறார்கள். எகிப்து, நைல் நதியில் கரையட்டும்! நல்ல உயிர்கள் எல்லாம் நச்சுப் பாம்புகளாகட்டும்! அந்த முட்டாளை மீண்டும் மீண்டும் அழை. எனக்குப் பைத்தியமே பிடித்திருந்தாலும் இனி அவனை அடிக்க மாட்டேன். அவனை மீண்டும் அழை.

சார்மியான்: அவன் வர அஞ்சுகிறான்...

கிளியோ: நான் அவனை அடிக்க மாட்டேன். (சார்மியான் தூதுவனை அழைக்க வெளியே செல்கிறான்.) இந்தக் கைகளுக்குப் பெருந்தன்மை இல்லை. வேலைக்காரனை அடித்துத் தன் பெருமையை இழக்கும் கைகள்! அந்தோனியின் காதலுக்கு நான் இப்படி அடிமையாகி விட்டேனே......... (சார்மியானும் தூதுவனும் மீண்டும் வருகின்றனர்) வா...தூதுவனே! வா......உண்மையாக இருந்தாலும் கெட்ட செய்தியைக் கொண்டு வருவது

நல்லதில்லை. வரவேற்கத் தக்க செய்தியைப் பேச் சாற்றலோடு எத்தனை பேரிடம் வேண்டுமானாலும் விளம்பு. ஆனால் தீயே செய்திகள் தாமே எட்டும்படி விட்டுவிடு.

தூதுவன்: நான் என் கடமையைத்தான் செய்தேன்.

கிளியோ: அவர் திருமணம் செய்து கொண்டு விட்டாரா? நீ மீண்டும் "ஆம்" என்று சொன்னாலும் அதற்காக உன்னை இனி இதற்குமேல் வெறுக்க முடியாது.

தூதுவன்: ஆம்...தேவி! அவர் திருமணம் செய்து கொண்டு விட்டார்.

கிளியோ: கடவுள் உன்னைச் சபிக்கட்டும்! நீ இன்னும் பழைய பல்லவியேதான் பாடுகிறாய்.

தூதுவன்: நான் பொய் சொல்ல வேண்டுமா ராசி?

கிளியோ: நீ சொன்னது பொய்யாக இருந்து, அதற்குப் பரிகாரமாக நான் எகிப்தில் பாதியை இழக்க நேரிட்டாலும் கவலைப்படேன். போ...இங்கிருந்து போய்விடு. நீ அழகின் சின்னமாக இருப்பினும் எனக்கு அருவருப்பின் உருவமாகக் காட்சியளிக்கிறாய்...அவர் திருமணம் செய்து கொண்டு விட்டாரா?

தூதுவன்: மன்னிக்கவேண்டும் அம்மா!

கிளியோ: அவர் திருமணம் செய்து கொண்டு விட்டாரா?

தூதுவன்: குற்றமாகக் கருதாதீர்கள். என்னைக் கட்டாயப் படுத்தி விடைகூறச் சொல்லிப் பிறகு தண்டிக்காதீர்கள். அவர் ஆக்டேவியாவைத் திருமணம் செய்து கொண்டு விட்டார்.

கிளியோ: ஓ!... அந்தோனியின் குற்றத்திற்காக நீ ஓர் அயோக்கியனாக மாறியிருக்கிறாய்... என்ன?... நீ

சொன்னது உறுதியா? போ...போ...இங்கிருந்து போய் விடு. நீ ரோமிலிருந்து, கொண்டு வந்திருக்கும் செய்தி மிகவும் கொடுமையானது; நான் பெறமுடியாத அளவுக்கு விலை உயர்ந்தது. அதை விற்க முடியாமல் உன்னுடனேயே வைத்திருந்து மண்ணாய்ப் போ... போ...போ...(தூதுவன் போகிறான்.)

சார்மியான்: தேவி!...பொறுமையாக இருங்கள்...

கிளியோ: முன்பு அந்தோனியைப் புகழ்ந்ததில் சீசரை இழந்தேன் அல்லவா?

சார்மியான்: பலமுறை அவ்வாறு செய்தீர்கள்.

கிளியோ: அதற்குக் கூலி இப்பொழுது கிடைத்து விட்டது. என்னை இங்கிருந்து அழைத்துச்செல்...எனக்கு மயக்கம் வருகிறது. ஓ! இராஸ்! சார்மியான்!...அது ஒரு பெரிய காரியமில்லை. அலெக்சாஸ்! அந்தத் தூதுவனிடம் சென்று ஆக்டேவியாவின் பண்பு, வயது, ஆசை, கூந்தல் நிறம் ஆகியவற்றை விசாரித்து விரைந்து வா... (அலெக்சாஸ் செல்கிறான்) அவர் என்னை விட்டு எப்பொழுதும் பிரிந்தவராகவே இருக்கட்டும்!...இல்லை பிரியக் கூடாது...சார்மியான்! அவரை ஓர் இராட்சதனாக ஒரு வழியில் உருவம் தீட்டினாலும், மறுவழியில் அவர் ஒரு கடவுளாகக் காட்சியளிக்கிறார்... (மார்டியானிடம்) மார்டியான்! அலெக்சாசிடம் போய்ச் சொல்...ஆக்டேயாவின் உயரம் என்ன என்பதையும் தெரிந்து வரச்சொல்...சார்மியான்!...என் மீது இரக்கப் படு...ஆனால் பேசாதே...என்னை என் அறைக்கு அழைத்துச் செல்...

(போகின்றனர்)

## காட்சி—6

இடம் : மிசினத்துக்கு அருகில்

(புரட்சிக்காரன் பாம்பேயும், சீசரும் சண்டைக்கு முன் சந்திக்கும் காட்சி)

[முரசு முழங்குகிறது. பாம்பே, மெனஸ் ஆகியோர் ஒரு புறம் வருகின்றனர். மறுபுறம் சீசர், அந்தோனி, லெப்பிடஸ், எனோபார்பஸ், மெசினஸ் மற்றும் படை வீரர்கள் ஆகியோர் வருகின்றனர்.]

பாம்பே : வணக்கம்! நமக்குப் பாதுகாப்பு இருக்கிறது. இருப்பினும் நாம் சண்டை தொடங்குமுன் சமாதானப் பேச்சைத் தொடங்குவோம்.

சீசர் : முதலில் நாம் பேச்சைத் தொடங்குவது பொருத்த மானதே. ஆகவேதான் எங்களுக்கு முன்னால் எங்களது பிரேரணைகளை எழுத்து மூலம் அனுப்பினோம். அதை நீங்கள் பரிசீலித்திருந்து, தங்கட்குத் திருப்தியாயிருந்தது, தாங்கள் ஓங்கிய வாளை உறையிலிட்டு, சிசிலிக்குப் படைவீரர்களுடன் திரும்பிச் செல்ல விருப்பமா என்று அறிய விரும்புகிறேன். இல்லாவிட்டால் உங்கள் வீர இளைஞர்கள் வீணாகச் சாக நேரும்.

பாம்பே : இந்த நாட்டின் ஆட்சிக் குழுவில் அங்கம் வகிக்கும் மூவர்களே! கடவுளின் பிரதிநிதிகளே! என் தந்தை வீணாகச் செத்தார். அவர் வழியில் நான் ஒரு மகன் இருந்தும், எனக்கு உதவி செய்ய நண்பர்கள் பலர் இருந்தும் நான் ஏன் அவர் சார்பில் பழிவாங்கக் கூடாது? ஜூலியஸ் சீசரின் மரணத்துக்குப் பின் புருட்டஸை எதிர்த்து "பிலிப்பி" என்ற போர்க்களத்தில் நீங்கள் இருவரும் (ஆக்டேவியஸ் சீசர், அந்தோனி) போராடி

னீர்கள். அங்கே ஜூலியஸ் சீசரின் ஆவி புருட்டஸைச் சுற்றியது. ஜூலியஸ் சீசரை எதிர்த்துக் காஷியஸ் ஏன் சதி செய்தான். மதிப்பு மிக்க புருட்டஸ், ஜூலியஸ் சீசருக்கு எதிராகத் தானும் ஆயுதம் ஏந்தி, மற்ற ஆலோசகர்களையும் ஏன் ஆயுதம் ஏந்தச் செய்தான்? ஜூலியஸ் சீசர் தான் ஒரு மனிதன் என்பதனால் மனித னாகவே இருந்திருக்க வேண்டும். கடவுள் நிலையை உண்டாக்கியிருக்கக் கூடாது. புருட்டசுக்குப் பிறகு என் தந்தை போராடினார். அவருக்குப் பிறகு இப்பொழுது நான் போராடுகிறேன். கடலாதிக்கம் செலுத்துகிறேன். எனது கப்பற்படையின் பாரத்தைப் பொறுக்காதுகடலே கொந்தளிக்கிறது. ரோமாபுரி என் தந்தைக்குச் செய்த கொடுமைக்கு இப்பொழுது நான் பழி வாங்குகிறேன்.

சீசர் : பேசுங்கள். உங்களுக்கு வேண்டிய நேரத்தை எடுத்துக் கொள்ளுங்கள்.

அந்தோனி : பாம்பே! உங்களிடம் கடற் படை இருப்ப தால் நீங்கள் எங்கட்கு அஞ்ச வேண்டியதில்லை. உங்களை நான் கடலில் சந்திக்கத் தயாராய் இருக் கிறோம். நிலத்தைப் பொறுத்தவரை உங்களைவிட எங்கள் பலம் எவ்வளவு உயர்ந்தது என்பது உங்களுக்கே தெரியும்.

பாம்பே : (அந்தோனியிடம்) நிலத்தில் உங்கள் பலம்அதிகம் தான். என் தகப்பனாரின் மாளிகை ஒன்றை நீங்கள் விலைக்கு வாங்கிப் பயன்படுத்தினீர்கள். ஆனால் பணம் கொடுக்க மறுத்துவிட்டீர்கள். ''குக்கூ'' பறவை தனக்கென்று கூடு கட்டிக் கொள்ளாது; ஆனால் மற்ற பறவையின் கூட்டில் முட்டையிட்டு அதனையே அடை காக்க வைக்கும். அதுபோல்தான் தாங்களும்...

லெப்பிடஸ் : (பாம்பேயிடம்) ஐயா! தயவு செய்து சொல் லுங்கள், காரியத்தைக் கவனிப்போம்— தங்களுக்கு

நாங்கள் அனுப்பிய பிரேரணைபற்றித் தங்கள் கருத்தென்ன?

சிசர்: அதுதான் முக்கியமான பிரச்னை!

அந்தோனி: நாங்கள் சொல்கிறோம் என்பதற்காக அந்தப் பிரேரணையை ஒப்புக் கொள்ள வேண்டாம். அது உங்களுக்கே நன்மையானதாக இருந்தால் ஒப்புக் கொள்ளுங்கள்.

சிசர்: அதிகமான நன்மைகளைப் பெற முயன்று, சண்டையிட்டால் விளைவு என்னாகும் என்பதையும் பரிசீலித்து முடிவு செய்யுங்கள்.

பாம்பே: நீங்கள் எனக்கு சிசிலி, சார்டினியா ஆகிய இரு பகுதிகளை வழங்குகிறீர்கள். நான் கடற் கொள்ளையை நிறுத்த வேண்டும். ரோமுக்குக் கோதுமை அனுப்ப வேண்டும். இதற்கு ஒப்புக் கொண்டால் போரை நிறுத்திவிட்டு வெறும் வாளுடனும் கவசத்துடனும் சண்டையின்றித் திரும்ப வேண்டும்.

சிசர், அந்தோ, லெப்: ஆம்... அதுதான் எங்கள் பிரேரணை.

பாம்பே: அப்படியானால் அறிந்து கொள்ளுங்கள்......... உங்களுக்கு முன்னால் நான் இங்கே வந்தது இந்தப் பிரேரணையை ஏற்றுக் கொள்ளத்தான்... ஆனால் அந்தோனி என் பொறுமையைச் சோதித்து விட்டார். இப்பொழுது நான் ஓர் உண்மையைச் சொல்கிறேன்... அதை நான் சொல்வது புகழ்ச்சியன்று. இருந்தாலும் கேளுங்கள்...சிசரும், அந்தோனியின் சகோதரனும் சண்டையிட்ட பொழுது, அந்தோனியின் தாய் சிசிலிக்கு வந்தாள்; அப்பொழுது அவளை மகிழ்ச்சியுடனும் நட்புடனும் வரவேற்றேன்.

அந்தோ: அதைப்பற்றிக் கேள்விப்பட்டேன். ...பாம்பே! அதற்காக நான் உங்களுக்குப் பெரிதும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன்.

பாம்பே: (அந்தோனியிடம்) உங்கள் நேசக் கரத்தை நீட்டுங்கள். ஐயா! உங்களை இங்கே நான் சந்திப்பேன் என்று நினைக்கவே இல்லை.

அந்தோ: கிழக்கில் உள்ள கட்டில்கள்மிக மென்மையானவை. நான் இங்கு வரத் திட்டமிடுவதற்கு முன்னரே உங்கள் நடவடிக்கைகள் என்னை அங்கிருந்து விரைந்து இழுத்து வந்து விட்டன. இங்கே வந்ததால் எனக்கு இலாபமே ஏற்பட்டு உள்ளது.

சீசர்: (பாம்பேயிடம்) நான் உங்களைக் 'கடைசியாகப் பார்த்ததற்குப் பிறகு உங்கள் தோற்றத்தில் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டிருக்கிறது.

பாம்பே: நல்லது. என் முகத்தில் ஏற்பட்டிருக்கும் சுருக்கங்கள் துயரத்தின் அறிகுறிகள். ஆனால் இந்தத் துயரம் என் இதயத்தில் நுழைந்து சுருக்கத்தை ஏற்படுத்த முடியாது.

லெப்பிடஸ்: நம் சந்திப்பு நல்ல விதமாக முடிந்தது.

பாம்பே: லெப்பிடஸ்! நானும் அப்படித்தான் நம்புகிறேன். நமக்குள் ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. அதனை எழுதி முடித்து முத்திரை வைத்தல் நல்லது.

சீசர்: அதுதான் அடுத்த காரியம்...

பாம்பே: நாம் பிரிவதற்கு முன்னால் நமக்குள் ஒருவருக்கொருவர் விருந்து வைத்துக் கொள்வோம். யார் முதலில் வைப்பது என்பதைத் திருவுளச் சீட்டுப் போட்டு முடிவு செய்வோம்.

அந்தோ: நான்தான் முதலில் விருந்து வைப்பேன், பாம்பே!

பாம்பே: முடியாது. அந்தோனி! திருவுளச் சீட்டின்படி தான் நடக்க வேண்டும். ஆனால் உங்கள் எகிப்திய விருந்து முதலில் நடந்தாலும் இறுதியில் நடந்தாலும் அதுதான் சிறப்பானதாக அமையும். ஜூலியஸ் சீசரின் உடம்பு பெருத்ததற்குக் காரணம் எகிப்திய விருந்து தான் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.

அந்தோ: (கோபமாக) நீங்கள் நிறையக் கேள்விப்பட்டு இருக்கிறீர்கள்.

பாம்பே: நான் ஒன்றும் தவறாகச் சொல்லவில்லை....

அந்தோ: அப்படியானால் வார்த்தைகளை அளந்து பயன் படுத்துவது நல்லது.

பாம்பே: நான் கேள்விப்பட்டது என்னவென்றால்... ஜூலியஸ் சீசரிடம் அப்போலோடோரஸ் என்பவன் கிளியோபாட்ராவை ஒரு மெத்தையில் வைத்துச் சுருட்டிக்கொண்டு போனானாம். இப்படித்தான் சீசர்-கிளியோபாட்ரா முதற் சந்திப்பு நடந்ததாமே?

எனோபார்பஸ்: அதைப்பற்றிப் பேச்சு எதற்கு? அது அப்படித்தான் நடந்தது!

பாம்பே: என்ன? உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள் கிறேன்; விபரமாகச் சொல்.

எனோ: அரசியை ஜூலியஸ் சீசரிடம் மெத்தையில்தான் வைத்துச் சுருட்டிக் கொண்டு சென்றனர்.

பாம்பே: வீரனே! உன்னை எனக்கு இப்பொழுது அடை யாளம் தெரிகிறது. எப்படியிருக்கிறாய்? நலமா?

எனோ: நலம். நலமே விரும்புகிறேன். இப்பொழுது நான்கு விருந்துகள் காத்திருக்கின்றன.

பாம்பே : உன்னோடு கைகுலுக்க விரும்புகிறேன்; உன்னை நான் எப்பொழுதும் வெறுத்ததில்லை. உன் போராற்றலைக் கண்டு நான் முன்பு பொறாமைப்பட்டிருக்கிறேன்.

எனோ : ஐயா! உங்களை நான் எப்பொழுதும் அதிகமாக நேசித்ததில்லை. ஆனால் உங்கள் வீரத்தைப் பெரிதும் புகழ்ந்திருக்கிறேன்.

பாம்பே : உனது மனம் திறந்த பேச்சுக்காக நான் மகிழ்ச்சி அடைகிறேன். அது உனக்குப் பொருத்தமே ஆகும். (எல்லோரையும் நோக்கி) உங்கள் அனைவரையும் எனது போர்க் கப்பலுக்கு விருந்துண்ண வருமாறு அழைக்கிறேன். வாருங்கள் பிரபுக்களே!

சீசர், அந்தோ, லெப்பிடஸ் : வழிகாட்டிச் செல்லுங்கள்... வருகிறோம்...

பாம்பே : வாருங்கள் ... (எல்லோரும் செல்கின்றனர், மெனஸ், எனோபார்பஸ் இருவரும் தங்குகின்றனர்)

மெனஸ் : (மனத்துக்குள்) பாம்பே! உங்கள் தந்தையாராக இருந்தால் இந்த ஒப்பந்தத்துக்கு இசைந்திருக்க மாட்டார்—(எனோபார்பஸை நோக்கி) ஐயா!... உங்களை நான் முன்பே சந்தித்திருக்கிறேன்...

எனோ : கடலில் என்று நினைக்கிறேன்.

மெனஸ் : ஆம்...

எனோ : நீங்கள் கடற்போரில் திறம்படப் பணியாற்றினீர்கள்...

மெனஸ் : நீங்களும் நிலத்தில் நன்கு போராடினீர்கள்.

எனோ : என்னைப் புகழும் எந்த மனிதனையும் நான் புகழ்வேன். ஆனால் நிலத்தில் நான் செய்த போர்த் திறனை யாராலும் மறுக்க முடியாது.

மெனஸ் : நான் கடற்போரில் காட்டிய ஆற்றலையும் யாராலும் மறுக்க முடியாது.

எனோ : ஆனால் உங்கள் நன்மையைக் கருதி நீங்கள் சில உண்மைகளை மறைக்க வேண்டும். நீங்கள் கடற் கொள்ளையர்கள் அல்லவா?

மெனஸ் : நீங்கள் நிலக் கொள்ளையர்கள் அல்லவா!

எனோ : நான் அதை மறுக்கிறேன். ஆனால் உங்கள் நேசக் கரத்தை நீட்டுங்கள் மெனஸ்! நம் கண்களுக்குச் சிறைப் பிடிக்கும் அதிகாரம் இருந்தால் இப்பொழுது இரண்டு திருடர்களைப் பிடித்துவிட முடியும்.

மெனஸ் : எல்லா மனிதர்களும் தோற்றத்தில் நேர்மை யாளர்களாகத்தான் காட்சியளிக்கிறார்கள். அவர்களது கைகள் என்ன செய்த போதிலும்...

எனோ : ஆனால் எந்த அழகான பெண்ணும் இயற்கை யான முகத்தைக் காட்டுவதில்லை!

மெனஸ் : கேலிக்குச் சொல்லவில்லை—அவர்கள் இதயத் தைத் திருடுகிறார்கள்.

எனோ : நாங்கள் இங்கே உங்களுடன் சண்டை போட வந்தோம்.

மெனஸ் : என்னைப் பொறுத்தவரை, இந்தப் போரானது வெறும் விருந்தாக மாறியது கண்டு பெரிதும் வருத்தப் படுகிறேன். பாம்பே, தேடி வந்த சீதேவியை எட்டி உதைத்து விட்டார்.

எனோ : அவன் போர் புரிந்தால் தோல்விதான் மிஞ்சும். பிறகு அவன் எவ்வளவுதான் அழுதாலும் இப்பொழுது கிடைத்ததும் கிடைக்காது.

மெனஸ் : நீங்கள் சொல்வது சரி. நாங்கள் இங்கே அந்தோனியை எதிர்பார்க்கவில்லை. உங்களை ஒன்று

கேட்க விரும்புகிறேன். அவர் கிளியோபாட்ராவைத் திருமணம் செய்து கொண்டாரா?

எனோ : சீசரின் சகோதரி ஆக்டேவியா...

மெனஸ் : ஆம். அவள் கெபஸ்மார்செலஸ் என்பவரின் மனைவியாவாள்.

எனோ : ஆனால் அவள் இப்பொழுது அந்தோனியின் மனைவி!

மெனஸ் : தாங்கள் என்ன சொல்கிறீர்கள்?

எனோ : நான் சொல்வது உண்மை!

மெனஸ் : அப்படியானால் அந்தோனியும் சீசரும் எக்காலத்துக்கும் இணைக்கப்பட்டு விட்டனரா?

எனோ : என்னால் அப்படிச் சொல்ல முடியாது...

மெனஸ் : இந்தத் திருமணம் நடந்ததற்குக் காரணம் அன்பு அன்று; அரசியல் என்று கருதுகிறேன்.

எனோ : நானும் அப்படியே கருதுகிறேன். ஆனால் ஒன்று சொல்கிறேன். அவர்களை ஒன்றாக இணைக்கும் இந்த உறவே பிறகு அவர்களை அழிக்கும் யமனாகப் போகிறது. அதை நீங்கள் காண்பீர்கள். ஆக்டேவியா ஒரு புனிதமான அமைதியான பெண்மணி ஆவாள்!

மெனஸ் : அத்தகைய தன்மை இல்லாதவர்கள் விரும்ப மாட்டார்கள். அத்தகைய மனிதன்தான் அந்தோனி! அவன் விரைவில் கிளியோபாட்ராவிடம் ஓடுவான். அதனால் ஆக்டேவியா விடும் பெருமூச்சு சீசரின் சினத்தினைக் கிளறும். நான் முன்பு சொன்னது போல அவர்களை இணைத்த அதே உறவு அவர்களை அழிக்கும்! அந்தோனி தன் அன்பைச் செலுத்தும் இடத்

தில்தான் செலவழிப்பான். அவன் ஆக்டேவியாவுக்கு இட்ட தாலி அரசியல் கயிறே ஆகும்! அன்புக் கயிறு அன்று!

மெனஸ் : அப்படித்தான் நடக்கும்...ஐயா! வாருங்கள்... கப்பலுக்கு வருகிறீர்களா? உங்களுக்கு விருந்தளிக்க விரும்புகிறேன்.

எனோ : நிச்சயம் விருந்துண்பேன். நாங்கள் எகிப்தில் நிறையக் குடித்துத் தொண்டையை நனைத்துப் பழகியவர்கள்.

மெனஸ் : வாருங்கள்...செல்வோம்...(போகின்றனர்)

## காட்சி : 7

இடம் : பாம்பேயின் போர்க்கப்பல்.

[இசை ஒலிக்கிறது. விருந்து முடிந்ததும் ஏவலர் சிலர் மது, பழம் முதலியவற்றை ஏந்தியவாறு வருகின்றனர்.]

முதல் வேலையாள் : மனிதா! அவர்கள் இங்கே வருவார்கள். ஒப்பந்தத்தில் 'உள்ள' சில பகுதிகள் ஏற்கெனவே திருப்தி அளிக்கவில்லை. மேலும் சாதாரண நிகழ்ச்சிகூட எல்லாவற்றையும் தலைகீழாக மாற்றி விடும்.

இரண்டாம் வேலையாள் : லெப்பிடஸ் மிகுதியாகக் குடித்து விட்டார்.

முதல் : அவர்கள் அவனைப் போட்டி போட்டுக் குடிக்க வைத்து விட்டார்கள்.

இரண்டாம் : அவர்கள் அவனை மேலும் மேலும் குடிக்கத் தூண்டுகிறார்கள். ஆனால் அவனோ "வேண்டாம் வேண்டாம்" என்று சொல்லிவிட்டுத் தட்ட முடியாமல் குடித்து விடுகிறான்.

முதல் : அதனால் அவனுக்கும் அவன் விருப்பத்துக்கும் இடையே பெரும் போராட்டம் நிகழ்கிறது.

இரண்டாம் : ஏன்...பெரும் பதவியிலிருந்து எதுவும் செய்ய முடியாமலிருப்பதனால் என்ன பயன்? பயனற்ற வாளை வைத்திருப்பதைவிட ஒரு வைக்கோலை வைத்திருப்பதில் நான் மகிழ்ச்சி அடைவேன்.

முதல் : நாடக அரங்கில் தோன்றி நடிக்காமல் சும்மா இருப்பது, விழி இல்லாத கண்ணைப் பெற்றிருப்பதற்குச் சமமாகும். அது அழகையும் கெடுக்கிறது. அது போன்றதுதான் லெப்பிடஸ் நிலையும்! பாவம், "மூவர் குழுவில் இருந்தும் அதிகாரமற்றவராக இருக்கிறார்...

(முரசு முழங்குகிறது. சீசர், அந்தோனி, லெப்பிடஸ், பாம்பே, அக்ரிப்பா, மெசினஸ், எனோபார்பஸ், மெனஸ் மற்றும் பலர் வருகின்றனர்.)

அந்தோ : (சீசரிடம்) ஐயா! அவர்கள் இவ்வாறு செய்கிறார்கள். நைல் நதியின் நீர் அளவைப் பிரமிட்டில் செய்துள்ள சில குறிகளிலிருந்து அவர்கள் கண்டு கொள்கிறார்கள். அதன் உயரம், தாழ்ச்சி, மட்டம் ஆகியவற்றைக் கொண்டு பஞ்சத்தையோ, வளத்தையோ முன்கூட்டி அறிகிறார்கள். நைல் நதியின் வெள்ளப் பெருக்கு வளத்தைக் குறிப்பிடும். வெள்ளம் பெருகும்பொழுது உழவர்கள் வயலில் விதைகளைத் தூவி, விரைவில் அறுவடை செய்கிறார்கள்.

லெப்பிடஸ் : அங்கே ஆச்சரியான பாம்புகள் உள்ளனவாமே!

அந்தோ : ஆம் லெப்பிடஸ்!

லெப்பிடஸ் : எகிப்தியப் பாம்புகள் எல்லாம் சூரிய ஒளி படிந்த மண்ணை உண்டு வாழ்கின்றனவாமே. முதலைகளும் அப்படித்தானாமே வாழ்கின்றன.

அந்தோ : ஆம் அப்படித்தான்.

பாம்பே : அமருங்கள்...சிறிது மது அருந்தலாம். லெப்பிடசின் நலத்துக்காக அருந்துவோம்.

லெப்பிடஸ் : நான் இருக்க வேண்டிய அளவுக்கு நலமாக இல்லை. ஆனால் நான் ஒரு பொழுதும் கிடைத்த மதுவை விடமாட்டேன்.

எனோ. : நீங்கள் நன்கு உறங்கினால்தான் உங்களது மது மயக்கம் தீரும். அதுவரை நீங்கள் அந்த மயக்கத்திலே இருப்பீர்கள்.

லெப்பிடஸ் : இல்லை. நிச்சயமாக இல்லை. எகிப்திய மன்னர்களான டாலமியர்கள் கட்டிய பிரமிடுகள் அருமையான காட்சிப் பொருள்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அது பற்றிய கருத்து வேறுபாடு யாருக்கும் இல்லை.

மெனஸ் : (பாம்பேயிடம் தனியே) பாம்பே, ஒரு வார்த்தை.

பாம்பே : (தனியே) என் காதுக்குள் சொல்...என்ன செய்தி?

மெனஸ் : (பாம்பேயிடம் தனியே) தலைவா! உங்கள் இடத்தைவிட்டுச் சற்றுத் தனியே வாருங்கள். நான் சொல்வதைக் கேளுங்கள்...

பாம்பே : (மெனசிடம் தனியே) ஒரு வினாடியில் வருகிறேன். (மற்றவர்களிடம்) இந்த மது லெப்பிடசுக்கு உரியது!

லெப்பிடஸ் : (அந்தோனியிடம்) உங்கள் முதலை பார்ப்பதற்கு எப்படியிருக்கும்?

அந்தோ : (கேலியாக) எங்கள் முதலை பார்ப்பதற்கு முதலையைப் போலவே இருக்கும். அதன் அகலம் அதற்குரிய அளவு இருக்கும். அதன் உயரமும் அப்படியே. அது தன் உறுப்புக்களால் நகரும். அது தான் உண்ணும் பொருள்களால் உயிர் வாழும். அது சாகும்பொழுது வேறு பிராணிகளின் உடலில் அதன் உயிர் சேரும்.

லெப்பிடஸ் : முதலை என்ன நிறம்?

அந்தோ : முதலை அதன் சொந்த நிறமாக இருக்கும்.

லெப்பிடஸ் : அது ஒரு வியப்பான பாம்பாகும்!

அந்தோ : ஆம். அதன் கண்ணீர் ஈரமாக இருக்கும்.

சீசர் : உங்கள் வர்ணனை லெப்பிடசுக்குத் திருப்தி அளிக்குமா?

அந்தோ : இந்த வர்ணனை அவருக்குத் திருப்தி அளிக்காவிட்டால் பாம்பேயின் மது திருப்தி அளிக்கும். அதுவும் திருப்தி அளிக்காவிட்டால் வேறு எதுவுமே அவருக்குத் திருப்தி அளிக்க முடியாது.

பாம்பே ; தனியே (மெனசிடம்) சொல்... சொல்... நீ சொல்ல வந்தது என்ன? விரைந்து சொல்... சீக்கிரம் திரும்பிச் செல். நான் வேண்டிய கோப்பை எங்கே?

மெனஸ் ; உங்கள் நன்மைக்காகவும், என் நன்றிக்காகவும் சொல்கிறேன். கேளுங்கள்...எழுந்து வாருங்கள்.

பாம்பே : (மெனசிடம் தனியே) உனக்கு என்ன வைபத்தியமா? என்ன செய்தி? சொல்?... எழுந்து தனியிடம் நோக்கிச் செல்கிறான்.)

மெனஸ் : நான் இதுவரை உங்களது நன்றியுள்ள பணியாளனாக வேலை பார்த்திருக்கிறேன்.

பாம்பே : ஆமாம். நம்பிக்கையோடு பணி செய்தாய். இன்னும் என்ன சொல்ல வேண்டும்?—(பிரபுக்களை நோக்கி) பிரபுக்களே! மகிழ்ச்சியாக இருங்கள்...

அந்தோ : லெப்பிடஸ்! மதுவில் மூழ்கி விடாதீர்கள், எச்சரிக்கையாக இருங்கள்.

மெனஸ் : (பாம்பேயிடம்) நீங்கள் உலகத்தின் ஒரே மன்னனாக ஆக விரும்புகிறீர்களா? இரண்டாம் முறையாகக் கேட்கிறேன்.

பாம்பே : அது எப்படி முடியும்?

மெனஸ் : எனது திட்டத்தைக் கேளுங்கள். நீங்கள் என்னைச் சாதாரணமானவனாகக் கருதலாம். ஆனால் என்னால் உங்களுக்கு உலகத்தையே தரமுடியும்.

பாம்பே : (கேலியாக) நீ நன்றாகக் குடித்து விட்டாயா?

மெனஸ் : இல்லை பாம்பே! நான் ஒரு சொட்டு மதுகூடக் குடிக்கவில்லை. தாங்கள் மட்டும் துணிவோடு இருந்தால் நீங்கள்தான் மண்ணுலகின் மன்னன் ஆவீர்கள். கடல் சூழ்ந்த உலகமும், வான் தோய்ந்த பூமியும் உங்கள் கைக்கு வந்துவிடும்!

பாம்பே : அந்தத் திட்டம் என்ன? தெளிவாகச் சொல்.

மெனஸ் : ரோமின் ஆட்சியாளர்கள் மூவரும் உங்களது இந்தக் கப்பலில்தானே இருக்கின்றனர். நான் நங்கூரத்தை எடுக்கிறேன். கப்பல் நடுக்கடலுக்குச் சென்று விடும். உடனே நாம் எல்லோரும் அவர்கள்மீது பாய்ந்து, கழுத்தை அறுத்துக் கொன்றுவிடுவோம். பிறகு உலகம் உங்கள் கைக்கு வந்துவிடும்.

பாம்பே : ஆ!... இந்தத் திட்டத்தை நீ முன்கூட்டியே செய்திருக்க வேண்டும்; என்னிடம் சொல்லியிருக்கக் கூடாது. நான் செய்தால் அது துரோகம்; நீ செய்தால் அது சேவை! எனது மானத்தை இழந்து நான் இலாபம் பெறக் கூடாது. உனது திட்டம் என் மானத்தைப் போக்கும்! உனது திட்டத்தை உன் நாக்கு சொல்லியதற்காக வருந்து! எனக்குத் தெரியாமலே இது நடந்திருந்தால் "நல்ல செய்கை" என்று நான் பிறகு பாராட்டியிருப்பேன். ஆனால் இப்பொழுது நான் அதைக் கண்டிக்கக் கடமைப்பட்டவன். இனி அதை மறந்துவிடு! குடித்து மகிழ்!

மெனஸ் : (தனக்குள் தனியே) இவ்வாறு வீழ்ச்சியடைந்த அதிர்ஷ்டக் கட்டையான உங்களை நான் இனிப் பின்பற்ற முடியாது. வந்த வாய்ப்பைத் தவற விட்டவர்கள் மீண்டும் அத்தகு வாய்ப்பைப் பெற முடியாது.

பாம்பே : (பிரபுக்களிடம்) லெப்பிடஸ் நலம் பெறுக!

அந்தோ : லெப்பிடசைக் கடற்கரைக்குத் தூக்கிச் செல்லுங்கள். பாம்பே! லெப்பிடசுக்காக நான் உங்கட்கு நன்றி செலுத்துகிறேன்.

எனோ : மெனஸ்! வணக்கம்!

மெனஸ் : எனோ பார்பஸ்! நல்வரவு.

பாம்பே : கிண்ணங்கள் நிறையும் வரை மதுவை நிரப்புங்கள்.

எனோ : (வேலைக்காரன் ஒருவன் லெப்பிடஸைத் தூக்கிச் செல்கிறான். அவனைச் சுட்டிக் காட்டி) மெனஸ்! அதோ ஒரு பலசாலி இருக்கிறான்.

மெனஸ் : எவ்வாறு?

எனோ : ரோமப் பேரரசைத் தாங்கும் மூவரில் ஒருவனை அவன் தூக்கிச் செல்கிறான் அல்லவா? ஆகவே அவன் பலசாலிதானே!

மெனஸ் : மூன்றில் ஒரு பகுதி குடித்திருக்கிறதா? அப்படியானால் அதை வண்டியில் வைத்து அனுப்பினால் உருளுவது எளிதாயிருக்குமே.

எனோ : நன்கு குடியுங்கள். நாடு மகிழ்ச்சியாக இருக்க அனுமதியுங்கள்.

மெனஸ் : வருக!

பாம்பே : (அந்தோனியிடம்) எங்கள் விருந்து அலெக்சாண்டிரியாவில் நடந்தது போல் அவ்வளவு சிறப்புடையதன்று.

அந்தோ : ஆனால் அதை அடுத்து இருக்கிறது. எல்லோருக்கும் மது கொடுங்கள். இதோ சீசர் இருக்கிறார்.

சீசர் : வேண்டாம்...அதிகம் குடித்தால் மூளை குழம்பி விடும். அதிகம் துலக்கினால் பொருள்கள் அழிந்து விடும்.

அந்தோ : உலகத்தோடு ஒட்ட ஒழுகுங்கள். காலத்தின் குழந்தையாக மாறுங்கள்.

சீசர் : ஒரே சமயத்தில் அதிகம் குடிப்பதைவிட நான்கு நாட்களுக்குக் குடிக்காமல் இருப்பதையே நான் விரும்புவேன்.

எனோ : ஆ... என் இனிய அரசே! (அந்தோனியை நோக்கி) நம் குடியைக் கொண்டாட இப்பொழுது எகிப்திய நடனம் ஆடுவோமே.

பாம்பே : நல்லது. அப்படியே செய்வோம்.

இந்தோ : வாருங்கள்...நாமெல்லாம் கைகோர்த்து ஆடுவோம்...மது நம் மூளையை மயக்கி அறிவைக் கலக்கிக் கீழே தள்ளும்வரை ஆடுவோம்.

எனோ : எல்லோரும் கைகோர்த்துக்கொள்ளுங்கள். இனிமையான பாடல்களை உயர்த்திப் பாடுங்கள். ஆட்டத்துக்கு ஏற்ப நில்லுங்கள். பிறகு பையன் உரக்கப் பாடட்டும்.

[இசைப்பாடல் ஒலிக்கிறது. எல்லோரையும் கைசேர்த்து எனோ பார்பஸ் நடனத்துக்கு ஏற்றவகையில் நிறுத்துகிறான்.]

பாட்டு

வருக! மதுக்கடவுளே! மன்மதனே வருக!
உன் காட்சியில் எங்கள் துயரம் கரைகிறது!
உன் பழங்களால் எங்கட்கு முடிசூட்டுகிறாய்
கோப்பை தா! உலகம் சுழலும் வரை தா!
கோப்பை தா! உலகம் சுழலும் வரை தா!

சீசர் : போதும்...இனி என்ன வேண்டும்? பாம்பே! பாம்பே! இரவு வணக்கம்! சகோதரா! (அந்தோனி!) களியாட்டம் போதும். நமது கடமைக்கு முன் இந்தச் செய்கைகள் நாணத்தக்கன. இனிய பிரபுக்களே! நாம் பிரிந்து செல்வோம். நாம் நமது முகங்கள் சிவக்கக் குடித்து விட்டோம். வலிமைவாய்ந்த எனோபார்பஸ் மதுவின் வலிமைக்கு அடிபணிந்துவிட்டான். குடி-

போதையில் என் நாக்கு குழறுகிறது. மது நம்மை யெல்லாம் கோமாளிகளாக மாற்றியிருக்கிறது. இனிப் பேசுவதற்கு என்ன இருக்கிறது? இரவு வணக்கம்! இனிய அந்தோனி! கை கொடுங்கள்.

பாம்பே : நானும் உங்களுடன் கடற்கரை வரை வருகிறேன்.

அந்தோ : அப்படியே செய்க...உங்கள் கையைக் கொடுங் கள்.

பாம்பே : ஓ! உங்களிடம் என் தந்தையின் வீடுஇருக்கிறது. பரவாயில்லை...நாம் இப்பொழுது நண்பர்கள். வாருங்கள்...படகுக்குச் செல்வோம்...

எனோ : விழுந்துவிடாமல் எச்சரிக்கையாகச் செல்லுங்கள். (எல்லோரும் செல்கின்றனர். எனோபார்பஸ், மெனஸ் இருவரும் தங்குகின்றனர்)

எனோ : மெனஸ்! நான் கரைக்குப் போகமாட்டேன்.

மெனஸ் : வேண்டாம்...எனது அறைக்குச் செல்வோம்... முரசு, மத்தளம், குழல், எல்லாம் ஒலிக்கும், என்ன? இந்தப் "பெரிய மனிதர்கள்" பிரிந்து செல்கின்ற பொழுது எழும் இசை வெள்ளத்தைக் கடல் தேவதை நெப்டியூன் கேட்டு மகிழட்டும்! வாத்தியங்கள் முழங் கட்டும்!! (இன்னிசை வாத்தியங்கள் முழங்குகின்றன)

எனோ : ஓ!...என் குல்லா அங்கே கிடக்கிறது.

மெனஸ் : ஓ!...தளபதி! என்னுடன் வாருங்கள்.

(இருவரும் செல்கின்றனர்)

## களம் 3 காட்சி—1

இடம் : சிரியாவில் ஒரு மைதானம்.

[வெற்றிமுரசு முழங்குகிறது. வெண்டிடியஸ் வெற்றித் தளபதியாக வருகிறான். சிலியஸ் மற்றும் பல அதிகாரிகள், படைவீரர்கள் வருகின்றனர். பகோரஸ் என்பவனின் பிணம் தூக்கி வரப்படுகிறது]

வெண்டிடியஸ் : இப்பொழுது ஏ போர்க்கோலம் பூண்ட பார்த்திய நாடே! வீழ்ச்சி பெற்றாயா? முன்பு தலையிழந்த ''மார்க்கஸ் கிராசஸ்'' சாவுக்கு இப்பொழுது பழிவாங்கிவிட்டேன். அரச குமாரனின் சடலத்தை நம் படைகளுக்கு முன்னால் கொண்டுவாருங்கள். ஏ ஒரோட்ஸ்! நீ முன்பு தலை பறித்த மார்க்கஸ் கிராசஸ் சாவுக்காக இப்பொழுது உன் மகன் ''பகோரஸ்'' தலை பறித்துப் பழி வாங்கிவிட்டேன்.

சிலியஸ் : புகழ்வாய்ந்த வெண்டிடியஸ்! உங்கள் கத்தி பார்த்திய இரத்தத்தில் தோய்ந்திருக்கும்போதே புறங்காட்டும் அவர்களை விரட்டிச் சென்று உங்கள் திறம் காட்டுங்கள். மெடியா, மெசபடோமியா வழியாக ஓடும் அவர்களை மேலும் விரட்டுங்கள். அப்பொழுது உங்களது தலைவர் அந்தோனி உங்களை வெற்றித் தேரில் அமர்த்தி வாகைமாலை சூட்டுவார்.

வெண்டி : ஓ! சிலியஸ்! சிலியஸ்!! போதுமான அளவுக்கு நான் செய்துவிட்டேன். நன்றாகக் கவனி...கீழ்ப் பதவியில் இருப்பவர்கள் மாபெரும் காரியங்களைச் சாதிக்கக் கூடாது. சிலியஸ்! புரிந்து கொள். நாம் பணியாற்றும் நம் தலைவர்கள் தொலைவில் இருக்கும்பொழுது நாம் மாபெரும் சாதனைகளை ஆற்றி மகத்தான புகழ்

பெறுவதைவிட அவற்றைச் சாதிக்காமல் இருப்பதே நல்லது. சீசரும் அந்தோனியும் மாபெரும் சாதனை களைத் தம் பேரால் ஏற்படுத்தியதைவிடத் தம் தலைவர்கள் மூலமாகவே ஏற்படுத்தியிருக்கிறார்கள். என்னைப்போலவே சிரியாவில் ஒரு தளபதியாகப் பணியாற்றிய "சாசியஸ்" என்பவன் இமைக்கும் நேரத்தில் எண்ணிலா வெற்றிகளைப் பெற்றான்; ஆனால், அதே நேரத்தில் அந்தோனியின் நல்லெண் ணத்தையும் நம்பிக்கையையும் இழந்தான். போர்க் களத்தில் தலைவனைவிட வெற்றிகளைப் பெறும் தளபதி தலைவனுக்கும் தளபதியாக ஆகிவிடுகிறான். வீரனுக்கு உரிய இலக்கணமாகிய பேராசையால் வெற்றி மேல் வெற்றி பெற்று இலாபமடைவதற்குப் பதிலாக நட்டமடைகிறான், புகழ் இழக்கிறான். நான் அந்தோனிக்கு இன்னும் பல வெற்றிகளை ஈட்டமுடியும் ஆனால் அது அவனுக்குப் பிடிக்காது. அவனுக்கு ஏற்படும் பொறாமை அருவருப்பு எனது வாகையைச் சோகை ஆக்கிவிடும்.

சிலியஸ் : வெண்டிடியஸ்! தங்கள் அறிவை நான் பெரிதும் மெச்சுகிறேன். அறிவு இல்லாவிட்டால் வீரனுக்கும் கத்திக்கும் வித்தியாசமே கிடையாது. நீங்கள் அந்தோனிக்கு வெற்றிச் செய்தி அனுப்புவீர்களா?

வெண்டிடியஸ் : அவர் பேரால், அவர் கொடியின் கீழ் அவர் உணவை உண்ணும் வீரர்களால் எவ்வாறு வெற்றி கொள்ளப்பட்டது என்பதையும், என்றும் பணியாத பார்த்தியப் படைகளை எப்படிப் புறங்காட்டினோம் என்பதையும் பணிவாகத் தெரிவிப்பேன்.

சிலியஸ் : அவர் இப்பொழுது எங்கிருக்கிறார்?

வெண்டிடியஸ் : அவர் ஏதென்சுக்குச் செல்லவிரும்புகிறார். திரைப் பொருளோடு நாம் அவரை விரைந்து எங்கே

சந்திப்பது என்பதுபற்றி முடிவுசெய்ய வேண்டும்...பிறகு சந்திப்போம்.

[போதல்]

## காட்சி—2

இடம் : ரோம்—சீசரின் அரண்மனை முற்றத்தில் ஓர் அறை.

[ஒரு வாயில் வழியே அக்ரிப்பாவும், மற்றொரு வாயில் வழியே எனோபார்பசும் வருகின்றனர்.]

அக்ரிப்பா : என்ன? மைத்துனர்களாகிய அந்தோனியும், ஆக்டேவியஸ் சீசரும் விடைபெற்றுக் கொண்டார்களா?

எனோபார்பஸ் : அவர்கள் பாம்பேயை அனுப்பிவிட்டார்கள். அவன் போய் விட்டான். ஆனால் நம்மவர்கள் மூவரும் பத்திரத்தில் முத்திரை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ரோமைவிட்டுப் பிரிவதற்காக ஆக்டேவியா கண்ணீர் வடிக்கிறாள். சீசர் கலங்கியிருக்கிறார். மெனஸ் சொன்னது போல, பாம்பேயின் விருந்து முதல் லெப்பிடஸ் ஒருவித மயக்கத்தில் இருக்கிறார்.

அக்ரிப்பா : லெப்பிடஸ் மிகவும் பெருந்தன்மை வாய்ந்தவர்!

எனோ : ஆம்... மிகவும் நல்லவர்! அவர் சீசரை மிகவும் நேசிக்கிறார்...

அக்ரிப்பா : இல்லை—... அவர் அந்தோனியைத்தான் பெரிதும் நேசிக்கிறார்...

எனோ : ஏன்?... சீசர்— வெற்றிக் கடவுளாயிற்றே!

அக்ரிப்பா : அந்தோனி மட்டும் என்ன? அவர் வெற்றிக் கடவுளுக்கும் கடவுளாயிற்றே!

எனோ : சீசரைப்பற்றிப் பேசுங்கள்... எப்படி?... சீசர்... ஈடு இணையற்றவர்!

அக்ரிப்பா : அந்தோனி!... ஓர்... அரேபியப் பறவை!

எனோ : சீசரின் மிகப் பெரிய புகழ் என்னவென்றால் அவர் சீசர் என்பதுதான்!

அக்ரிப்பா : உண்மைதான்... லெப்பிடஸ் இருவரையும் மிக உன்னதமாகப் புகழ்ந்தார்.

எனோ : ஆனாலும் அவர் சீசரை அதிகமாக நேசிக்கிறார். இருந்தும் அந்தோனியையும் நேசிக்கிறார். மனம், நாக்கு, எண், எழுத்து, பாடகர், கவிஞர்கள் ஆகியோர் பாடவோ, வர்ணிக்கவோ முடியாத அளவுக்கு அவர் அந்தோனியை நேசிக்கிறார். ஆனால் சீசருக்கு அவர் அடி பணிகிறார்; அடிபணிகிறார். ஆச்சரியப்படுகிறார்.

எனோ : இருவரும் அவரது இறகுகள்! அவர்தான் வண்டு. (முரசு முழங்குகிறது)... ஓ... அக்ரிப்பா... முரசு முழங்கு கிறது... குதிரையை நோக்கிச் செல்ல வேண்டும்... வருகிறேன். வணக்கம்!

அக்ரிப்பா : நண்பா! உனக்கு நலம் விளைக! வாழ்த்துக் கள்! வணக்கம்.

(சீசர், அந்தோனி, லெப்பிடஸ், ஆக்டேவியா ஆகியோர் வருகின்றனர். அந்தோனியும், ஆக்டேவியாவும் ஏதென்சுக்கு விடைபெறும் கட்டம்.)

அந்தோனி : சீசர்!... தாங்களும் என்னோடு நீண்ட தூரம் வந்து தொல்லைப்பட வேண்டாம்.

சீசர் : என் சகோதரியை அழைத்துச் செல்லுவதன் மூலம் நீங்கள் என்னிடமிருந்து ஒரு பெரும் பகுதியை எடுத்துச் செல்கிறீர்கள். அதன் மூலம் என்னை நன்கு பயன் படுத்திக் கொள்ளுங்கள்... அருமைச் சகோதரி! உன்னைப் பற்றி நான் எவ்வாறெல்லாம் கற்பனை செய்து வைத்திருக்கிறேனோ அவ்வாறு ஒரு நல்ல மனைவியாக நடந்து கொள். என் உறுதிமொழிகளைக் காப்பாற்று பெருந்தன்மை மிக்க அந்தோனி! நம் அன்பைப் பிணைக்கும் இந்த உறவுக் கயிறு, அன்பை முறிக்கும் கயிறாக மாறிவிடாதிருக்கட்டும்! நாம் நம் அன்பைக் காக்க விரும்பாவிட்டால், அந்த அன்பைப் பலப்படுத்த இந்த உறவையே ஏற்படுத்தியிருக்க வேண்டியதில்லை.

அந்தோ : அவநம்பிக்கையால் எனக்கு அருவருப்பை ஊட்டாதீர்கள்.

சீசர் : நான் சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டேன்.

அந்தோ : நீங்கள் அஞ்சுவதற்குக் காரணமே இல்லை. கடவுள் உங்களுக்கும், ரோமனியர்களுக்கும் அருள் புரியட்டும்! நாம் இங்கே விடைபெறுவோம்.

சீசர் : வணக்கம்! அன்புச் சகோதரி! வணக்கம்! நீங்கள் பயணம் செல்லும் வழியில் நீரும் காற்றும் உங்கட்கு நிலையான நலம் பயக்கட்டும்! வணக்கம்!

ஆக்டேவியா : அன்புச் சகோதர!

அந்தோ : கோடை மழைபோலப் பொழியும் அவளது கண்கள் குளமாகிவிட்டன. அது அன்பு ஊற்று! ஆக்டேவியா கலங்காதே! மகிழ்ச்சியாய் இரு!

ஆக்டேவியா : (சீசரிடம்) அரசே! என் கணவரின் வீட்டை நன்கு கவனித்துக் கொள்ளுங்கள். மேலும்...

சீசர் : என்ன ஆக்டேவியா!

ஆக்டேவியா : உங்கள் காதில் நான் சொல்லுகிறேன்...

அந்தோ : அவளது உள்ளத்தில் உணர்ச்சிகள் கொந்தளிப்ப தால் அவற்றை வெளிப்படுத்தும் ஆற்றலை அவளது உள்ளம் இழந்திருக்கிறது. அதனால் நாக்குத் தடுமாறு கிறது.

எனோ : (அக்ரிப்பாவிடம் தனியே) சீசர் அழுவாரா?

அக்ரிப்பா : (எனோபார்பசிடம் தனியே) அவர் முகத்தில் துயர மேகம் சூழ்ந்திருக்கிறது.

எனோ : (அக்ரிப்பாவிடம் தனியே) குதிரைக்கு அது சரி. மனிதனாய் இருந்தும் அவரால் அழமுடியுமா?

அக்ரிப்பா : (தனியே) ஏன்? எனோபார்பஸ்! ஜூலியஸ் சீசர் இறந்து கிடந்ததைப் பார்த்த பொழுது அந்தோனி அழுது புரளவில்லையா? பிலிப்பி போர்க்களத்தில் புருட்டஸ் மாண்ட பொழுது அந்தோனி கண்ணீர் வடிக்கவில்லையா?

எனோ : (தனியே) உண்மைதான்... அந்த ஆண்டு அவர் நிறைய அழுதார்... அவர் விரும்பியது நடந்த பொழுதும் அவர் அழுதார்...

சீசர் : (ஆக்டேவியாவிடம்)... இனிய ஆக்டேவியா! உனக்கு நான் அடிக்கடி கடிதம் எழுதுகிறேன். உன்னை நான் நினையாத நாளே கழியாது.

அந்தோ : வாருங்கள் ... அன்பரே! வாருங்கள்... அன்புப் போட்டியில் உங்களோடு நான் போராடுவேன். (சீசரைத் தழுவி) வாருங்கள்...இப்பொழுது நான் ஒரு

மல்லனைப் போல உங்களைத் தழுவுகிறேன். இப்பொழுது உங்களைக் கடவுளின் அருளுக்கு விடுகிறேன்.

சீசர் : வணக்கம்! உங்கட்கு மகிழ்ச்சி விளைக!

லெப்பிடஸ் : (அந்தோனியிடம்) உங்கட்கு எல்லா நட்சத்திரங்களும் ஒளி வீசி வழிகாட்டட்டும்!

சீசர் : வணக்கம்.

அந்தோனி : வணக்கம்.

[முரசு முழங்குகிறது. சீசர், லெப்பிடஸ் முதலியவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு அந்தோனியும், ஆக்டேவியாவும் ஏதென்சுக்குத் தனிக்குடித்தனம் நடத்தச் செல்கின்றனர்.)

## காட்சி — 3

இடம் : அலெக்சாண்டிரியா, கிளியோபாட்ரா வின் அரண்மனை.

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ், அலெக் சாஸ் ஆகியோர் வருகின்றனர்]

கிளியோ : எங்கே அந்தப் பயல்?

அலெக்சாஸ் : அவன் வரப் பாதி பயப்படுகிறான்.

கிளியோ : முட்டாள்! முட்டாள்!!
(பழைய தூதன் வருகிறான்)...வா...வா...

அலெக்சாஸ் : அரசியே! தாங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் ஒழியத் தங்கள் முகத்தில் விழிக்க எமனும் அஞ்சுவான். குழந்தைகளைக் கொன்ற கொடியவனான ஹெராட் ஆப் ஜூரி என்பவனும் அஞ்சுவான்.

கிளியோ : அந்தோனி என் அருகில் இருந்தால் அந்த ஹெராட் ஆப் ஜூரியின் தலையையே கொண்டு வரச் சொல்வேன். ஆனால் இப்பொழுது நான் யாருக்கு அவ்வாறு ஆணையிட முடியும்? தூதனே! அருகில் வா...

தூதன் : அன்பான அரசியே!

கிளியோ : நீ ஆக்டேவியாவைப் பார்த்தாயா?

தூதன் : ஆம் தேவி!

கிளியோ : எங்கே?

தூதன் : ரோமில் பார்த்தேன். அவள் முகத்தைப் பார்த்தேன். சீசருக்கும் அந்தோனிக்கும் நடுவில் அவள் செல்லப் பார்த்தேன்.

கிளியோ : அவள் என்னைப் போல் உயரமா?

தூதன் : இல்லை தேவி!

கிளியோ : அவள் குரலைக் கேட்டாயா? அது குயில் மாதிரி இருக்கிறதா? கோட்டான் மாதிரி இருக்கிறதா?

தூதன் : கேட்டேன்...கோட்டான் மாதிரி இருக்கிறது.

கிளியோ : பரவாயில்லை...அவர் அவளை நீண்ட நாள் விரும்ப முடியாது.

சார்மியான் : விரும்புவதா! கடவுளே! அது நிச்சயம் முடியாது.

கிளியோ : சார்மியான்! அப்படித்தான் நானும் நினைக்கிறேன். மட்டமான குரல்! குட்டையான உருவம்! அவள் தோற்றத்தில் என்ன அரச கம்பீரம் இருக்கிறது? நினைத்துப் பார்...அவள் நடையைப் பார்த்தாயா?

தூதன் : அவள் ஊர்கிறாள். அவள் நிற்பதும் நடப்பதும் ஒன்று போலவே இருக்கிறது. அவள் உடலைக் காட்டுகிறாள்; உயிரில்லை. அவள் மனித உரு என்பதைவிட மண் சிலை என்பது பொருந்தும்.

கிளியோ : இது உண்மையா?

தூதன் : இல்லாவிட்டால் எனக்குப் பார்வையே இல்லை.

சார்மியான் : எகிப்தில் மூவர் சேர்ந்தாலும் இவனைவிட நன்றாகப் பார்க்க முடியாது.

கிளியோ : இவனுக்கு அறிவு இருக்கிறது. அது எனக்குத் தெரிகிறது ... அந்தோனியை அகப்படுத்தும் சக்தி ஆக்டேவியாவுக்கு இல்லை...இந்தப் பயலுக்கு எடை போடும் ஆற்றல் இருக்கிறது.

சார்மியான் : அருமை! அருமை!!

கிளியோ : அவளுக்கு என்ன வயதிருக்கும்?

தூதன் : தேவி! அவள் ஒரு விதவை...

கிளியோ : (கிண்டலாக) விதவையா ... சார்மியான்! கவனி...

தூதன் : அவளுக்கு வயது முப்பது இருக்கலாம்...

கிளியோ : அவள் முகம் உனக்கு நினைவிருக்கிறதா? அது நீளமா? உருண்டையா?

தூதன் : உருண்டை ....பார்க்க அருவருக்கத் தக்கது—

கிளியோ : உருண்டை முகம் உடையவர்கள் முட்டாள்கள் பரவாயில்லை...அவள் தலைமயிர்...என்ன நிறம்?

தூதன் : செம்பட்டை...அவள் நெற்றி மிகவும் குறுகியது.

கிளியோ : உனக்குப் பொன் பரிசு தருகிறேன்...முன்பு நான் உன்னை நடத்திய விதம் பற்றி வருந்தாதே. உனக்கு மீண்டும் வேலை தருகிறேன். தூது வேலைக்கு நீயே தகுந்தவன். போ...புறப்படத் தயார் செய்து கொள்—நமது கடிதம் தயாராகிறது.

[தூதன் போகிறான்.]

சார்மியான் : சரியான தூதன்...

கிளியோ : உண்மைதான் ... முன்பு இவனை அடித்து நொறுக்கியதற்கு வருந்துகிறேன்...இவன் சொல்வதைக் கேட்டால் ஆக்டேவியா நாம் அஞ்சத்தக்கவள் அல்லள்—

சார்மியான் : ஆம், தேவி—

கிளியோ : அந்தோனி அரச கம்பீரத்தை அறிவார்... ஆக்டேவியாவிடம் அது இல்லாததையும் விரைவில் அறிவார்...

சார்மியான் : அவர் உங்களுடன் நீண்ட நாள் இருந்ததால் அதனைப் பற்றி மிக நன்றாக அறிவார்.

கிளியோ : இன்னும் அவனை ஒன்று விசாரிக்க வேண்டும். சார்மியான்! ... சரி — பரவாயில்லை...அது ஒன்றும் முக்கியமில்லை...நான் கடிதம் எழுதும் இடத்துக்கு அவனை அழைத்து வா...எல்லாம் நன்கு நடக்கும்.

சார்மியான் : தங்கள் ஆணை அரசி! (போதல்)

## காட்சி—4

இடம் : ஏதென்சு. அந்தோனியின் அரண்மனையில் ஓர் அறை.

[அந்தோனியும் ஆக்டேவியாவும் வருகின்றனர். அந்தோனிக்கும் சீசருக்கும் இடையே பிளவு தோன்றியுள்ள சமயம்]

அந்தோனி : (கோபமாக) இல்லை...இல்லை ஆக்டேவியா... அதுமட்டுமல்ல...அது மன்னிக்கக் கூடியது...ஆனால் அதைவிட ஆயிரக்கணக்கான குற்றங்கள் இருக்கின்றன. ஒப்பந்தத்தை மீறி அவன் பாம்பேக்கு எதிராகப் புதிய போர்களை நடத்திருக்கிறான். அவனது திட்டங்களை மக்களுக்கு வெளியிட்டிருக்கிறான். என்னைப் பற்றித் தரக்குறைவாகப் பேசியிருக்கிறான். அவன் என்னைப் பெருமையாகப் பேச வேண்டிய சூழ்நிலையில் சிறுமையாகப் பேசியிருக்கிறான். என்னைப் புகழ வேண்டிய கட்டங்களில் மிகச் சாதாரண வார்த்தைகளால் புகழ்ந்திருக்கிறான். என்னைப் புகழ வேண்டிய உச்சகட்டம் வந்த பொழுதுகூட அவன் அதைப் புறக்கணித்திருக்கிறான்; வேண்டா வெறுப்பாகப் புகழ்ந்திருக்கிறான்.

ஆக்டேவியா : (வருத்தத்துடன்) பிரபு! அதை எல்லாம் நம்பாதீர்கள். நம்பினாலும் பொருட்படுத்தாதீர்கள்.

இத்தகைய பிளவு வரும்பொழுது நான்தான் உலகத்திலேயே துரதிர்ஷ்டம் பிடித்தவள். ஒருபக்கம் சகோதரன்; மறுபக்கம் கணவன்...இருவரில் யாருக்காக நான் வாதாடுவேன்? யாருக்காக வழிபடுவேன்? "என் கணவனைக் காப்பாற்றுங்கள்" என்று நான் கடவுளை வணங்கினால் அவர் சிரிக்கமாட்டாரா? "என் சகோதரனைக் காப்பாற்றுங்கள்" என்று நான் வணங்கினால் முதல் பிரார்த்தனை பொய்த்து விடாதா? கணவனும், சகோதரனும் வெல்ல நான் பிரார்த்தித்தால் இரண்டுமே ஒன்றை ஒன்று அழிக்காதா? இந்த இரண்டு துருவங்களுக்கு இடையே ஒரு வழியே கிடையாதா.

அந்தோ: அன்பே! உன் அன்பு யாராவது ஒருவருக்கு உரியதாகட்டும்! எனது மானம் அழிந்தால் நானே அழிகிறேன். மானம் அழிந்தபின் நான் உன் கணவனாக இருக்க முடியாது. நீ விரும்புவதால் எங்கள் இருவருக்கும் இடையே தூது செல்...இதற்கு இடையில் நான் போருக்குத் தயார் செய்கிறேன். அது அவன் புகழைக் குறைக்கும். உன் சகோதரனிடம் நீ விரைந்து செல். உன் விருப்பம் போல் செய்.

ஆக்டேவியா: நன்றி பிரபு! சக்தி வாய்ந்த ஜுபிடர் தெய்வம் என்னை மிகவும் பலமிழந்த பெண்ணாக்கி விட்டது. உங்கள் இருவருக்கும் இடையே சமாதானம் ஏற்படுத்தும் கருவியாக்கி விட்டது. நீங்கள் இருவரும் போரிட்டால் உலகம் பிளவு படும். எங்கும் பிணமலை குவியும்!

அந்தோ: அந்தப் பிளவுக்கு யார் காரணம் என்பதைத் தெரிந்து கொள். அது தெரியும் பொழுது காரணகர்த்தாவை வெறுக்கத் தயங்காதே. எங்கள் குற்றங்கள் சமமானவை அல்ல. எனவே உன் அன்பும் சமமாய் இருக்க வேண்டியதில்லை. அதிகக் குற்றவாளியைக்

குறைவாக நேசி. இப்பொழுதே புறப்படு...உனக்கு வேண்டிய பரிவாரங்களோடு செல். எவ்வளவு வேண்டுமானாலும் செலவழி...போ...(போகிறன்)

## காட்சி—5

இடம் : ஏதென்சு—அந்தோனியின் அரண்மனையில் மற்றோர் அறை.

[எனோபார்பஸ், ஈராஸ் இருவரும் வருகின்றனர்]

எனோபார்பஸ் : வா...ஈராஸ்! ஏதாவது செய்தி உண்டா?

ஈராஸ் : ஒரு புதிய செய்தி கிடைத்துள்ளது ஐயா!

எனோ : என்ன செய்தி அது?

ஈராஸ் : சீசரும் லெப்பிடசும் பாம்பேயை எதிர்த்துப் போர் தொடுத்திருக்கிறார்கள்.

எனோ : இது பழைய செய்தி...வெற்றி யாருக்கு?

ஈராஸ் : பாம்பேக்கு எதிரான போரில் சீசர் லெப்பிடசின் துணையைப் பயன்படுத்திப் பகையை அழித்தார். வெற்றி பெற்றதும் புகழிலோ, பயனிலோ லெப்பிடசுக்குப் பங்குதர மறுத்தார். அது மட்டுமன்று...லெப்பிடஸ் முன்பு பாம்பேக்கு எழுதிய கடிதங்களை ஆதாரமாகக் காட்டி அவர்மீது துரோகக் குற்றம் சாட்டி, அவரைக் கைது செய்துள்ளார். ஆகவே ''மூவர் குழுவில்'' ஒருவரான அந்தக் கோழை, லெப்பிடஸ் இப்பொழுது

சிறையில் வாடுகிறார். சாவுதான் அவருக்கு விடுதலை அளிக்கும்!

எனோ : அப்படியானால்...ஏ உலகமே! இப்பொழுது நீ இருவரைத்தான் பெற்றுள்ளாய்...உன் வளத்தை அவர்கட்கு இடையே வை. அவர்கள் ஒருவரை ஒருவர் அறைந்து விடுவர். அந்தோனி எங்கே...

ஈராஸ் : அவர் கோபத்தோடு தோட்டத்தில் உலவுகிறார்... பாதையில் கிடைக்கும் எல்லாவற்றையும் உதைத்துத் தள்ளுகிறார். ''முட்டாள் லெப்பிடஸ்'' என்று கத்துகிறார். பாம்பேயைக் கொன்ற சீசரின் அதிகாரியைக் கொல்லப் போவதாகச் சபதம் இடுகிறார்.

எனோ : நமது கப்பற்படை தயார்...!

ஈராஸ் : சீசரை இத்தாலியில் சந்திப்பதற்கு......நான் இன்னும் அதிகம் சொல்ல முடியும்......ஆனால் அந்தோனி உங்களை உடனே அழைக்கிறார். செய்திகளைப் பிறகு சொல்கிறேன்.

எனோ : அது ஒன்றும் முக்கியமில்லை. இருக்கட்டும்...... என்னை முதலில் அந்தோனியிடம் அழைத்துச் செல்.

ஈராஸ் : வாருங்கள்......செல்வோம்...(போதல்)

## காட்சி—6

இடம் : ரோம்—சீசரின் அரண்மனை.

[சீசர், அக்ரிப்பா, மெகினஸ் ஆகியோர் வருகின்றனர்.]

சீசர் : ரோமையும் நம்மையும் இழிவுபடுத்தி அவன் இதையெல்லாம் செய்திருக்கிறான். அலெக்சாண்டிரியா

வில் இன்றும் அதிகமாகவே செய்திருக்கிறான்— கேளுங்கள். சந்தைக்கடையில் வெள்ளிமேடையில் தங்க ஆசனத்தில் அவனும் கிளியோபாட்ராவும் பொது மக்கள் காண உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் காலடியில் சிசேரியன் (கிளியோபாட்ராவுக்கும் ஜூலியஸ் சீசருக்கும் பிறந்த மகன்) உட்கார்ந்திருந் தான். அவனை என் தந்தைக்குப் பிறந்தவன் என்று சொல்கிறார்கள். மேலும் அந்தோனிக்கும் கிளியோ பாட்ராவுக்கும் பிறந்த சட்டத்துக்குப் புறம்பான குழந்தைகளும் காலடியில் அமர்ந்திருக்க அவர்கள் கடைவீதியில் தர்பார் நடத்தியிருக்கிறார்கள். அவன் எகிப்தையே கிளியோபாட்ராவுக்கு வழங்கியிருக் கிறான். கீழ்சிரியா, சைப்ரஸ், லிடியா, ஆகியவற்றுக்குப் பேரரசியாக அவளை நியமித்திருக்கிறான்.

மெசீனஸ் : இதெல்லாம் பொதுமக்கள் முன்பா—?

சீசர் : ஆம்—பொது இடத்தில்தான் அவனது மக்களைப் பேரரசர்களாக அறிவித்தான். அலெக்சாண்டருக்கு மெடியா, பார்த்தியா, ஆர்மீனியா ஆகியவற்றை வழங்கியிருக்கிறான். அவனுக்கு சிரியா, சிலியா, போனிசியா ஆகியவற்றை வழங்கியிருக்கிறான். அவள் அன்று ''ஐசிஸ்'' தேவதையின் உடையில் காட்சி அளித்திருக்கிறாள். அது மாதிரிப் பல தடவை அவள் காட்சி அளித்திருப்பதாகக் கூறப்படுகிறது.

மெசீனஸ் : ரோம் மக்கள் இவற்றையெல்லாம் அறிய வேண்டும்.

அக்ரிப்பா : அறிந்தால்...ஏற்கெனவே அவனது அலட்சியத் தைக் கண்டு வெதும்பும் மக்கள் இப்பொழுது அவன்மீது கொஞ்சநஞ்சம் வைத்துள்ள நல்லெண்ணத்தையும் நீக்கிவிடுவார்கள்.

சீசர் : மக்கள் அதை அறிவார்கள். இப்பொழுது அவனது குற்றஞ்சாட்டுகளையும் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்.

அக்ரிப்பா : அவர் யாரைக் குற்றம் சாட்டுகிறார்?

சீசர் : சீசர்மீது...சிசிலியில் செக்ஸ்டஸ் பாம்பேயை வீழ்த்தியபொழுது பெற்ற செல்வத்தில் அவனுக்கு உரிய பங்கைக் கொடுக்கவில்லையாம். அவன் நமக்கு அளித்த கப்பல்களை நாம் திருப்பி அனுப்பவில்லையாம். கடைசியாக "மூவர் குழுவில்" ஒருவனாகிய லெப்பிடசை முடி கவிழ்த்ததை அவன் விரும்பவில்லையாம். அதன் மூலம் கிடைத்த செல்வம் அனைத்தையும் நாம் முடக்கி வைத்துள்ளோமாம்...

அக்ரிப்பா : பிரபு! இதற்குப் பதில் சொல்ல வேண்டும்...

சீசர் : அதை ஏற்கனவே செய்துவிட்டேன். தூதன் போய்விட்டான்...என் பதில் என்ன தெரியுமா? லெப்பிடஸ் கொடுங்கோலனாக மாறினான்; அதிகாரத்தைத் தடம்புரண்டு உபயோகித்தான். ஆகவே அவனுக்குக் கொடுத்த தண்டனை சரியானது. செல்வத்தைப் பொறுத்தவரை நான் பெற்ற வெற்றிகளில் அந்தோனிக்குப் பங்கு அளிக்க இசைகிறேன். அதுபோல அவனும், அவனது ஆர்மீனியா, மற்றும் வெற்றி பெற்ற நாடுகளில் எனக்கு உரிய பங்கை அளிக்க வேண்டும்.

மெசினஸ் : அவர் அதற்கு ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டார்.

சீசர் : அப்படியானால் நானும் இதற்கு ஒப்புக் கொள்ள மாட்டேன்.

(ஆக்டேவியா தன் தோழியருடன் வருதல்)

ஆக்டேவியா : வணக்கம்! என் அன்பான சீசர்! வணக்கம்.

சீசர் : உன்னை நான் "வாழாவெட்டி" என்று அழைப்பதா?

ஆக்டேவியா : நீங்கள் என்னை அப்படி அழைத்ததும் இல்லை; அதற்குக் காரணமும் இல்லை.

சீசர் : பின் ஏன் இப்படித் திருட்டுத்தனமாக வந்திருக்கிறாய்? நீ சீசரின் சகோதரியைப் போல வரவில்லை. அந்தோனியின் மனைவி ஒரு மாபெரும் படையுடன் வரவேண்டும்...அவள் வருவதற்கு நீண்ட நேரத்துக்கு முன்பே குதிரைகளின் கனைப்பொலி கட்டியம் கூற வேண்டும். பாதையில் உள்ள மரங்களில் எல்லாம் மக்கள் கூடியிருக்க வேண்டும். உன் வருகைக்காக அவர்கள் வழிமேல் விழிவைத்துக் காத்துக் காத்து அலுக்க வேண்டும். உன்னுடன் வரும் பட்டாளத்தின் புழுதி வானத்தை முட்டவேண்டும். ஆனால் நீ...நீ ஒரு வேலைக்காரிபோல் ரோமுக்கு வந்திருக்கிறாய். எனது அன்பைக் காட்டவிடாமல் அணைபோட்டு விட்டாய். காட்ட வாய்ப்பில்லாத அன்பு கருத முடியாத அன்பாகி விடுகிறது. நாம் உன்னைக் கடலிலும் நிலத்திலும் வரவேற்றிருக்க வேண்டும். கட்டம் கட்டமாக மாபெரும் வரவேற்பை உனக்கு நல்கியிருக்க வேண்டும்.

ஆக்டேவியா : அரசே! நான் இவ்வாறு இங்கே வந்திருப்பது யாருடைய கட்டாயத்தாலும் அன்று; எனது சொந்தவிருப்பமே! எனது கணவர் அந்தோனிக்கு எதிராக நீங்கள் போர் முயற்சியில் ஈடுபட்டிருக்கும் வேண்டாத செய்தியை அவர் என்னிடம் விளம்பினார். அதனால் நான் இங்கே வர அவருடைய அனுமதியைப் பெற்றேன்.

சீசர் : உடனே அவர் அனுமதி வழங்கினார்—ஏனென்றால் அவருக்கும் அவருடைய காமக்கிழத்திக்கும் இடையே நீ தடையாக இருந்ததால்...

ஆக்டேவியா : அப்படிச் சொல்லாதீர்கள்...

சீசர் : என் கண் அவர் மேலேயே இருக்கிறது...அவரது நடவடிக்கைகள் காற்றில் பறந்து வருகின்றன. அவர் இப்பொழுது எங்கிருக்கிறார்?

ஆக்டேவியா : ஏதென்சில் இருக்கிறார்...

சீசர் : இல்லை...தவறிழைக்கப்பட்ட சகோதரி! கிளியோ பாட்ரா அவனை நோக்கித் தலையசைத்து விட்டாள். உடனே அவன் அவளிடம் ஓடிவிட்டான். அவர்கள் இப்பொழுது எனக்கு எதிராகக் கீழ்த்திசை மன்னர் களின் உதவியைத் திரட்டி வருகிறார்கள். லிபியா மன்னர் போக்கஸ், கப்படோசியா மனனர் ஆர்க் கேலஸ், பாபலகோனியா மன்னர் பிலடெல்பாஸ், திரேசியான் மன்னர் அடல்லாஸ், அரேபியா மன்னர் மால்கஸ், போண்ட் மன்னர், ஹெராட் ஆப் ஜூரி, கோமேன் மன்னர், மித்ரிடேட்ஸ், மெடே மன்னர் பாலமன், லிகோனியா மன்னர் அமின்டாஸ்...இன்னும் பல மன்னர்களை அவன் தன் பக்கம் திரட்டியிருக் கிறான்...

ஆக்டேவியா : என் தலைவிதி ..ஒருவரை ஒருவர் தாக்கும் இருவருக்கு இடையில் என் இதயம் தடுமாறுகிறது... நான் ஒரு துரதிர்ஷ்டசாலி!

சீசர் : உன்னை அன்பாக வரவேற்கிறேன்... அவனுக்கு எதிராக நான் படைதொடுப்பதை உன் கடிதங்கள் தடுத்தன. உனக்குத் தவறும், எனக்கு ஆபத்தும்

இழைக்கப்பட்டிருக்கின்றன. அஞ்சாதே! ஆறுதல் கொள்! காலச் சூழ்நிலைக்காக நீ கவலைப்படாதே. எல்லாம் விதிப்படி நடக்கட்டும். அதற்காக நீ அழாதே. உன் வரவு நல்வரவாகுக! உன் வருகையைவிட எனக்கு அன்பானது வேறு எதுவுமில்லை. எண்ணத்துக்கு அப்பாற்பட்ட கொடுமை உனக்கு இழைக்கப்பட்டிருக்கிறது. கடவுளர்கள் உனக்கு நீதி வழங்குவதற்காக அநீதி இழைத்தவர்களைத் தண்டிக்க எங்களைக் கருவியாகப் பயன்படுத்தட்டும். உனக்கு ஆறுதல் நிறையட்டும்! இங்கே உன் வரவு நல்வரவாகுக!

அக்ரிப்பா : தேவி! வருக!

மெசினஸ் : அன்னையே! வருக! ரோமில் உள்ள ஒவ்வொரு உள்ளமும் உங்களை நேசிக்கிறது; உங்கட்காக அனுதாபம் கொள்கிறது. அநீதி மிக்க அந்தோனி ஒருவர்தான் தமது வெறுக்கத்தக்க தன்மைகளால் உங்களைப் புறக்கணித்திருக்கிறார். நம்மை எதிர்த்துத் தீங்கு செய்யும் ஒரு தீயவனை நோக்கி அவரது அன்பும் அதிகாரமும், நேரமும் நினைப்பும் பாய்கின்றன.

ஆக்டேவியா : தாங்கள் சொல்வது உண்மையா?

சீசர் : முழு உண்மை... சகோதரி வருக! உன்னை வேண்டிக் கொள்கிறேன். பொறுமையாக இரு! காலம் வரும். காத்திரு. (போதல்)

## காட்சி—7

இடம் : ஆக்டியம் அருகில்—அந்தோனியின் படை முகாம்.

[கிளியோபாட்ரா, எனோபார்பஸ் வருகின்றனர்]

கிளியோ : நான் உன்னைப் பழிவாங்கப் போகிறேன்—சந்தேகப்படாதே.

எனோ : ஏன்? ஏன்? ஏன்?

கிளியோ : நான் போர்க்களத்திற்கு வரக் கூடாது என்று நீ பேசுவதால்...

எனோ : நல்லது...ரொம்பசரி...ரொம்ப சரி—

கிளியோ : எனக்கு எதிராக யுத்தம் தொடுக்கப் பட்டால் நான் ஏன் போர்க்களத்திற்கு வரக் கூடாது?

எனோ : (தனியே) நன்று. நான் பதில் சொல்கிறேன்.

கிளியோ : என்ன சொல்கிறாய்?

எனோ : தேவி! தங்கள் காட்சி அந்தோனியின் கவனத்தைத் திருப்பும். அவருடைய மனம், மூளை, நேரம் ஆகியவற்றை உங்கள் வருகை சிதறடிக்கும். அவை சிதறக் கூடாது. அவருடைய முழுக் கவனமும் போரில் இருக்க வேண்டும். அவர் முக்கிய பணிகளில் அலட்சியமாக இருக்கிறார் என்று அவர்மீது ஏற்கெனவே பழி இருக்கிறது. தங்கள் தோழியர்களும், அலிகளும்தான் இந்த யுத்தத்தை நடத்துகிறார்கள் என்று ஏற்கெனவே ரோமில் வதந்தி உலவுகிறது.

கிளியோ : எங்களுக்கு எதிராகப் பழிதூற்றும் நாக்குகள் அழுகட்டும்! ரோம் அழியட்டும்! போர்ச் செலவுகளில் ஒரு பகுதியை நான் ஏற்கிறேன். இந்த நாட்டின் தலைவி என்ற முறையில் ஒரு மனிதனாக நானும் போருக்கு வருவேன். என் விருப்பத்திற்கு எதிராகப் பேசாதே. நான் இங்கே தங்கப் போவதில்லை. போர்க் களத்திற்கு வருவது உறுதி!

எனோ : வேண்டாம்—நான் சொல்லி விட்டேன்—இதோ அரசர் வருகிறார் (அந்தோனியும் தளபதி கனிடியசும் வருகின்றனர்.)

அந்தோனி : கனிடியஸ், டாரன்டம், புருண்டுசியம் ஆகியவற்றிலிருந்து அயோனியன் கடலை விலக்கி டாரின் பகுதியை இவ்வளவு விரைவில் சீசர் பிடித்தது ஆச்சரியமில்லையா? அன்பே! நீயும் அது பற்றிக் கேள்விப் பட்டாயா?

கிளியோ : கடமைகளைப் புறக்கணிக்கும் சோம்பேறிகளே பிறரது விரைந்த செயலாற்றலைக் கண்டு வியப்படைகிறார்கள்.

அந்தோ : சரியான விமரிசனம்! இத்தகைய விமரிசனம் ஒரு சோம்பேறியை நோக்கித் தலைமை வாய்ந்த மனிதர்கள் செய்யத் தகுதியானதே. கனிடியஸ்! நாம் அவனுடன் கடற்போரில் ஈடுபடுவோம்...

கிளியோ : ஆம், உறுதியாகக் கடற்போரில் ஈடுபடுவோம்.

கனிடியஸ் ; எதற்காகப் பிரபு கடற்போரில் ஈடுபட வேண்டும்?

அந்தோ : அவன் நம்மை அதற்குத்தானே இழுக்கிறான்.

எனோ : நீங்கள் சீசரை நிலப்போருக்குத் தனியே அழைத்த பொழுது அவர் மறுத்தார். ஆகவே நீங்களும் கடற் போருக்குச் செல்ல மறுக்க வேண்டும். ஏனெனில் கடலில் அவருக்குப் பலம் மிகுதி!

கனிடியஸ் : ஜூலியஸ் சீசர் முன்பு பாம்பேயுடன் பார்சாலியா போர்க்களத்தில் போராடியபொழுது வெற்றி பெற்றார். அது சீசருக்குப் பலம் வாய்ந்த இடம். அங்கே நாம் செல்லக் கூடாது. சீசர் உங்களுடன் தனிப் போரில் ஈடுபட மறுக்கிறார். அதற்குக் காரணம் அதில் அவரது பலக்குறைவை உணர்கிறார். அது போல் கடலில் நாம் அவரைச் சந்திக்க மறுக்க வேண்டும். அவரது சவாலைப் புறக்கணிக்க வேண்டும்.

எனோ : நமது கடற்படைக் கப்பல்களுக்குச் சரியான ஆள் பலமில்லை. நமது மாலுமிகள் எல்லாம் கழுதை ஓட்டிகள்; கருதறுப்பவர்கள்; பொருத்தமின்றிக் கடனுக்குப் பொறுக்கப்பட்டவர்கள். ஆனால் சீசரின் கடற்படையில் இருப்பவர்களோ பலமுறை பாம்பேயை எதிர்த்துத் திறம்படப் போராடியவர்கள். அவர்களது கப்பல்கள் சிறியவை; விரைவானவை. எளிதில் செலுத்தக் கூடியவை. ஆனால் நமது கப்பல்கள் கனமானவை. நீங்கள் கடலில் சந்திக்க மறுத்தால் அதில் ஒன்றும் கவுரவக் குறைச்சல் இல்லை. ஏனெனில் நிலத்தில் சந்திக்கத் தயாராய் இருப்பதால்...

அந்தோ : இல்லை—கடற்போர்! கடற்போர்!!

எனோ : அரசே! தங்கள் முடிவின் மூலம் தங்களது தரைப் பலத்தைத் தூக்கியெறிகிறீர்கள். சிறந்த காலாட் படையின் வீரத்தைச் சிதைக்கிறீர்கள். தங்கள் பரந்த படையறிவின் பயனைத் தூளாக்குகிறீர்கள். அடைய வேண்டிய வெற்றியை அறுத்தெறிகிறீர்கள். உறுதியான

பாதுகாப்பைச் சந்தர்ப்பத்துக்கும் குழப்பத்துக்கும் பலியாக்குகிறீர்கள்.

அந்தோ : நாம் கடலிலேயே போராடுவோம்.

கிளியோ : சீசருடையதைவிடச் சிறந்த அறுபது போர்க் கப்பல்கள் என்னிடம் உள்ளன.

அந்தோ : நம்மிடம் அதிகமுள்ள தேவையற்ற கப்பல்களைத் தீக்கு இரையாக்குவோம். மீதமுள்ள கப்பல்களைப் போர் முயற்சியில் ஈடுபடுத்தி,, முன்னேறி வரும் சீசரை ஆக்டியம் களத்தில் அடித்து நொறுக்குவோம். அதில் நாம் தோற்றால் பிறகு நிலத்தில் சந்திப்போம்.

[தூதுவன் ஒருவன் வருகிறான்.]

என்ன செய்தி?

தூதுவன் : பிரபு! அந்தச் செய்தி உண்மையே. தாங்கள் அனுப்பியவர்கள் சீசரைக் கண்டது உண்மை. சீசர் டாரினைக் கைப்பற்றிவிட்டார்.

அந்தோ : அவன் அங்கே நேரில் வந்திருக்க முடியுமா? ஒருகாலும் முடியாது. அவனுடைய படைபலம் எனக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. கனிடியஸ்! தரைப்படையில் பத்தொன்பது அணியையும் பன்னிரண்டாயிரம் குதிரைகளையும் உன் பொறுப்பில் ஏற்றுத் தலைமை தாங்கி நடத்து. நாங்கள் கப்பலுக்குச் செல்கிறோம்.

வா...வா...என் கிளியோபாட்ரா!...

[வீரன் ஒருவன் வருகிறான்.]

என்ன செய்தி வீரனே!

வீரன் : மதிப்புமிக்க அரசே! கடலில் போராடாதீர்கள். சிதைந்த இந்தக் கப்பல்களை நம்பாதீர்கள். எங்கள் கத்திகளையும், மார்புப் புண்களையும் தாங்கள் சந்தேகிக்கிறீர்களா? எகிப்தியர்களும், போனீசியர்களும் கடலுக்கு வாத்துப்போல் போகட்டும். நாம் இதுவரை நிலத்தில் நின்று அடிக்கடி போராடி வெற்றிமாலை சூடியிருக்கிறோம். ஆகவே நிலத்திலேயே போராடு வோம்.

அந்தோனி : நன்று நன்று...போ போ—

(அந்தோனி கிளியோபாட்ரா, எனோபார்பஸ் செல்லுகின்றனர்.)

வீரன் : ஹெர்குலிஸ் பேரால் சொல்கிறேன்— நான் சொல்வது சரி என்று நினைக்கிறேன்.

கனிடியஸ் : வீரனே! நீ சொல்வது சரி...அவரது நட வடிக்கைகள் அனைத்தும் தரைப்படைப் பலத்தின் அடிப்படையில் அமைக்கப்படவில்லை. நம் தலைவர் தானே படை நடத்தவில்லை; படை நடத்தப்படுகிறார். நாம் பெண்களின் வீரர்கள்.

வீரன் : நீங்கள் காலாட்படைக்கும் குதிரைப்படைக்கும் தளபதி...இல்லையா?

கனிடியஸ் : மார்க்கஸ் ஆக்டேவியஸ், மார்சியஸ், ஜஸ்டியஸ், பப்ளிகோலா, கேலியஸ் ஆகியோர் கடற் படைக்குத் தலைமை தாங்குகின்றனர். ஆனால் நாம் தரைப்படைக்குத் தலைமை தாங்குகிறோம். சீசரின் விரைவான வெற்றி முன்னேற்றம் நம்பத் தகுந்ததாய் இல்லை.

வீரன் : சீசர் ரோமில் இருந்தபொழுது அவரது படைகள் பல பகுதியாகப் பிரிந்து பல திசையில் சென்றன. ஆகவே அவை செல்லும் இடத்தை நம் ஒற்றர்களால் அறிய முடியாத அளவுக்கு அவை போக்குக் காட்டி ஏமாற்றிவிட்டன.

கனிடியஸ் : சீசரின் படைத் தளபதி யார் தெரியுமா?

வீரன் : யாரோ டாரஸ் என்று சொல்லுகிறார்கள்.

கனியடிஸ் : சரி சரி...எனக்கு அவரைத் தெரியும்.

[தூதுவன் ஒருவன் வருகிறான்.]

தூதுவன் : அரசர் தங்களை அழைக்கிறார்.

கனிடியஸ் : காலம் செய்திகளால் கருக் கொண்டிருக்கிறது. ஆகவே ஒவ்வொரு நிமிடமும் ஏதாவது புதிய செய்தி பிறந்து கொண்டே இருக்கிறது.

(போதல்)

## காட்சி – 8

ஆக்டியம் அருகில் ஒரு சமவெளி.

[சீசரும், அவரது படைத்தளபதி டாரசும் தங்கள் படைவீரர்களோடுஅணிவகுத்து வருகின்றனர். சீசரின் படை ஒவ்வோரிடமாக வெற்றி பெற்று விரைந்து வருகிறது.]

சீசர் : டாரஸ்!

டாரஸ் : அரசே!

சீசா : நிலத்தில் தாக்காதே. படைபலத்தைப் பிரிக்காதே. கடலில் வெற்றி பெறும் வரை தரைப் போர் ஏற்படும் படி செய்யாதே. இந்த ஆணைப் பத்திரத்தில் எழுதப்

பட்டுள்ள திட்டத்தை மீறி எதுவும் செய்ய முனையாதே. (போர்த்திட்டத்தைக் கொடுக்கிறான்) நமது அதிர்ஷ்டம் இப்பொழுது நடைபெறப் போகும் தாக்குதலில்தான் இருக்கிறது.

(போதல்)

## காட்சி 9

இடம் : அதே சமவெளியில் மற்றொரு பகுதி.

[அந்தோனியும், எனோபார்பசும் வருகின்றனர்]

அந்தோ : நமது படைகளைத் தூரத்தில் உள்ள மலைப் பகுதியில் நிறுத்தி வைப்போம். அவை சீசரின் படைகளை நேருக்கு நேர் சந்திக்கத் தயாராயிருக்கட்டும். அங்கிருந்து நாம் சீசரின் கப்பற்படையில் உள்ள போர்க் கப்பல்களின் எண்ணிக்கையைத் தெளிவாகத் தெரிந்து கொண்டு, அதற்கேற்ப நடவடிக்கை எடுக்கலாம். (போகின்றனர்)

## காட்சி—10

இடம் : அதே சமவெளியில் இன்னொரு பகுதி.

[மேடையின் ஒரு பகுதியில் கனியடிஸ் தன் தரைப் படைகளோடு அணிவகுத்துச் செல்கிறான். சீசரின் படைத் தளபதியாகிய டாரஸ் மற்றொரு பகுதியில் தன் படையுடன் அணி வகுத்துச் செல்கிறான். அதற்குப் பிறகு கடற்போர் நடைபெறும் ஒலி கேட்கிறது. முரசு முழங்குகிறது. எனோபார்பஸ் வரு கிறான்]

எனோபார்பஸ் : போச்சு, போச்சு! எல்லாம் போச்சு! இந்த வெட்கக் கேடான காட்சியைக் காணச் சகிக்க வில்லை. எகிப்தியத் தலைவியைத் தாங்கிய மாபெரும். போர்க்கப்பலான "அந்தோனியட்" பின்வாங்குகிறது. அதைத் தொடர்ந்து அதன் அணியைச் சேர்ந்த அறுபது போர்க்கப்பல்களும் போரை விட்டுவிட்டுப் பின்வாங்கி ஓடுகின்றனவே. இந்தக் கோலத்தைக் கண்டு என் கண்கள் கொப்புளிக்கின்றன. (ஸ்காரஸ் வருகிறான்)

ஸ்காரஸ் : கடவுள் காப்பாற்றட்டும்! எல்லாம் முடிந்தது.

எனோ : என்ன சொல்கிறாய்? விளங்கச் சொல்—

ஸ்காரஸ் : அறியாமையின் மூலம் நாம் நாட்டின் ஒரு பெரும் பகுதியை இழந்து விட்டோம். நாடுகளையும் மாகாணங்களையும் காமத்துக்குப் பலியாக்கி விட்டோம்.

எனோ : போரின் போக்கு எப்படி இருக்கிறது?

ஸ்காரஸ் : பிளேக்கால் சாகக் கிடக்கும் மனிதனின் உடம்பில் காணப்படும் சிவப்புக்கோடு சாவை உறுதி யாகக் காட்டுவது போல, நம் கட்சிக்குத் தோல்வி உறுதி என்பது தெளிவாகத் தெரிகிறது. எகிப்தின் சனியன்! குஷ்டரோகம் அவளை அள்ளிச் செல்லட்டும்! இருபக்க மும் வெற்றி தோல்வி நிச்சயமில்லாத சரிசமமான நிலைமை இருந்த பொழுது, இன்னும் சொல்லப் போனால் நம் கட்சி சற்று பலமாக இருந்த பொழுது, அவள், கோடைக்காலத்தில் விஷ ஈயால் கொட்டப்பட்டு ஓடும் பசுப் போலத் திடீரென்று தன் கப்பலைத் திருப்பிக் களத்திலிருந்து ஓடத் தொடங்கினாள்.

எனோ : அதை நான் பார்த்தேன். அந்த காட்சியைக் கண்டு என் கண்கள் கனத்துப் போய்விட்டன. அதற்கு மேல் நான் அதைப் பார்க்க விரும்பவில்லை.

ஸ்காரஸ் : அவள் பின் வாங்கி ஓடத் தொடங்கியதும், அவளுடைய மாயசக்திக்குப் பலியான அந்தோனியும் தன் கப்பலைத் திருப்பிக் கொண்டு, அவளைப பின் தொடர்ந்து ஓடினான். பெண் வாத்தைப் பின் பற்றி ஓடும் ஆண்வாத்துப் போல ஓடினான் சண்டையை உச்சகட்டத்தில் விட்டுவிட்டு ஓடினான். நான் இப்படி ஒரு வெட்கம் கெட்ட காட்சியைக் கண்டதில்லை. அனுபவம், ஆண்மை, மரியாதை ஆகியன இதுபோல் இதுவரை தாழ்ந்ததில்லை.

ஏனோ : கொடுமை! கொடுமை!!

(கனிடியஸ் வருகிறான்)

கனிடியஸ் : கடலில் இனி நமக்கு வெற்றி என்பது கிடையாது. அது வருந்தத்தக்க நிலையில் மூச்சுத் திணறி மூழ்கிக் கொண்டிருக்கிறது. நம் தலைவர் அவருக்கேற்ற திறமையை உணர்ந்து போராடியிருந்தால் முடிவு நன்றாயிருந்திருக்கும். ஆனால் அவர் நாம் எப்படி ஓடவேண்டும் என்பதற்குத் தானே ஆபாசமாக ஓடிக் காட்டி உதாரணம் அமைத்து விட்டார்.

ஏனோ : அப்படியா? உன் கருத்து அதுவா?... அவர்கள் எங்கே ஓடியிருப்பார்கள்!

ஸ்காரஸ் : அவர்கள் பெலப்போனசஸ் நோக்கி ஓடினார்கள்.

ஸ்காரஸ் : இருக்கலாம்...மேலும் என்ன நடக்கிறது என்பதை அங்கு சென்று காணப் போகிறேன்.

கனிடியஸ் : சீசரிடம் நான்சரணாகதி அடையப்போகிறேன். என்னிடம் உள்ள காலாட்படை, குதிரைப்படை அணிகள் அனைத்தையும் அவரிடம் ஒப்படைத்து

அவர் பக்கம் சேரப் போகிறேன். ஏற்கெனவே ஆறு அரசர்கள் சரணாகதி அடைந்து எனக்கு வழிகாட்டி விட்டார்கள்.

எனோ: துரதிர்ஷ்டம் பிடித்த அந்தோனியைத்தான் நான் இன்னும் பின்பற்றப் போகிறேன். எனது பகுத்தறிவு அதற்கு மாறாக இருந்தாலும் நான் அந்தோனியையே பின்பற்றுவேன். நடப்பது நடக்கட்டும். (போகின்றனர்)

## காட்சி - 11

*இடம்: அலெக்சாண்டிரியா—கிளியோ பாட்ராவின் அரண்மனை.*

[*அந்தோனி தன் வீரர்களுடன் கோபமாக வருகிறான்*]

அந்தோனி: கவனியுங்கள். நிலமகள் என்னைத் தாங்க வெட்கப்படுகிறாள். அவள்மீது இனி நான் நடக்கக் கூடாது என்று ஆணையிடுகிறாள். நண்பர்களே! வாருங்கள். இருளில் வழிதவறிய வழிப்போக்கனைப் போல நானும் என் வழியை என்றென்றைக்கும் விட்டு விட்டேன். பொன் ஏற்றிய ஒரு கப்பல் என்னிடம் இருக்கிறது. அதை எடுத்து ஆளுக்குக் கொஞ்சம் பிரித்துக் கொண்டு ஓடுங்கள். சீசரைச் சரணடைந்து பிழையுங்கள்.

எல்லோரும்: ஓடுவதா? நாங்களா? முடியாது.

அந்தோ: நானே ஓடினேனே, கோழைகள் புறங்காட்டி ஓட நானே வழிகாட்டினேனே. நண்பர்களே! ஓடுங்கள். உங்கள் சேவை தேவையில்லாத ஒரு பாதையை

அமைத்துக் கொள்ள நானே முடிவு கட்டிவிட்டேன். போங்கள். எனது செல்வம் துறை முகத்தில் இருக்கிறது. போய் எடுத்துக் கொள்ளுங்கள். ஓ! நான் கிளியோ பாட்ராவைப் பின் தொடர்ந்தேன். இப்பொழுது அவளைப் பார்க்கவே வெட்கப்படுகிறேன். எனது தலை மயிரே இப்பொழுது என்னை எதிர்த்துக் கலகம் செய்கிறது. போர்க்களத்திலிருந்து ஓடியதற்காகக் கருமயிரை வெள்ளைமயிர் எதிர்க்கிறது. கிளியோபாட்ரா விடம் அளவுகடந்த காதல் கொண்டதற்காகக் கருமயிர் வெள்ளை மயிரைக் கண்டிக்கிறது. நண்பர்களே! போங்கள். உங்களுக்கு நல்ல வாழ்க்கையை அமைத்துத் தரக்கூடிய என் நண்பர்கள் சிலருக்குச் சிபாரிசுக் கடிதம் தருகிறேன். உங்களை வேண்டிக் கொள்கிறேன். துயரம் கொள்ளாதீர்கள். மறுப்புரை சொல்லாதீர்கள். எனது இப்போதைய நிலையே, நீங்கள் என்னைப் பின்பற்றக் கூடாது என்பதற்குச் சரியான உதாரணமாகும். எது தன்னைத்தானே இழக்கிறதோ அது இழக்கப்பட வேண்டியதுதான். நேராகத் துறைமுகத்துக்குச் செல் லுங்கள். செல்வம் ஏற்றிய கப்பலையும், முழுச் செல்வத் தையும் உங்கட்கே அளிக்கிறேன். என்னை விட்டுச் செல்லுங்கள். உங்களைமன்றாடுகிறேன், நான் சொல்கிற படி செய்யுங்கள். உங்கட்கு ஆணையிட எனக்கு அதிகாரம் இல்லை. ஆகவே உங்களை வேண்டுகிறேன். போங்கள்...உங்களைப் பிறகு படிப்படியாகச் சந்திக் கிறேன். (சோர்ந்து உட்கார்கிறான். கிளியோபாட்ரா வருகிறாள். சார்மியான், இராஸ், ஈராஸ் ஆகியோர் வருகின்றனர்]

ஈராஸ் : தேவி! அவருக்கு ஆறுதல் சொல்லுங்கள்.

இராஸ் : ஆம்...சொல்லுங்கள் அரசி!

சார்மியான் : ஆறுதலா? ஏன்? இன்னும் என்ன செய்ய வேண்டும்?

கிளியோ : முதலில் நான் உட்கார்கிறேன் அன்பரே!

அந்தோ : இல்லை இல்லை இல்லை...

ஈராஸ் : அரசே! தாங்கள் இங்கேதான் இருக்கிறீர்களா?

அந்தோ : பேசாதே! பேசாதே!

சார்மியான் : தேவி!

இராஸ் : அரசி!

ஈராஸ் : அரசே!

அந்தோ : ஆம்...அரசே! ஆம்...பிலிப்பி போர்க்களத்தில் சீசர் தன் கத்தியை நடனக்காரனைப்போல அழகுக்கு வைத்திருந்தான். ஆனால் அப்பொழுது நான்தான் வெறிபிடித்த காஷியஸைக் கொன்றேன். புருட்டஸின் தற்கொலைக்குக் காரணமாக இருந்தேன். ஆனால் சீசரோ தான் போராடாமல் தன் தளபதிகளைப் போரிடச் செய்தான். உண்மையில் அவனுக்குப் போர் அனுபவம் கிடையாது. இருந்தும் இப்பொழுது என்னாயிற்று...பரவாயில்லை.

கிளியோ : (மயங்கி விழுபவள்போல் நடித்து) ஆ...மயக்கம் வருகிறது. உதவி செய்யுங்கள்.

ஈராஸ் : பிரபு! அரசியார் வருகிறார்...

இராஸ் : தேவி! அவரிடம் செல்லுங்கள். வலிந்துபேசுங்கள்... அவர் வெட்கத்தால் வெதும்புகிறார்.

கிளியோ : நல்லது. அப்படியானால் எனக்கு உதவுங்கள்..

ஈராஸ் : தகுதிபடுத்த அரசே! எழுங்கள்... அரசியார் வருகிறார். அவள் தலை தொங்குகிறது. சாவு அவளை நெருங்குகிறது. தங்கள் ஆறுதல்தான் அவளைக் காப்பாற்ற வேண்டும்.

அந்தோ : நான் என் வீரத்வதயே பழுதாக்கி விட்டேன். சரியான பாதையை விட்டு விலகிவிட்டேன்.

ஈராஸ் : அரசே! அதோ அரசியார்...

அந்தோ : ஓ! கிளியோபாட்ரா! எத்தகைய வீழ்ச்சிக்கு என்னை ஆளாக்கிவிட்டாய்? எனது சக்தியும் புகழும் அழிந்ததற்காக வெட்கித் தனியே முடங்கிக் கிடக்கிறேன். உன்னைச் சந்திக்கவே எவ்வாறு நாணுகிறேன் என்பதைப் பார்.

கிளியோ : பிரபு! பிரபு! நான் பயந்து ஓடியதற்காக என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் என்னைப் பின் தொடர்வீர்கள் என்று நான் சிறிதும் நினைக்கவில்லை.

அந்தோ : எகிப்திய அரசி! எனது உள்ளம் உனது கப்பலில் உள்ள சுக்கானில் காதல் என்னும் கயிறால் கட்டப் பட்டிருப்பதால் நான் நிச்சயம் பின்தொடர்வேன் என்பது உனக்குத் தெரியும். என் ஆத்மாமீது உனக்கு முழு அதிகாரம் இருக்கிறது. உனது சிறு குறிப்பைக் கண்டால் கடவுளின் ஆணையைக்கூட நான் புறக்கணித்து விடுவேன்.

கிளியோ : தயவு செய்து என்னை மன்னியுங்கள்.

அந்தோ : நான் இப்பொழுது ஆக்டேவியஸ் சீசரிடம் மெலியார் போலப் பணிவான ஒப்பந்தம் செய்தும்.

போக்குக் காட்டியும், தந்திரம் செய்தும் தாழ வேண்டும். பாதி உலகத்தின் தலைவனாக இருந்தேன்; பிறரது வாழ்வையும் தாழ்வையும் அமைத்தேன். நீதான் என்னை வெற்றி கொண்டவள் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். எனது கத்தி காதலால் பலமிழக்கிறது. அது காதலுக்குப் பணிகிறது. மானத்துக்குப் பணிய மறுக்கிறது.

கிளியோ : மன்னியுங்கள்; மன்னியுங்கள். (அழுகிறாள்)

அந்தோ : ஒரு துளிகூடக் கண்ணீர் சிந்தாதே. நான் சொல்கிறேன்...வெற்றிவாகை சூடி இழந்த நாடுகள் எல்லாம்கூட அந்த ஒரு துளிக்கண்ணீருக்கு ஈடாக மாட்டா. அழுவதற்குப் பதிலாக எனக்கு ஒரு முத்தம் கொடு. அது எனக்கு ஆறுதல் அளிக்கும். நமது குழந்தைகளின் ஆசிரியருக்கு ஆளனுப்பினோமே அவர் வந்தாரா? அன்பே! எனது உள்ளம் துயரத்தால் கனத்திருக்கிறது. சிறிது மது கொடுங்கள். அதிர்ஷ்டம் நமக்கு அடிதருகின்றபொழுது நாம் அதைத் தாங்கி எதிர்க்கும் தைரியம் உடையவர்கள் என்பதை அறியட்டும். (போகிறான்)

## காட்சி—12

இடம் : எகிப்து-சீசரின் படை முகாம்.

[சீசர் வெற்றிக்களிப்பில் தோன்றுகிறார். டோலபெல்லா, தைரஸ், மற்றும் சிலர் வருகின்றனர்.)

சீசர் : அந்தோனியிடமிருந்து வந்திருக்கும் தூதன் வரட்டும். உனக்கு அவனைத் தெரியுமா?

டோலபெல்லா : சீசர்! வந்திருக்கும் தூதன் அந்தோனியின் குழந்தைகளுக்கு ஆசிரியர். இது ஒன்றே போதும் அந்தோனியின் புகழும்பலமும் எவ்வளவு தூரம் தாழ்ந்து விட்டது என்பதை அறிய சில மாதங்களுக்கு முன்பானால் அவர் தன் தூதனாக அரசர்களை அனுப்பி இருக்கலாம். ஆனால் இப்பொழுது ஆசிரியனை அனுப்பியிருக்கிறார். (அந்தோனியின் தூதனாக யூப்ரோனியஸ் என்னும் ஆசிரியர் வருகிறார்.)

சீசர் : வருக! செய்திகள் சொல்க!

யூப்ரோனியஸ் : நான் அந்தோனியிடமிருந்து தூதனாக வருகிறேன். கடலிலிருந்து தோன்றுகின்ற பனித்துளி கடலுக்குமுன் எவ்வளவு சிறிதோ அதுபோன்றதுதான் அந்தோனிக்குமுன் எனது பணியும்.

சீசர் : இருக்கட்டும்...வந்த காரியம் யாது?

யூப்ரோ : அந்தோனி தங்கள் வெற்றியை ஏற்றுக் கொண்டு மரியாதை செலுத்துகிறார். அவர் தங்களிடம் வேண்டுவது—எகிப்தில் வாழ அனுமதி கேட்கிறார். அதற்கு அனுமதி கிடைக்காவிட்டால் அவர் தன் வேண்டுகோளைக் குறைத்துக் கொள்கிறார். எகிப்தில் இல்லாவிட்டாலும் ஏதென்சில் ஒரு தனி மனிதனாக உயிர்வாழ அனுமதி கேட்கிறார். இதுதான் அவரது வேண்டுகோள். அடுத்து, கிளியோபாட்ரா தங்களது மேலாதிக்கத்தை ஏற்றுக் கொள்கிறாள். தங்கட்கு அடிபணிகிறாள். அவள் தங்களிடம் இழக்கும் அரசுரிமை தன் குழந்தைகளுக்கும், அவர்களது வாரிசுகளுக்கும் உங்களால் வழங்கப்பட வேண்டுமென்று விரும்புகிறாள்.

சீசர் : அந்தோனியைப் பொறுத்தவரை அவனுக்கு எந்தப் பிச்சையும் அளிக்க நான் தயாராயில்லை. கிளியோபா

பாட்ரா என் முன்னால் பேசவோ அல்லது வேண்டவோ முனைந்தால் அதனை மறுக்க இயலாது. ஆனால் அவள் மானம் கெட்ட அந்தோனியை எகிப்தை விட்டு விரட்ட வேண்டும். அல்லது அவன் உயிரைப் பறிக்க வேண்டும். இதை அவள் செய்தால் அவளது வேண்டு கோள் பரிசீலிக்கப்படும். இதுதான் அவர்கள் இருவருக் கும் நாம் அளிக்கும் பதில்......

யூப்ரோ : தங்கட்கு நன்மை பெருகட்டும்!

சீசர் : பாசறை வழியே இவனை அழைத்துச் செல்லுங்கள்.

[யூப்ரோனியஸ் பாசறை வழியே அழைத்துச் செல்லப் படுகிறான்]

சீசர் : (தைரஸை நோக்கி) உனது பேச்சாற்றலைச் சோதிக் இதுதான் தக்க சமயம்! புறப்படு. அந்தோனியிட மிருந்து கிளியோபாட்ராவைப் பிரி. அவள் என்ன வெல்லாம் கேட்கிறாளோ அதையெல்லாம் என் பேரால் வழங்கு. உனது கற்பனையிலிருந்து கண்டுபிடித்து மேலும் மேலும் வழங்கு. பெண்கள் உயர்ந்த நிலையில் இருக்கும் பொழுது கூட சூழலிலிருந்து தப்புவதில்லை. ஆனால் அவர்கள் தாழ்ந்த நிலையில் இருக்கும் பொழுது எளிதாகப் பிறர் வலையில் விழுகிறார்கள்.

தைரஸ் : சீசர் அவர்களே! தங்கள் விருப்பப்படி நான் செல்கிறேன்.

சீசர் : அந்தோனி தனது துரதிர்ஷ்டத்தை எவ்வாறு ஏற்றுக் கொள்கிறான் என்பதைக் கவனி. அவனது அங்க அசைவுகள் எதைக் குறிக்கின்றன என்பதையும் கவனி.

தைரஸ் : சீசர் அவர்களே! அப்படியே செய்கிறேன். வருகிறேன். (போகிறான்)

## காட்சி—13

இடம் : அலெக்சாண்டிரியா — கிளியோபாட்ரா வின் அரண்மனை.

[கிளியோபாட்ரா, எனோபார்பஸ், சார்மியான், இராஸ் ஆகியோர் வருகின்றனர்].

கிளியோபாட்ரா : நாம் இப்பொழுது என்ன செய்யலாம், எனோபார்பஸ்.

எனோபார்பஸ் : சிந்திக்கலாம், சாகலாம்.

கிளியோ : இதற்கு யார் காரணம்? அந்தோனியா? நாங்களா? குற்றவாளி யார்?

எனோ : அந்தோனிதான்! தன் விருப்பத்துக்குப் பகுத்தறிவை அவர் அடகு வைத்து விட்டார். போர் மும்முரமாக நடைபெற்ற பொழுது நீங்கள் ஓடினாலும் அவர் ஏன் ஓட வேண்டும்? அவருடைய காதலுணர்ச்சிக்கு வீர உணர்ச்சி பலியாகியிருக்கக் கூடாது. இருபெரும் சக்திகள் மோதிய பொழுது, ஒரு பெரும் சக்தியின் தலைவனாக விளங்கிய அந்தோனி தன் படைகளைக் கலங்க வைத்து விட்டு, உங்களைப் பின்தொடர்ந்து ஓடியது அவருக்கு வெற்றியை மட்டும் போக்கவில்லை. மானத்தையும் போக்கிவிட்டது. வெட்கம்!

கிளியோ : உங்களை வேண்டுகிறேன்—அமைதியாக இருங்கள்.

[அந்தோனியும், தூது சென்ற யூப்ரோனியசும் வருகின்றனர்]

அந்தோ : அதுவா சீசருடைய பதில்?

யூப்ரோனியஸ் : ஆம் பிரபு!

அந்தோனி : அப்படியானால் அரசி அன்பாக இருப்பாள். அவள் நம்மைக் காட்டிக் கொடுப்பாள்.

யூப்ரோ : சீசரின் விருப்பம் அதுதான்...

அந்தோ : அவள் அறியட்டும்—சிறுவன் சீசரிடம் எனது கிழட்டுத் தலையை அனுப்பு. அதற்கு ஈடாக அவன் உனது விருப்பங்கள் அனைத்தையும் நிறைவேற்றுவான்.

கிளியோ : பிரபு! தங்கள் தலையையா?

அந்தோ : (தூதனிடம்) மீண்டும் அவனிடம் தூது செல். அவனுக்கு இன்னும் இளமை இருக்கிறது என்பதை எடுத்துச் சொல். அவனிடமிருந்து நாடு சில சாதனை களை எதிர்பார்க்கிறது என்றும் சொல். அவனது நாணயம், கப்பல், படை ஆகியவற்றால் அவனுக்குப் பெருமை இல்லை. ஏனெனில் அவை கோழையிடம் கூட இருக்கின்றன. அவனது தளபதிகள் ஜூலியஸ் சீசரின் படையில் இருந்தபொழுது வென்றதைப்போல அவனது படையிலும் இருந்து வெற்றி ஈட்டலாம். ஒரு குழந்தையின் படையிலும் இருந்து வெற்றி ஈட்ட லாம். அதிலும் பெருமை இல்லை. ஆகவே அவனை நான் ஒற்றைக்கு ஒற்றை வாட்போருக்கு வரும்படி அழைப்பதாகச் சொல். அதை எழுதித் தருகிறேன். எடுத்துச் செல். என்னுடன் வா...

(அந்தோனியும் யூப்ரோனியசும் செல்கின்றனர்)

எனோபார்பஸ் : (தனியே) ஆம். வெற்றி பெற்ற சீசர் தன் வெற்றியையும் மகிழ்ச்சியையும் புறக்கணித்து வாட்போருக்கு வருவாரா? மனிதனின் நியாய உணர்வு கூட அதிர்ஷ்டத்துக்கு ஏற்பத்தான் முடிவு கட்டுகிறது.

வெளிச் சூழ்நிலைகள் மனிதனின் மன ஆற்றலை அழிவுப் பாதையில அழைத்துச் செல்கின்றன. எல்லாம் உணர்ந்த அந்தோனி, வாகை சூடிய சீசரை வாட் போருக்கு அழைத்து, அவர் வருவார், என்று கனவு காண்கிறார். பாவம்! சீசர் அந்தோனியின் முடிவெடுக்கும் ஆற்றலைக்கூட முறியடித்து விட்டார்.

(வேலையாள் ஒருவன் வருகிறான்)

வேலையாள் : சீசரிடமிருந்து ஒரு தூதுவன் வந்திருக் கிறான்.

கிளியோ : என்ன? அரச மரியாதைகளும் சடங்குகளு மின்றித் தூதுவன் வருவதா? பார்த்தீர்களா? தோழியர் களே! மலர் மொட்டாக இருந்த பொழுது அதனை நுகரத் துடித்த நாசிகள், அது சருகானபொழுது வெறுக் கின்றன...பரவாயில்லை...தூதனை வரச் சொல்.

(வேலையாள் வெளியே செல்கிறான்)

எனோபார்பஸ் : (தனியே) மரியாதை பற்றிய எனது உணர்ச்சிகளும், எனது விருப்பங்களும் ஒன்றுக்கொன்று வெவ்வேறாக விளங்குகின்றன. முட்டாளை நேசிப்பது குற்றம்! தோல்வியுற்ற தலைவனை இறுதிவரை நேசித்துத் துயரங்களைப் பொறுமையோடு ஏற்றவன், வாகை சூடிய தலைவனைவிடப் பெரியவனாக வரலாற் றில் போற்றப்படுகிறான்.

(தூதுவன் தைரஸ் வருகிறான்)

கிளியோ : சீசரின் விருப்பம் என்ன?

தைரஸ் : தனியே கேளுங்கள்.

இனியோ : இவர்களும் நண்பர்கள்தான் ... தைரியமாகச் சொல்லுங்கள்.

தைரஸ் : மகிழ்ச்சி. இவர்கள் அந்தோனிக்கும் நண்பர்களா?

எனோ : சீசருக்கு இருப்பது போன்ற பல நண்பர்கள் அந்தோனிக்குத் தேவைதான். அத்தகு பல நண்பர்கள் கிடைக்கா விட்டால் அவருக்கு நண்பர்களே தேவை இல்லை. ஏனெனில் அவரது நம்பிக்கை பயனற்றதாகும். சீசர் பெருந்தன்மையோடு நடந்து கொண்டால், அந்தோனி எத்தகைய சமாதானத்துக்கும் உடன் படுவார். நாங்களும் அவருடைய நண்பர்கள் என்ற முறையில் இசைவோம்.

தைரஸ் : அப்படியானால் தாங்கள் மரியாதைக்கு உரியவர் கள். நீங்கள் உங்கள் நிலைக்கு அஞ்ச வேண்டியதில்லை. சீசரை நம்பலாம். ஏனென்றால் அவர் சீசர்!

இனியோ : ம்...தொடர்ந்து பேசு...

தைரஸ் : தாங்கள் அந்தோனியுடன் தொடர்பு கொண்டு இருப்பதற்குக் காரணம் அச்சமே ஒழிய அன்பன்று என்று சீசருக்குத் தெரியும்.

இனியோ : ஓகோ!

தைரஸ் : அந்தோனியின் தொடர்பு தங்கட்கு ஒரு பெரும் களங்கமாகும். இருப்பினும் அவர் அதைப் பொருட் படுத்தவில்லை. தங்கள் தொடர்புக்குக் காரணம் தங்களால் தவிர்க்க முடியாமையே தவிர தகுதியானமை என்று சொல்ல முடியாது.

கிளியோ : அவர் ஒரு தெய்வம்! எது சரி என்பது அவருக்குத் தெரியும். எனது காதல் என் விருப்பத்தால் அவருக்கு வழங்கப்படவில்லை; பலாத்காரமாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

ஈனோ : (தனியே) இது உண்மைதானா என்பதை அந்தோனியிடமிருந்தே தெரிந்து கொள்கிறேன். ஐயா! அந்தோனி! மூழ்கும் கப்பலிலிருந்து எலிகள் ஓடுவது போல, நிலையிழந்த தங்களிடமிருந்து தங்களது நெருங்கிய நண்பர்களும் ஓடுகிறார்கள். (போகிறான்)

தைரஸ் : தங்கட்கு என்ன தேவை என்பதை சீசரிடம் நான் சொல்லலாமா? உங்கள் விருப்பம் என்ன என்பதை அறிய அவர் தங்களை மன்றாடுகிறார். தங்களது இத்துயர நிலையில் தாங்கள் அவரை ஓர் ஊன்று கோலாக நினைத்தால் அவர் பெரிதும் மகிழ்வார். தாங்கள் அந்தோனியைத் தங்கள் தொடர்பிலிருந்து துண்டித்துவிட்டு, அகில உலகத் தலைவராகிய சீசரின் பாதுகாப்பை நாடுகிறீர்கள் என்ற செய்தியை நான் அவரிடம் கூறினால் அவர் பெருமகிழ்ச்சி அடைவார்.

கிளியோ : உன் பெயர் என்ன?

தைரஸ் : என் பெயர் தைரஸ்!

கிளியோ : அன்பான தூதா! மாபெரும் சீசரிடம் இதைச் சொல். வெற்றி மாலை சூடிய அவரது கையை நான் முத்தமிடுவதாகச் சொல். எனது மணிமுடியை அவரது அடியில் வைத்து மண்டியிடுவதாகச் சொல். அவரது தீர்ப்பை நான் பணிவாக அறிய விரும்புவதாகச் சொல்.

தைரஸ் : தாங்கள் இப்பொழுது தேர்ந்தெடுத்துள்ள பாதை சரியானதே. அறிவுக்கும் அதிர்ஷ்டத்துக்கும்

இடையே போர் நடந்து, அதில் அறிவு வென்றால் அதனால் தீங்கு ஒன்றும் நேர்ந்து விடாது. அதிர்ஷ்டம் மாறும். ஆனால் அறிவு மாறாது. தாங்கள் அறிவைத் தேர்ந்தெடுத்துள்ளது போற்றத்தக்கது. தங்கள் கையை நீட்டுங்கள். அன்பு முத்திரை பதிக்கிறேன்.

கிளியோ : உனது சீசரின் தந்தையான ஜூலியஸ் சீசர் நாடுபிடிக்கும் நோக்கத்தில் இருந்தபொழுது தகுதியற்ற எனது கையை முத்தமிட்டார். மழைபோல் பொழிந்தார். (தூதன் கிளியோபாட்ராவின் கையை முத்த மிடுகிறான்)

[அந்தோனியும் எனோபார்பசும் மீண்டும் வருகின்றனர்]

அந்தோ : (கோபமாக) ஜூபிடரின் மீது ஆணை! நீ யாரடா பயலே!

தைரஸ் : மனித குல திலகமான சீசரின் பணியாளர் நான். அவருடைய ஆணைக்குப் பணிவது நல்லது அல்லவா?

எனோ : (தனியே) நீ சவுக்கடி படப் போகிறாய்.

அந்தோ : ஏவலர்களே! வாருங்கள்...... மோசக்காரி!... (ஏவலர்கள் உடனே பணியவில்லை. சொன்னது செய்யவில்லை)... கடவுளே!... சனியன்!... அதிகாரம் என்னைவிட்டுக் கரைகிறது. முன்பு நான் "ஓ" என்று சொன்னால் கிளிஞ்சல் பொறுக்கும் குழந்தைகள் போல அரசர்கள் என் ஆணை கேட்க ஓடி வந்தார்கள்...ஏ ஏவலர்களே! உங்கட்குக் காது கேட்கவில்லையா? நான் இன்னும் அந்தோனிதான்!

[ஏவலர்கள் வருகின்றனர்]

அந்தோ : இந்தக் கயவனை இழுத்துச் சென்று சவுக்கடி கொடுங்கள்.

எனோ : (தனியே) சாகும் கிழச் சிங்கத்தோடு விளையாடுவதைவிடச் சிங்கக் குட்டியோடு விளையாடுவது நல்லது.

அந்தோ : (ஏவலர்கள் தைரசை இழுத்துச் செல்ல அஞ்சுகின்றனர்) சந்திரன் மீதும் நட்சத்திரத்தின் மீதும் ஆணை! அவனைச் சவுக்கால் அடியுங்கள். சீசரை மாவீரன் என்று ஆமோதிக்கும் அரசர்கள் இருபது பேரானாலும் வந்து கிளியோ பாட்ராவின் கையில் முத்தமிட்டால் இதே தண்டனைதான் கிடைக்கும். ஆனால் ஒரு காலத்தில் கிளியோபாட்ரா...இப்பொழுது மாறிவிட்டாள். ஏவலர்களே! இவனைச் சவுக்கால் அடித்து நொறுக்குங்கள். சிறுவனைப் போல இவன் முகம் வேதனையால் சுருங்கும் வரை வெளுத்துக் கட்டுங்கள். கருணைக் குரல் கொடுக்கும் வரை கதறக் கதற அடியுங்கள்...இவனை இழுத்துச் செல்லுங்கள்......

தைரஸ் : (பயத்துடன்) அந்தோனி!

அந்தோ : விரைந்து இழுத்துச் செல்லுங்கள். சவுக்கால் அடித்ததும் மீண்டும் இவனை இங்கே கொண்டு வாருங்கள். இவனிடம் சீசருக்குச் செய்தி அனுப்ப வேண்டும். (ஏவலர்கள் தைரசை இழுத்துச் செல்லுகின்றனர்)

அந்தோ : (கிளியோ பாட்ராவை நோக்கி ஆத்திரத்துடன்) நான் உன்னைச் சந்திக்கு முன்பே நீ மானம் கெட்டவள்! ஆ! ரோமில் நான் எனது இல்லற வாழ்க்கையைத் துறந்து, மாதர்குல திலகமான மங்கை ஆக்டேவியாவை மறந்து, சட்டரீதியான வாரிசை உண்டாக்காமல் வந்தது எல்லாம் இங்கே உன்னால் ஏமாற்றப்படத்

தானா? நீயோ ஒரு கீழ்மகனுக்குக் கூட உன் கையை முத்தமிட நீட்டுகிறாய்.

கிளியோ : பிரபு!

அந்தோ : நீ எப்பொழுதுமே குற்றவாளிதான்! நாம் பாவத்தில் அழுந்தியபொழுது அறிவுள்ள தெய்வங்கள் நம் கண்களை இறுக மூடிவிட்டன. பாவத்தில் புதைந்ததால் தெளிவான முடிவெடுக்கும் ஆற்றலையும் நாம் இழந்துவிட்டோம். நமது பாவங்களையே நாம் புகழ்ந்தோம்; தொடர்ந்தோம்; அழிந்தோம்.

கிளியோ : ஓ! அதன் விளைவு இதுவா?

அந்தோ : (கோபமாக) நான் உன்னை முதலில் சந்தித்த பொழுது நீ ஜூலியஸ் சீசரின் தட்டில் உண்ணப்பட்ட மிச்ச உணவாக இருந்தாய்! செனியஸ் பாம்பே கை பட்டுச் சிதறிய துணுக்காக இருந்தாய். எனக்குத் தெரியாமல் இன்னும் உனக்கு எத்தனையோ காதலர்கள் இருந்திருக்கலாம். கற்பு என்றால் என்ன என்று உனக்குத் தெரிந்தும் நீ அதைக் கடைப்பிடிக்கவில்லை என்பது நிச்சயம்.

கிளியோ : இதெல்லாம் என்ன பேச்சு?

அந்தோ : கை நீட்டிப் பரிசு பெற்று நன்றி கூறும் ஒரு கீழ்மகனுக்கு நீ கைகொடுக்கிறாய்! இந்தக் கை பேரரசர்களின் அன்புக்கும் முத்திரைக்கும் பாத்திரமானது...பாசன் மலை உச்சியில் நான் நின்றபொழுது காட்டெருமைகளின் முழக்கத்தையும் வெல்லும் அளவுக்கு முழங்கினேன். அதுபோல் எனக்கு இப்பொழுதும் முழங்கத்தக்க அநாகரிகக் காரணம் இருக்கிறது. அந்தக் காரணத்தை நான் அமைதியாகச் சொல்வது,

தூக்குமேடைக்கு அழைத்துச் செல்லப்பட்ட ஒருவன் தன் கழுத்தில் சரியான முறையில் கயிற்றை மாட்டியதற்காகக் கொலையாளிக்கு நன்றி சொல்வதற்கு ஒப்பாகும்!

(ஏவலர்கள் தைரசை மீண்டும் இழுத்து வருகின்றனர்.)

அந்தோ : இவனை நன்றாக அடித்தீர்களா?

முதல் ஏவலன் : சத்தம் வரும்படியாக அடித்தோம் பிரபு!

அந்தோ : இவன் கத்தினானா? மன்னிப்புக் கேட்டானா?

முதல் ஏவலன் : ஆம். மன்றாடினான்.

அந்தோ : (தைரசிடம் ஆத்திரமாக) உன் அப்பன் உயிரோடிருந்தால், நீ பெண்ணாகப் பிறக்காததற்கு வருத்தப்படட்டும். சீசரை அவனுடைய வெற்றி நாளில் பின்பற்றியதற்காக நீ சவுக்கடி பட்டிருக்கிறாய். இனிமேல் நங்கையரின் கை உனக்கு அச்சத்தையும் நடுக்கத்தையும் தரட்டும். போ...சீசரிடம் திரும்பிப் போ...நீ பட்ட பாட்டை அவனிடம் சொல். கவனி, அவனிடம் சொல்...அவனுடைய நடவடிக்கையால் எனக்கு ஆத்திரமூட்டுகிறான் என்று சொல். அவன் தன்னைப் பற்றி வீண் பெருமை கொண்டு, எனது இக்கால நிலையைப் பிறரிடம் வர்ணிக்கிறான்; எனது முற்கால நிலைபற்றி மூச்சு விடுவதே இல்லை. அதனால் எனக்கு ஆத்திரமூட்டுகிறான். இப்பொழுது அதைச் செய்வது மிக எளிது. எனது நல்ல நட்சத்திரங்கள், இதுவரை எனக்கு வழிகாட்டி வந்தவை இப்பொழுது நரகத்தின் அடியில் மறைந்துவிட்டன. அவன் எனது

பேச்சை வெறுத்தாலும், எனது செய்கையை வெறுத்தாலும் அவனிடம் சொல்...என்னிடமிருந்து ஓடி இப்பொழுது அவனிடம் சேர்ந்திருக்கும் ஹிப்பார்க்கஸ் என்பவனைப் பதிலுக்குப் பதிலாகச் சவுக்கால் அடிக்கச் சொல்; அல்லது அவனைத் தூக்கில் போடச் சொல்; அல்லது சித்திரவதை செய்யச் சொல்...அவன் என்னை விட்டு ஓடியதற்காக அவனுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும். அதைச் செய்யும்படி சீசரைத் தூண்டு. உனது தழும்புகளைக் காட்டி மேலும் தூண்டு. போ...ஓடு...(தைரஸ் ஓடுகிறான்)...

கிளியோ : எல்லாம் முடிந்ததா?

அந்தோ : அந்தோ! நமது ஒளிமிக்க சந்திரனை (கிளியோபாட்ரா) கிரகணம் பிடித்துவிட்டது. அது அந்தோனியின் வீழ்ச்சியைக் காட்டும் கெட்ட சகுனமாகும்!

கிளியோ : அவருக்கு ஆத்திரம் தணியும் வரை நான் காத்திருக்க வேண்டும்.

அந்தோ : சீசரை மகிழ்விப்பதற்காக ஒரு கீழ் மகனையும் காதலிப்பாயா?

கிளியோ : இன்னும் தாங்கள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை!

அந்தோ : நீ என்னைப் பற்றிக் கவலைப்படவில்லை.

கிளியோ : அன்பரே! நான் அப்படியிருந்தால் எனது நெஞ்சம் நஞ்சாகட்டும்! எனது தலையில் ஆலங்கட்டி மழை விழட்டும்! எனது உயிர் பிரியட்டும்! எனது குழந்தைகளும் சாகட்டும்! உங்கள் மூலம் எனக்கு

உருவாகி என்னை நினைவுபடுத்தும் சந்ததிகளும், எகிப்தியர்களும், ஆலங்கட்டி உருகிப் பெருகும் வெள்ளத்தில் அழியட்டும். சமாதியின்றி அனாதையாகச் சாகட்டும். ஈக்களும் கிருமிகளும் தின்று தீர்க்கட்டும்.

அந்தோ : இப்பொழுது எனக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டது. சீசர் அலெக்சாண்டிரியாவில் அமர்ந்திருக்கிறான். நான் அவன் தலைவிதியைத் தகர்க்கப் போகிறேன். நமது தரைப்படை தக்க பலத்தோடு இருக்கிறது. நமது முறியடிக்கப்பட்ட கப்பற்படையும் இப்பொழுது ஒன்று சேர்ந்திருக்கிறது. அது பகையைக் கலக்கும் பலம் வாய்ந்தது! ஏ இதயமே! இதுவரை ஏன் அஞ்சியிருந்தாய்! கண்ணே! கேட்கிறதா? போர்க்களத்திலிருந்து வெற்றி வாளோடு நான் திரும்பி வந்தால் நானும் என் வாளும் வரலாற்றில் இடம் பெறுவோம். அதில் எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கிறது.

கிளியோ : அதுதான் வேண்டும், அஞ்சா நெஞ்சமே!

அந்தோ : எனது பலம் மும்மடங்காகும்! துணிவோடு போராடுவேன், எதிரி எவனையும் தப்பிக்கவிட மாட்டேன். எனது வளமிக்க நல்ல காலத்தில் பிறருக்கு நான் ஒன்றுமில்லாததற்கெல்லாம் உயிர்ப்பிச்சை வழங்கினேன். ஆனால் இப்பொழுது என்னைப் பகைக்கும் அனைவரையும் மரண உலகிற்கு அனுப்புவேன்... வா...மீண்டும் ஓர் இரவை மகிழ்ச்சியாகச் செலவழிப்போம். வருந்தும் எனது தளபதிகள் அனைவரையும் இங்கே வரவழையுங்கள். நமது கிண்ணங்களை மீண்டும் மதுவால் நிரப்புங்கள். காலத்தை மறந்து களிப்பில் மூழ்குவோம்.

கிளியோ : இன்று எனக்குப் பிறந்த நாள்! அது சாதாரண மாகக் கழியட்டும் என்று இருந்தேன். ஆனால் எனது பிரபு மீண்டும் பழைய அந்தோனி ஆகிவிட்டதால், நானும் கிளியோபாட்ரா ஆகிறேன்.

அந்தோ : நாம் மிகவும் மகிழ்ச்சியாகக் கொண்டாடு வோம்.

கிளியோ : (ஏவலரிடம்) பிரபுவின் தளபதிகளை அழையுங்கள்.

அந்தோ : ஆம். அழையுங்கள். நான் அவர்களிடம் பேச விரும்புகிறேன். போரின்போது அவர்கள் பெற்ற புண்களின் வழியே இரத்தத்திற்குப் பதிலாக மது வழியும்படி செய்யப் போகிறேன். அரசியே! வா...... இன்னும் உயிரோட்டம் இருக்கிறது. அடுத்த முறை நான் போராடும் பொழுது சாவு என்னை நேசிக்கும்படி செய்வேன். சாவுடனேயே நான் வீரப்போர் நிகழ்த்து வேன்.

(எனோபார்பசைத் தவிர எல்லோரும் செல் கின்றனர்.)

எனோ : அந்தோனி இப்பொழுது மின்னலையும் எதிர்க்கும் சக்தி பெற்றிருக்கிறார். தளர்ச்சியிலிருந்து எழுந்த அச்சத்தின் வாயிலாக இப்பொழுது அவருக்கு ஆத்திரம் ஏற்படுகிறது. இந்த உணர்ச்சி நிலையில் புழுகூடக் கழுகையும் எதிர்த்துப் போராடும். அவரது அறிவு குறைந்து துணிவு பெருகுவதைக் காண்கிறேன். துணிவு பகுத்தறிவை வெல்லுகின்ற பொழுது அது, தான் பயன் படுத்தும் கத்தியையே அழிக்கிறது...எப்படியிருந்தாலும் நான் அந்தோனியைவிட்டுப் பிரிவதற்கு ஏற்ற வழியைக் காண வேண்டும்.

(போகிறான்)

## களம் 4 காட்சி—1

இடம் : அலெக்சாண்டிரியாவுக்கு முன்னால்
சீசரின் பாசறை.

[சீசர், அக்ரிப்பா, மெசினஸ், மற்றும் படைவீரர்கள் வருகின்றனர். சீசர் ஒரு கடிதத்தைப் படிக்கிறார்.]

சீசர் : அவன் என்னைப் பையன் என்று அழைக்கிறான், என்னை எகிப்தை விட்டே விரட்டக் கூடிய அளவுக்குப் பலம் வாய்ந்தவனைப் போலக் கடிதம் வரைகிறான். எனது தூதுவனைச் சவுக்கால் அடிக்கிறான். என்னைத் தனிப்போருக்கு வருமாறு சவால் விடுகிறான். சீசர் அந்தோனியோடு வாட்போர் நிகழ்த்துவதா? அந்தக் கிழட்டுக் கயவன் அறிந்து கொள்ளட்டும். எனக்குச் சாவதற்கு வேறு பல வழிகள் இருக்கின்றன. அவனது சவாலைக் கண்டு சிரிக்கத்தான் வேண்டும்.

மெசினஸ் : சீசர் அவர்கள் அறிந்து கொள்ள வேண்டும்... அந்தோனியைப் போன்ற ஒரு மாவீரன் ஆத்திரமடைகின்றபொழுது அவன் தற்கட்டுப்பாட்டை இழக்கிறான். எனவே அவனது வீழ்ச்சி விரைந்து வருகிறது! அவன் மீண்டும் துளிர்க்கவோ, தலையெடுக்கவோ வாய்ப்பளிக்காதீர்கள். ஆத்திரக்காரன் தன்னைச் சரிவரக் காப்பாற்றிக் கொள்ள முடியாது.

சீசர் : நமது படைத்தளபதிகள் அறியட்டும்! நாளை நமது இறுதிப் போரைத் தொடங்குகிறோம். நமது முன்வரிசையில் இருக்கும் பலர் அந்தோனியிடம் சமீப காலம் வரை வேலை பார்த்தவர்கள். அவர்கள்

அந்தோனியைச் சிறை பிடிப்பார்கள். அது நடைபெற ஆவன செய்க! படைக்கு விருந்து பரிமாறுங்கள். நம்மிடம் அதற்கு ஏற்ற பொருள்கள் உள்ளன. அதற்குரிய வெற்றித் தருநியும் அவர்களுக்கு இருக்கிறது. வயிறு குளிர விருந்து வையுங்கள்!... பாவம் அந்தோனி! (போகிறான்)

எனோ : (கிளியோபாட்ராவிடம் தனியே) துயரம் படிந்த நெஞ்சிலிருந்து துடித்து வரும் கற்பனைகள்!

அந்தோ : நீங்கள் மிகவும் நேர்மைமிக்கவர்கள் கூட! நீங்கள் அனைவரும் சேர்ந்து ஒரு அந்தோனியாகவும், நான் தனித்தனியே நீங்களாவும் ஆக விரும்புகிறேன். அதன் மூலம் நீங்கள் எனக்குச் செய்த பணிவிடையை நான் உங்கட்குச் செய்ய விரும்புகிறேன்.

எல்லோரும் : கடவுள் அதைத் தவிர்ப்பாராக!

அந்தோ : நல்லது! என் அருமை ஆட்களே! இன்றிரவு என்னுடன் தங்குங்கள். குறைத்துக் குடிக்காதீர்கள். நான் ஒரு பேரரசின் தலைவனாக இருந்த பொழுது என் ஆணைக்கு எப்படிப் பணிந்தீர்களோ அதுபோல் பணியுங்கள்.

கிளியோ : (எனோபார்பசிடம் தனியே) அவர் என்ன சொல்கிறார்?

எனோ : (கிளியோபாட்ராவிடம் தனியே) அவர் தன் ஆட்களை அழச் சொல்கிறார்.

அந்தோ : இன்றிரவு எனக்குச் சேவை செய்யுங்கள். அது உங்கள் கடைசி சேவையாக இருக்கலாம். நான் இனி

நீண்ட நாள் வாழமாட்டேன். காயம் படிந்த பிணமாக என்னை நீங்கள் காணலாம். ஒருவேளை நாளை நீங்கள் வேறொரு தலைவனுக்குச் சேவை செய்ய நேரலாம். விடைபெறும் ஒருவனைப் போல் உங்கள் முன் நான் விளங்குகிறேன். எனது இனிய நண்பர்களே! நான் உங்களை அனுப்பவில்லை. மனைவியிடம் நம்பிக்கையாக இருக்கும் மனிதனைப் போல நான் உங்கள் சேவையில் என் சாவுவரை நம்பிக்கை வைத்துள்ளேன். இன்றிரவு எனக்கு இரண்டு மணி நேரம் சேவை செய்யுங்கள். அதற்கு மேல் உங்களிடம் நான் கேட்கவில்லை. உங்கள் சேவைக்கு ஏற்ற பரிசைக் கடவுள் வழங்குவார்.

ஏனோ : அரசே! தாங்கள் என்ன பேசுகிறீர்கள்? ஏன் அவர்களை வருந்த வைக்கிறீர்கள்! அவர்களைப் பாருங்கள்... அழுகிறார்கள். என்னையும் பாருங்கள். கழுதை நான்கூட அழுகிறேன். நாங்கள் இன்னும் பெண்களைப் போல் கதறி அழுவோம்; ஆனால் வெட்கம் தடுக்கிறது.

அந்தோ : ஓ! ஓ! நான் உங்களைக் கதற வைக்க நினைத்திருந்தால் என்னைச் சனியன் பிடிக்கட்டும்! கண்ணீர் துளிர்க்கும் இடத்தில் கருணை இருக்கிறது. என் இனிய நண்பர்களே! நீங்கள் என் வார்த்தைகளைத் துயரப் பொருளில் எடுத்துக் கொண்டு விட்டீர்கள். நான் உங்கட்கு ஆறுதல் கூறினேன். இன்று இரவு முழுதும் நீங்கள் மகிழ்ச்சியில் திளையுங்கள். அறிந்து கொள்ளுங்கள். என் இதயங்களே! நாளை நான் உங்களைப் போர்க்களத்திற்கு அழைத்துச் செல்கிறேன். அங்கே சாவைத் துரத்தி, வாகை சூடுவோம்.— இப்பொழுது விருந்துண்ணச் செல்வோம். வாருங்கள். தளர்ச்சி நீங்கி மகிழ்ச்சி கொள்வோம். (எல்லோரும் போகின்றனர்)

## காட்சி—3

இடம் : அலெக்சாண்டிரியா—கிளியோபாட்
ராவின் அரண்மனைக்கு முன்னால்

[அந்தோனியின் வீரர்கள் இருவர் காவலுக்கு வருகின்றனர்]

முதல் வீரன் : நண்பா! இரவு வணக்கம்! கடைசியாக அந்த நாள் நாளை வருகிறது!

இரண்டாம் வீரன் : அது ஏதாவது ஒரு வழியைத் தீர் மானிக்கும்! வணக்கம்! நீ ஏதாவது புதிய வதந்திகள் கேள்விப்பட்டாயா?

முதல் : இல்லை... என்ன செய்தி?

இரண்டாம் : இருக்கலாம்... ஆனால் அது வதந்திதான். இரவு வணக்கம்!

முதல் : நல்லது... இரவு வணக்கம்!

(மற்றும் இரண்டு வீரர்கள் வருகின்றனர்)

இரண்டாம் : வீரர்களே! கவனமாகக் காவல் செய்யுங்கள்.

மூன்றாம் வீரன் : நீங்களும்தான்... இரவு வணக்கம்!

[மேடையின் ஒவ்வொரு மூலையிலும் ஒவ் வொருவர் நின்று காவல் காக்கின்றனர்]

நான்காம் வீரன் : நாளை நமது கப்பற்படை சீசரின் கப்பற் படைக்கு எதிர் நிற்குமேயானால், நிச்சயமாக நமது தரைப்படை அவரது தரைப்படையைப் புறமுதுகு காட்டச் செய்வது உறுதி!

மூன்றாம் : நமது தரைப்படை மிகவும் வீரம் செறிந்தது! அது சீசரின் படையை வென்றே தீர்வது என்று உறுதி பூண்டிருக்கிறது.

(மேடைக்குக் கீழே இருந்து வாத்தியங்கள் இசைக்கின்றன.)

நான்காம் : அமைதி! அது என்ன சப்தம்?

முதல் : கவனி! கவனி!

இரண்டாம் : கவனி!

முதல் : காற்றில் ஏதோ இசை!

மூன்றாம் : பூமிக்குக் கீழே கேட்கிறது.

நான்காம் : இசை நன்றாக இருக்கிறது. இல்லையா?

மூன்றாம் : இல்லை.

முதல் : அமைதி! இந்த இசை எதைக் குறிக்கிறது?

இரண்டாம் : அந்தோனி நேசித்த தெய்வமான ஹெர்க்குலிஸ் இப்பொழுது அவரைவிட்டுச் செல்லுகிறது.

முதல் : நடங்கள்... நம்மைப் போல் வேறு காவலர் யாரேனும் இந்த இசையைக் கேட்டார்களா என்று கவனிப்போம்.

(நால்வரும் வேறொரு மூலைக்குச் செல்கின்றனர்)

இரண்டாம் : நண்பர்களே!

அனைவரும் : (ஒன்றாக) என்ன? என்ன? கேட்டீர்களா?

முதல் : ஆ!... இது வியப்பாக இல்லையா?

மூன்றாம் : கேட்டீர்களா நண்பர்களே! கேட்டீர்களா?

முதல் : நாம் இந்த இசையை நமது காவல் எல்லை வரை பின் தொடர்ந்து சென்று கவனிப்போம். அது எப்படி முடிகிறது என்பதையும் கவனிப்போம்.

அனைவரும் : நல்லது... அப்படியே செய்வோம்... அது ஒரு புதுமை!

(இசையைப் பின்தொடர்ந்து செல்கின்றனர்)

## காட்சி—4

இடம் : அலெக்சாண்டிரியா—கிளியோபாட்ராவின் அரண்மனையில் ஓர் அறை.

[அந்தோனி, கிளியோபாட்ரா, சார்மியான் மற்றும் சிலர் வருகின்றனர்.]

அந்தோ : ஈராஸ்! எனது கவசத்தைக் கொண்டு வா... ஈராஸ்!

கிளியோ : இன்னும் சிறிது உறங்குங்கள்...

அந்தோ : இல்லை கண்ணே!... ஈராஸ்... வா... என் கவசத்தைக் கொண்டு வா...

(அந்தோனியின் கவசத்துடன் ஈராஸ் வருகிறான்.)

வா... நல்லவனே!... என்மீது அதை அணிவி! இன்று நமக்கு அதிர்ஷ்டம் வராவிட்டால்

அதற்குக் காரணம் நாம் அதை எதிர்ப்பதே ஆகும்... வா...

கிளியோ : இல்லை... நானும் உதவி செய்கிறேன்... இது (கவசம்) எதற்காக?

அந்தோ : ஆ... வேண்டாம் வேண்டாம்... நீ என் இதயத்திற்குக் கவசம் அணிவிப்பவள்! எனக்கு அணிவிக்க வேண்டாம்... சரி - தப்பு தப்பு... இப்படி இப்படி... அணிவி...

கிளியோ : (கவசம் அணிவித்தவாறு) நிச்சயமாக நான் உதவி செய்வேன்... இப்படித்தான் அணிவிக்க வேண்டும்...

அந்தோ : நன்று நன்று! நாம் முன்னேற வேண்டும். நல்ல வீரனே! தெரிகிறதா? போ...போய்த் தற்காப்பு உடை அணிந்து ஆயுதங்களை ஏந்தி வா!

ஈராஸ் : அப்படியே விரைவில் வருகிறேன்.

கிளியோ : உங்களுக்குப் பித்தான் சரிவரப் போடப்பட்டிருக்கிறது... இல்லையா?

அந்தோ : ஆம் ஆம்... இந்தப் பித்தானை என் விருப்பமின்றி முறிப்பவன் சாவை முத்தமிடுவான். பித்தானைப் போடுவதில் நீ தவறு செய்கிறாய். ஈராஸ்! என் அரசி உன்னைவிட நன்கு செய்கிறாள். அன்பே! இன்று என் போர்த்திறனைப் பார்...மன்னனுக்கு உரிய மாவீரத்தை நீ காண்பாய். போர் நுட்பத்தை நீ அறிவாய். (ஆயுதம் தரித்த வீரன் ஒருவன் வருகிறான்) காலை வணக்கம்! வருக! பகைவனைத் தாக்குவதில்

பயிற்சி பெற்ற ஒருவனைப் போல் நீ காண்கிறாய். நாம் மிகவும் விரும்பும் போருக்காக இன்று வைகறையிலேயே எழுந்து விட்டோம். விருப்பத்தோடு போருக்குச் செல்கிறோம்.

வீரன் : வைகறையாக இருந்தும், ஆயிரம் வீரர்கள் ஆயுத பாணிகளாய்த் தங்கள் வருகைக்காக ஆர்வமுடன் தலை வாசலில் காத்திருக்கின்றனர்.

[போர் முரசு முழங்குகிறது.]

(தளபதியும் வீரர்களும் வருகின்றனர்.)

தளபதி : நன்கு விடிகிறது. காலை வணக்கம்! அரசே!

வீரர்கள் அனைவரும் : அரசே! வணக்கம்!

அந்தோ : இளைஞர்களே! கீழ்வானம் நன்கு விடிகிறது. வீர வாழ்க்கையைத் தொடங்கும் இளைஞனின் உணர்ச்சி இன்று நமக்கு இருக்கிறது. வாருங்கள். களத்துக்குச் செல்வோம்...உங்கட்கு என் வாழ்த்துக்கள்! அன்பே! (கிளியோபாட்ராவிடம்) எனக்கு என்ன நேர்ந்தாலும்...இது ஒரு வீரனின் முத்தம்! (முத்தமிடுகிறான்) விடை பெறும்பொழுது ஒருவன் தன் காதலியை முத்தமிடாவிட்டால் அது வெட்கப்படத்தக்கதாகும். கிளியோபாட்ரா!...உன்னை நான் ஒரு இரும்பு மனிதனைப் போல விட்டுச் செல்கிறேன்...வீரர்களே! போருக்கு வருபவர்கள் என் பின்னே வாருங்கள். நான் உங்களை அழைத்துச் செல்கிறேன்......வணக்கம்.

(அந்தோனி, ஈராஸ், தளபதிகள், வீரர்கள் ஆகியோர் இறுதிப் போருக்குச் செல்கின்றனர்.)

சார்மியான் : அரசி! அந்தப்புரத்துக்குச் செல்லுங்கள்.

கிளியோ : அழைத்துச் செல்...அவர் வீரமுடன் களத்துக்குச் செல்கிறார். அவரும் சீசரும் தனிப்போர் நடத்தி முடிவெடுத்தால் வெற்றி அந்தோனிக்குத்தான். ஆனால் இப்பொழுது...நல்லது! நடக்கட்டும்!

(போகிறாள்.)

## காட்சி—5

இடம் : அலெக்சாண்டிரியா, அந்தோனியின் பாசறை.

[போர் முரசு முழங்குகிறது. அந்தோனியும் ஈராசும் வருகின்றனர். வீரன் ஒருவன் அவர்களைச் சந்திக்கிறான்.]

வீரன் : இந்நாள் அந்தோனிக்கு மகிழ்ச்சிகரமான நாளாக அமையக் கடவுளர்கள் அருள் புரியட்டும்!

அந்தோ : நீ முன்பு அறிவுறுத்தியபடி நான் அன்று நிலப் போர் நிகழ்த்தியிருந்தால்...

வீரன் : அவ்வாறு நீங்கள் செய்திருந்தால் உங்களை ஒதுக்கி விட்டு எதிர்ப்பக்கம் ஓடிய அரசர்கள் ஓடியிருக்க மாட்டார்கள். இன்று காலை தங்களை விட்டு ஓடிய வீரனும் ஓடியிருக்க மாட்டான். அனைவரும் இன்னும் தங்கள் காலடியில் இருப்பார்கள்.

அந்தோ : இன்று காலை ஓடிய வீரன் யார்?

வீரன் : யாரா? எப்பொழுதும் தங்கள் அருகிலேயே இருந்தவன். எனோபார்பஸ் என்று அழையுங்கள்! உங்கள் அழைப்பு அவனுக்கு இனிக் கேட்காது. சீசரின் பாசறையிலிருந்து அவன் பதில் வரும்—''நான் இனி உங்கள் ஆள் இல்லை'' என்பான்...

அந்தோ : நீ என்ன சொல்கிறாய்?

வீரன் : அரசே! அவன் சீசர் பக்கம் சென்றுவிட்டான்.

ஈராஸ் : அரசே! அவனுக்கு உரிய பொருள்களை அவன் எடுத்துச் சென்றுவிட்டான். ஆனால் அவனுக்குத் தாங்கள் வழங்கிய பொருளையும் பெட்டியையும் எடுத்துச் செல்லவில்லை.

அந்தோ : அவன் போய்விட்டானா?

வீரன் : ஆம்...உறுதியாகப் போய்விட்டான்.

அந்தோ : போ...ஈராஸ்! அவனது செல்வத்தை அவனிடம் சேர். அதைச் செய். அவனது ஒரு சிறு பொருளைக்கூட இங்கே வைக்காதே. உனக்கு ஆணையிடுகிறேன். அவனுக்குக் கடிதம் எழுது. எனது வாழ்த்துக்களைத் தெரிவி! இனியேனும் அவன் தன் தலைவனை மாற்றக் கூடாது என்று நான் விரும்புவதாக எழுது. அந்தோ! எனது துரதிர்ஷ்டம் நேர்மையானவர்களைக் கூடக் கீழ்மையாக்கி விட்டதே! போ...எனோபார்பஸ் (போகிறான்.)

## காட்சி — 6

இடம் : அலெக்சாண்டிரியா—சீசரின் பாசறை.

[முரசு முழங்குகிறது. சீசர், அக்ரிப்பா, எனோ பார்பஸ் மற்றும் பலர் வருகின்றனர்.]

**சீசர் :** போ—அக்ரிப்பா! போய்ப் போரைத் தொடங்கு. நமது விருப்பம் அந்தோனியை உயிரோடு சிறை பிடிப்ப தாகும்! எல்லோருக்கும் அதைத் தெரிவி!

**அக்ரிப்பா :** சீசர் அவர்களே! அப்படியே செய்கிறேன். (போகிறான்.)

**சீசர் :** உலக அமைதி உருவாகும் நேரம் நெருங்குகிறது. இந்நாள் ஒரு நன்னாளாக அமைக! மூன்று கூறாகப் பிரிந்து கிடந்த ரோமப் பேரரசில் இனி அமைதி தழைக்கட்டும்!

(தூதுவன் ஒருவன் வருகிறான்.)

**தூதுவன் :** அந்தோனி களத்திற்கு வந்துவிட்டார்...

**சீசர் :** போ...அக்ரிப்பா! போய் அந்தோனியை விட்டு நம்மிடம் ஓடி வந்திருக்கும் ஆட்களை முன் வரிசையில் நிறுத்து. அவர்களைப் பார்த்து அவன் ஆத்திரம் கொண்டு பலமிழக்கட்டும்.

(எனோபார்பசைத் தவிர எல்லோரும் செல்கின்றனர்.)

**எனோ :** ஜுரி மாகாணத்து அரசன் ஹெரோட்ஸ் அந்தோனிக்கு எதிராகக் கலகம் செய்தான். அவனைத்

தன்பக்கம் இழுப்பதற்காக அந்தோனி அலெக்சாஸை அவனிடம் தூதனாக அனுப்பினான். ஆனால் அலெக்சாஸ் அந்தோனிக்கு நேர்மையாக நடக்காமல், சீசர் பக்கம் சேருமாறு ஹெரோட்சைத் தூண்டிவிட்டுத் தானும் சேர்ந்தான். அதற்கு அவனுக்குக் கிடைத்த பரிசு என்ன? சீசர் அவனுக்குத் தூக்குத்தண்டனை விதித்தார். கனிடியசும், மற்றவர்களும் சீசர் பக்கம் சேர்ந்தார்கள். சீசர் அவர்களை நம்பவில்லை. அவர்களுக்குத் தக்க பதவிகள் அளிக்கவில்லை. இப்பொழுது நான் சேர்ந்துள்ளேன். அதற்காக நான் என்னையே நொந்து கொள்கிறேன். இனி எனக்கு மகிழ்ச்சியே இல்லை.

(சீசரின் படைவீரன் ஒருவன் வருகிறான்.)

வீரன் : எனோபார்பஸ்! அந்தோனி உனது செல்வத்தை உனக்கு அனுப்பியிருக்கிறார். அத்துடன் தனது பரிசுப் பொருள்களையும் சேர்த்து அனுப்பியிருக்கிறார். நான் காவல் காத்த பொழுது அந்தத் தூதுவன் வந்தான். அவன் கொண்டு வந்த பொருள்கள் எல்லாம் உனது குடிலில் இறக்கப்படுகின்றன.

எனோ : அவற்றை எல்லாம் உனக்கு அளிக்கிறேன்.

வீரன் : கேலி செய்யாதே, எனோபார்பஸ்! நான் சொல்வது உண்மை. அவன் இங்கிருந்து மீண்டு செல்ல ஆவன செய்—எனக்கு வேறு வேலை இருக்கிறது. இல்லாவிட்டால் அதனையும் நானே செய்து விடுவேன். உனது பேரரசர் ஜூபிடரைப் போல் இன்னும் பெருந்தன்மை வாய்ந்தவராகவே இருக்கிறார். (போகிறான்)

ஏனோ : நான் ஒருவன்தான் இந்த உலகத்திலேயே கொடியவன்! நான் அதை உணர்கிறேன். ஓ! அந்தோனி நான் துரோகம் செய்தபொழுதே எனக்குப் பொன்னும் பொருளும் பரிசு வழங்கியிருக்கிறீர்கள். நான் நம்பிக் கையாக இருந்திருந்தால் இன்னும் எவ்வளவு வழங்கி இருப்பீர்கள்! இது என் இதயத்தைத் தகர்க்கிறது. எனது சோக நினைவுகள் என் இதயத்தை உடைக்கா விட்டால் நான் அதை உடைக்க வேறு வழிகளைக் கையாள வேண்டும். ஆனால் என் இதயம் வெடிக்கத் துயர எண்ணங்களே போதும்!...போரில் நான் உங்களை எதிர்த்துப் போராடுவதா? முடியாது. நான் போய் ஏதாவது சாக்கடையைக் கண்டு பிடித்து அதில் விழுந்து சாகப் போகிறேன். எனது வாழ்வின் கடைசிப் பகுதி துரோகமானது. ஆகையால் மோசமான சாக்கடைதான் என் சாவுக்கு ஏற்ற இடமாகும்! (போகிறான்)

## காட்சி—7

இடம் : போர்க்களம்.

[முரசு முழங்குகிறது. அக்ரிப்பாவும் பிறரும் வருகின்றனர்.]

அக்ரிப்பா : செல்லுங்கள்... நாம் அதிகம் போராடி விட்டோம். சீசர்கூடத் தன் நிலையை அரும்பாடுபட்டே காத்துக் கொண்டிருக்கிறார்—அவ்வளவு கடும்போர்! (போகிறான்)

[முரசு முழங்குகிறது. அந்தோனியும், ஸ்காரசும் காயம்பட்ட நிலையில் வருகின்றனர்.]

ஸ்காரஸ் : ஓ! ஆற்றல்மிக்க அரசே! சரியான போர்! இவ்வாறு நாம் தொடக்கத்திலேயே போராடியிருந்தால் எதிரிகளின் தலையில் துணியைச் சுற்றி வீட்டுக்கு விரட்டியிருக்கலாம்.

அந்தோ : உனக்கு இரத்தம் அதிகமாக வருகிறதே!

ஸ்காரஸ் : முதலில் எனது காயம் T மாதிரி இருந்தது. இப்பொழுது அது H மாதிரி ஆகிவிட்டது.

அந்தோ : எதிரிகள் செல்கிறார்கள்.

[ஈராஸ் வருகிறான்]

ஈராஸ் : அரசே! எதிரிகளுக்குச் சரியான அடி! நமக்கு வெற்றி கிட்டச் சரியான வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

ஸ்காரஸ் : நாம் அவர்களை முதுகில் தாக்கி முயலைப் பிடிப்பதுபோலப் பிடிப்போம். ஓடும் எதிரியை உதைப்பதும், பிடிப்பதும் நல்ல விளையாட்டு!

அந்தோ : நீ கொண்டு வந்த ஆறுதல் செய்திக்காக உனக்கு மீண்டும் பரிசளிக்கிறேன். உனது வீரத்துக்காக இன்னும் பத்து மடங்கு பரிசளிக்கிறேன் வா...

ஸ்காரஸ் : நானும் பைய வருகிறேன். (போகின்றனர்)

## காட்சி - 8

இடம் : அலெக்சாண்டிரியா கோட்டைச் சுவரின் கீழ்.

[முரசு முழங்குகிறது. அந்தோனி, ஸ்காரஸ், மற்றும் பலர் வெற்றி வீரர்களாக வருகின்றனர்.]

அந்தோ : நாம் அவனை அவனது முகாமுக்கு அடித்து விரட்டி விட்டோம். ஒருவன் முன்னால் ஓடிச் சென்று அரசியிடம் நமது சாதனை பற்றி விவரிக்கட்டும். இன்று தப்பியவர்களின் இரத்தத்தை நாளை நாம் சிந்தப் போவது உறுதி! உங்கள் அனைவருக்கும் நன்றி செலுத்துகிறேன். நீங்களெல்லாம் வீரமாகப் போரிட்டீர்கள். எனது நோக்கத்தையும் உங்களது நோக்கமாகக் கொண்டு அரும்போர் புரிந்தீர்கள். நீங்கள் அனைவரும் வீரமிக்க ஹெக்டார் போலத் திறமையாகப் போராடினீர்கள். நகரத்தில் நுழைந்து உங்கள் மனைவியையும் நண்பர்களையும் தழுவி உங்களது வீர சாகசங்களைப் பற்றிய செய்திகளைவிவரியுங்கள். அவர்களது மகிழ்ச்சிக் கண்ணீர் உங்களது காயங்களில் காய்ந்துள்ள இரத்தத்தைக் கழுவட்டும். அவர்களது அன்பு முத்தம் உங்கள் புண்களை ஆற்றட்டும். (ஸ்காரசை நோக்கி) உனது கைகளைக் கொடு. (கிளியோபாட்ரா தன் தோழியருடன் வருகிறாள்) உனது வீரச் செயல்களைப் பற்றி இந்தத் தேவதை கிளியோபாட்ராவிடம் விளக்கப் போகிறேன். அவளது நன்றி உன்னை வாழ்த்தட்டும். (கிளியோபாட்ராவிடம்) அன்பே! உலகத்தின் அரும்புகளே! உனது அன்புக் கைகளால் என் கருத்தைச் சுற்றி அணை, உனது எல்லா உடையோடும் எனது கவசத்தின் வழியே என் இதயத்தில் புகு! அங்கே இருந்து எனது இதயத் துடிப்பை வெற்றிகரமாக ஆட்சி செய்!

கிளியோ : பேரரசே! பண்பின் உருவமே! மாபெரும் போர்க்களத்திலிருந்து பிடிபடாமல் வருகிறீர்களா?

அந்தோ : குயிலே! நாங்கள் அவர்களை ஓட ஓட விரட்டிப் படுக்க வைத்து விட்டோம். அன்பே! எனது கரு மயிருடன் நரைமயிர் கலந்திருந்தாலும், மூளை எனது நரம்புகளுக்கு உற்சாகமூட்டுகிறது. ஆகவே எந்த இளைஞனையும்போல எத்தகைய சாதனையையும் என்னால் சாதிக்க முடியும். இந்த வீரனைப் பார் (ஸ்காரசைக் காட்டி) உனது கையை இவன் முத்தமிட வழங்கு. எனது வீரனே! அதனை முத்தமிடு! மனித இனத்தின்மேல் வெறுப்புற்ற கடவுள் அதனை அழிப்பதற்காக உருவம் எடுத்து வந்து போராடுவது போல நீ போராடினாய்.

கிளியோ : நண்பனே! உனக்கு நான் ஒரு தங்கக்கவசம் பரிசளிக்கிறேன். அது ஒரு மன்னருடையது!

அந்தோ : இவனுக்கு அது பொருத்தமான பரிசு! சூரிய தேவனின் இரதத்தைப்போல் விலையுயர்ந்த இரத்தினங்கள் இழைக்கப்பட்டிருப்பினும் அது இவனுக்குத் தகுதியானதே ஆகும். அன்பே! உன் கையை என்னிடம் கொடு. அலெக்சாண்டிரியாவின் வீதிகளில் நாம் இருவரும் இணைந்து அணிவகுத்துச் செல்வோம். நமது உடைந்த கேடயங்களை, உரியவனைப்போல் ஊர்வலமாக எடுத்துச் செல்வோம். நமது அரண்மனை இந்த விருந்தினன் முகாமிடப் போதுமான இடவசதி பெற்றிருந்தால் நாம் அனைவரும் இன்றிரவு ஒன்றாக விருந்துண்டு, மது அருந்தி மகிழலாம். நாளை நமக்கு வர இருக்கும் ஆபத்தை மறந்து களித்திருக்கலாம். முரசு முழங்கியவர்கள் நகரத்தின் காதுகள் செவிபடும் படியாக வெற்றி முரசு கொட்டுகிறார்கள், இசைக் கருவிகளும் இணைந்து ஒலிக்கின்றன. சொர்க்கமே நமது முழக்கத்தால் எதிரொலித்து, நமது வெற்றிக்கு வாழ்த்துக் கூறுகிறது. நகரத்துக்கு நமது வெற்றி வருகையை அறிவிக்கிறது. (போகிறார்கள்)

## காட்சி—9

இடம் : சீசரின் பாசறை.

[காவலர்கள் தத்தம் இடங்களில் நிற்கின்றனர்]

முதல் வீரன் : இன்னும் சிறிது நேரத்தில் நமது பொறுப்பை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளா விட்டால் நாம் மேலிடத்தில் புகார் செய்ய வேண்டியதுதான். சந்திரனும் நட்சத்திரங்களும் நன்கு ஒளி வீசுகின்றன. அதிகாலை இரண்டாம் சாமத்திலேயே போர் அணி வகுப்பில் ஈடுபட வேண்டும் என்று சொல்கிறார்கள்.

இரண்டாம் வீரன் : இன்றைய இறுதி யுத்தம் நமக்கு மிகவும் அழிவைத் தந்தது.

[எனோபார்பஸ் வருகிறான்]

எனோபார்பஸ் : (தனக்குள்) ஏ இரவே! எனக்குச் சாட்சி யாக இரு!

மூன்றாம் வீரன் : இவன் யார்?

இரண்டாம் : நெருங்கி நின்று கவனி.

எனோ : இனிய சந்திரனே! எனக்குச் சாட்சியாக இரு! மக்கள் துரோகிகளை வெறுக்கின்ற பொழுது, ஏ சந்திரனே! நானும் ஒரு துரோகியாக இருந்தாலும்; அதற்காக நான் வருத்தப்பட்டதை நினைந்து கொள்!

முதல் : அவன் எனோபார்பஸ்!

மூன்றாம் : அமைதி! மேலும் கவனி.

எனோ : ஏ நிலவே! துயரத்தை வளர்ப்பவளே! இரவின் நச்சுக்குளிர் என் வாழ்வைப் பறிக்கட்டும்! நான் செய்த மாபெரும் துரோகம் ஒரு பெரிய பாறாங்கல்லாக இருந்து என் இதயத்தை உடைக்கட்டும். சோக வெப்பத்தால் அந்த இதயம் தூளாகட்டும். துரோக எண்ணங்கள் காய்ந்து மறையட்டும். ஓ! அந்தோனி! உங்கள் பெருந்தன்மையால் என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் என்னை மன்னித்துவிட்டால்போதும்; இந்த உலகம் என்னை மாபெரும் துரோகி என்று வரலாற்றில் வைத்துப் பழித்தாலும் நான் கவலைப் படப் போவதில்லை. ஓ! அந்தோனி! அந்தோனி!

[என்று கூறிக்கொண்டே சோகத்தால் மூர்ச்சை யாகிக் கீழே விழுந்து சாகிறான்.]

இரண்டாம் : நாம் அவனிடம் சென்று பேசுவோம்.

முதல் : அவன் பேசுவது சீசரைப் பற்றியதாக இருப்பதால் நாம் அவன் பேச்சைக் கேட்போம்.

மூன்றாம் : அப்படியே செய்வோம். ஆனால் அவன் தூங்குகிறான்.

முதல் : இல்லை. மயங்கிக் கிடக்கிறான். அவனுடைய பிரார்த்தனையைப் போன்ற மோசமான பிரார்த்தனை தூக்கத்தை வரவழைக்காது.

இரண்டாம் : நாம் அவன் அருகில் செல்வோம்.

மூன்றாம் : (எனோபார்பசின் அருகில் சென்று அவனை எழுப்புதல்) எழுந்திருங்கள்! ஐயா! எழுந்திருங்கள். பேசுங்கள்.

இரண்டாம் : ஐயா! நாங்கள் பேசுவது கேட்கவில்லையா?

முதல் : அவன் இறந்து விட்டான். (முரசு முழங்குகிறது) அதோ! கவனியுங்கள். தூங்குபவர்களை எழுப்ப முரசு முழங்குகிறது. நாம் இவனை இராணுவ அலுவலகத் திற்குத் தூக்கிச் செல்வோம். இவன் ஒரு முக்கியமான வீரன். நமது காவல் நேரம் முடிந்து விட்டது.

மூன்றாம் : வாருங்கள். இவனைத் தூக்கிச் செல்வோம். இவன் மயக்கம் தெளிந்து பிழைத்தாலும் பிழைக்கலாம்.

[பிணத்தைத் தூக்கிக் கொண்டு செல்கின்றனர்.]

## காட்சி 10

இடம் : இரண்டு பாசறைகளுக்கும் இடையில்...

[அந்தோனியும், ஸ்காரசும் தங்கள் படையுடன் வருகின்றனர்]

அந்தோ : சீசரின் படை இன்று கடல் தாக்குதலுக்குத் தயாராகிறது. நமது தரைப்படை வெற்றி அவர்கட்கு மகிழ்ச்சியளிக்கவில்லை.

ஸ்காரஸ் : அவர்கள் இரு வழியிலும் தாக்க ஏற்பாடு செய்கிறார்கள் பிரபு!

அந்தோ : அவர்கள் நெருப்பிலும், காற்றிலும் வேண்டு மானாலும் போராடட்டும். நாம் அவர்களை அங்கும் சந்திப்போம். எனது திட்டம் இதுதான். நகருக்கு

அருகில் மலையில் உள்ள நமது தரைப்படை நம்முடன் இருக்கட்டும். சீசரின் கடற் படையைத் தாக்க நமது கப்பல்களுக்கு ஏற்கெனவே ஆணையிட்டு விட்டேன். அவைகள் ஏற்கெனவே துறைமுகத்தை விட்டுப் புறப்பட்டு விட்டன. புறப்படுங்கள். அவற்றின் சாதனையைக் கவனிப்போம். (போகின்றனர்)

## காட்சி 11

இடம்: இரண்டு பாசறைகளுக்கும் இடையே மற்றொரு பகுதி.

[சீசர் தன் படையுடன் வருகிறார்]

சீசர்: தரைமூலம் தாக்கப்பட்டாலொழிய நாம் தரைப் போரைத் தொடங்க வேண்டாம். அத்தகைய சூழ்நிலை ஏற்படலாமென எண்ணுகிறேன். அந்தோனியின் பலம் வாய்ந்த தரைப்படை கப்பற்படைக்குத் துணையாகச் சென்றிருக்கிறது. நாம் இப்பொழுது பள்ளத்தாக்கு நோக்கிச் செல்வோம். நமக்கு வாய்ப்பான நேரத்தை நோக்கிக் காத்திருப்போம். (போகின்றனர்)

## காட்சி 12

இடம் : இரண்டு பாசறைகளுக்கும் இடையே மற்றொரு பகுதி.

[அந்தோனியும் ஸ்காரசும் வருகின்றனர்]

அந்தோ : இதுவரை இன்னும் நமது கடற்படை பகைவர்களைத் தாக்கவில்லை. அதோ தெரிகிற அந்தப் பைன் மரத்தின் அருகில் நின்று எல்லாவற்றையும் கவனிக்கப் போகிறேன். நிலைமை என்னாகும் என்பதைப் பற்றிய செய்தியை நேரே அறிந்து வருகிறேன். (போகிறேன்)

ஸ்காரஸ் : கிளியோபாட்ராவின் கப்பல்களில் குருவிகள் கூடுகட்டியுள்ளன. சோதிடர்கள் துயரக் காட்சி நல்குகின்றனர். ஆனால் ஒன்றும் சொல்ல மறுக்கின்றனர். விளைவு அவர்கட்குத் தெரியும்; ஆனால் சொல்ல மாட்டார்கள். அந்தோனி ஒரு சமயம் துணிவாகவும், மறுசமயம் சோர்வாகவும் இருக்கிறார். நிலையற்ற அவரது அதிர்ஷ்டம் சில சமயம் நம்பிக்கையையும் மறு சமயம் அச்சத்தையும் ஊட்டுகிறது; அவர் தன்னிடம் உள்ளதைப் பாதுகாக்கலாம் என்ற நம்பிக்கையும், போரில் தோல்வி ஏற்படலாம் என்ற அச்சமும் அடுத்தடுத்துக் கொள்கிறார்.

[கடற்போர் தொடங்குகிறது. சற்று நேரத்தில் திடீர் என்று அந்தோனி ஓடி வருகிறார்]

அந்தோ : எல்லாம் போய் விட்டது. இந்தக் கீழ்மையான கிளியோபாட்ரா எனக்குத் துரோகம் செய்து விட்டாள். நமது கடற்படை எதிரியிடம் சரணாகதி அடைந்து விட்டது. அங்கே நமது வீரர்கள் எதிரியிடம் தமது குல்லாயை அசைத்து நீண்ட நாள் கழித்துச் சந்தித்த

நண்பர்களைப் போல மகிழ்ச்சியுடன் பழகுகின்றனர். மூன்று முறை ஒழுக்கம் கெட்ட மூளி! (கிளியோபாட்ராவை எண்ணி) என்னை இந்தச் சின்னப் பயலுக்கு (சீசருக்கு) விற்றவள் நீதான்! எனது இதயம் இப்பொழுது உன்னோடுதான் போராடுகிறது. அவர்கள் எல்லாம் ஓடட்டும்! உன்னைப் பழிவாங்கினால் தான் என் உள்ளம் ஆறுதல் அடையும். எல்லோரும் ஓடுங்கள்...போங்கள்... (ஸ்காரஸ் செல்கிறான்) ஓ! ஞாயிறே! இனி உன் உதயத்தை நான் என்றுமே காண மாட்டேன். அதிர்ஷ்டமும் அந்தோனியும் இங்கே பிரிகின்றனர்! முடிவு இதுதான்! நான் நன்மை செய்ததால் இதுவரை பின் தொடர்ந்த இதயங்கள் எல்லாம் என்னிடம் இருந்து கரையட்டும். மலரும் சீசரிடம் சென்று அவனை மகிழ்விக்கட்டும். இதுவரை எல்லோருக்கும் மேலாக இருந்த இந்தப் பைன்மரம் (தன்னை) இப்பொழுது கிளையிழந்து நிற்கிறது. துரோகம் இழைக்கப்பட்டு விட்டேன். ஓ! எகிப்தின் தாழ்ந்த பிறவியே! அழிக்கும் மாய சக்தியே! உனது கவர்ச்சிக் கண்கள் என் போரைத் தடுத்து வீட்டுக்கு இழுத்தன! உனது காதல் எனது வாழ்க்கையின் மாபெரும் புகழ்! துயரமான முடிவு! சரியான நாடோடியைப் போல என்னை அழிவின் எல்லைக்கே சுருக்கி விட்டாய். ஈன்னாஈராஸ்! (கிளியோபாட்ரா வருகிறாள்) ஆ!... மோசக்காரி! போ...இங்கிருந்து போய்விடு.

கிளியோ : பிரபு! ஏன் உங்கள் காதலியிடம் இவ்வளவு கோபம்?

அந்தோ : ஓடி ஒளி! இல்லாவிட்டால் உன்னைக் கொன்று சீசரின் வெற்றியைக் கறைப்படுத்தி விடுவேன். அவன் உன்னைச் சிறைபிடித்துச் சென்று ரோமாபுரி மக்களிடம் விளையாட்டுப் பொருளாகக் காட்டட்டும்

அவனது வெற்றி ஊர்வலத்தில் நீ அவனது இரதத்தைப் பின்தொடர்ந்து மானமிழந்து செல். நீ ஒரு இராட்சசியாக இருப்பதால் உன்னை வேடிக்கை காட்டி பணம் சம்பாதிக்கட்டும். பொறுமைமிக்க ஆக்டேவியா, தயாராக வளர்த்துள்ள தன் நகத்தால் உன் முகத்தைக் கிழிக்கட்டும். (கிளியோபாட்ரா வருத்தத்தோடு போகிறாள்) போ...நீ போனது நல்லதாய்ப் போயிற்று. நீ வாழ விரும்பினால் போ... ஆனால் என் கோபத்துக்கு நீ பலியாவது நல்லது. ஏனென்றால் நீ பயத்தாலும் கோழைத்தனத்தாலும் பல முறை சாவதை விட இப்படி ஒருமுறை சாவது நல்லது. ஈராஸ்...வா...நெஸ்சகின் விஷச்சட்டை என்மீது அணிவிக்கப்பட்டுள்ளது. ஏ! ஹெர்க்குலிஸ்! எனது முன்னோனே! உனது கோபத்தை எனக்கும் கற்றுக் கொடு. அவனையும் கொன்று, நானும் தற்கொலை செய்துகொள்ள எனக்குப்பலம் தா. அந்தச் சூனியக்காரி சாக வேண்டியதுதான். அந்த ரோமானியச் சிறுபயலுக்கு என்னை அவள் விற்று விட்டாள். அவளது சதிக்கு நான் ஆளாகிவிட்டேன். அவள் அதற்குச் சாக வேண்டும். ஈராஸ்!...

(போகிறான்)

## காட்சி—13

இடம் : அலெக்சாண்டிரியா — கிளியோபாட்ராவின் அரண்மனை

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ், மார்டியான் ஆகியோர் வருகின்றனர்.]

கிளியோ : தோழிகளே! உதவுங்கள். ஆத்திரத்தில் அந்தோனி, டெலமானைவிடப் பைத்தியமாக இருக்கிறார். தெஸ்ஸலியை விடச் சினமாக மொழிகிறார்.

சார்மியான் : நினைவுச் சின்னச் சமாதிக்குச் செல்லுங்கள். அங்கே உங்களை அடைத்துக் கொண்டு நீங்கள் இறந்து விட்டதாக அவருக்குச் செய்தி அனுப்புங்கள். உயிர் உடலை விட்டுப் பிரியும்பொழுது ஏற்படும் போராட்டம் ஒருவனின் மானம் நீங்கும்பொழுது ஏற்படும் போராட்டத்தைவிடப் பெரிதன்று.

கிளியோ : நினைவுச் சின்னச் சமாதிக்குச் செல்வோம்... மார்டியான்! போ...அவரிடம் போய் நான் என்னைக் குத்திக் கொண்டு இறந்து விட்டதாகக் கூறு. நான் கூறிய கடைசி வார்த்தை "அந்தோனி" என்றும் கூறு. அதை மிகவும் வருத்தத்தோடு கூறு. பிறகு, மார்டியான் அவர் என் சாவை எவ்வாறு ஏற்றுக் கொள்கிறார் என்பதை வந்து கூறு. வாருங்கள்... நினைவுச் சின்னச் சமாதிக்குச் செல்வோம்.

(போகின்றனர்)

## காட்சி—14

இடம் : அலெக்சாண்டிரியா — கிளியோபாட்ரா வின் அரண்மனை—வேறொரு அறை.

[அந்தோனியும் ஈராசும் வருகின்றனர்]

அந்தோனி : ஈராஸ்! இன்னும் என்னைக் கவனிக்கிறாயா?

ஈராஸ் : பிரபு!

அந்தோ : சில சமயங்களில் நாம் வானத்தில் மேகங்களை இராட்சத உருவில் காண்கிறோம். பிறகு கரடியாக, சிங்கமாக, கோபுரங்கள் நிறைந்த கோட்டையாக, தொங்கும் பாறையாக, சிகரங்கள் நிறைந்த மலையாக, மரங்கள் மண்டிய சிகரமாக எல்லாம் காண்கிறோம். அந்த மரங்கள் நம்மை நோக்கித் தலையசைத்துக் கேலி செய்வது போலவும் காண்கிறோம். நீ இவற்றை எல்லாம் கவனித்திருப்பாய். மாலை வானக்காட்சி களான இவை இரவு வருவதை முன்கூட்டியே அறிவிக்கின்றன.

ஈராஸ் : ஆ! பிரபு!

அந்தோ : தண்ணீர்த்துளி, வெள்ளத்தில் எப்படி மறை கிறதோ, அதுபோல வானில் ஓடும் மேகக் கூட்டங்கள் முதலில் குதிரை போலவும், பிறகு மிருகங்கள் போலவும் தோன்றி, காற்றால் துரத்தப்பட்டுத் தம் உருவை இழந்து மறைகின்றன.

ஈராஸ் : ஆம் பிரபு!

அந்தோ : என் அன்பான ஈராஸ்! இப்பொழுது உன் தலைவன் ஒரு வெறும் உடல்... இதோ அந்தோனி இருக்கிறேன். நானும் மேகம் போல ஒரு மறையும் பொருள்தான். நீ என்னை நம்ப முடியாது. நான் போராடியது எல்லாம் இந்த எகிப்துக்காகத்தான்! இந்த நாட்டின் அரசி கிளியோபாட்ரா என் இதயத்தைப் பெற்றாள். அவளுடைய இதயத்தையும் நான் பெற்றதாகத்தான் நினைத்தேன். நான் அவளைக் காதலிக்குமுன் அவள் இதயம் பல லட்சம் பேருக்குச் சொந்தமாக இருந்தது. ஆனால்...... ஈராஸ்! அவள் சீசருடன் சேர்ந்து சதி செய்து விட்டாள். எனது புகழைத் தாழ்த்தி, எதிரியின் வெற்றிக்கு வழிவகுத்து விட்டாள். (ஈராஸ் அழுகிறான்) அழாதே... இனிய ஈராஸ்! நம் உயிரைப் போக்கும் சக்தி நமக்கு இன்னும் இருக்கிறது. (மார்டியான் வருகிறான்) வா... உனது தீய தலைவி!... தன் துரோகத்தால் என் வாளின் வலிமையைப் பறித்து விட்டாள்.

மார்டியான் : இல்லை, அந்தோனி! எனது தலைவி தங்களை நேசித்தாள். அவளது நல்வாழ்வு தங்களுடன் முழுவதும் இணைந்தே இருந்தது.

அந்தோ : இல்லை... அலியே! வாயை மூடு! அவள் எனக்குத் துரோகம் செய்து விட்டாள். அவள் சாக வேண்டியதுதான்!

மார்டியான் : ஒருவரின் சாவு ஒருமுறைதான் வரும். அது அவளுக்கு ஏற்கெனவே வந்துவிட்டது. தாங்கள் அவளுக்கு உண்டாக்கக் கூடியதை அவள் முன் கூட்டியே உண்டாக்கிக் கொண்டு விட்டாள். அவள் சாகுமுன் கூறிய கடைசி வார்த்தை. "அந்தோனி! பெருந்தன்மை மிக்க அந்தோனி!" என்பதுதான். இதயம் வெடிக்கும்

துயரத்தால் அவள் தங்கள் பெயரை அதற்கு மேல் ஒலிக்க முடியவில்லை. ''அந்தோனி'' என்ற வார்த்தை அவளது உள்ளத்துக்கும் உதட்டுக்கும் இடையே ஊசலாடியது. தங்கள் பெயர் அவளது இதயத்தில் பதிய அவள் இறந்து விட்டாள்.

அந்தோ : என்ன? இறந்து விட்டாளா?

மார்டியான் : ஆம். இறந்து விட்டாள்.

அந்தோ : ஈராஸ்! கவசத்தை நீக்கு! நமது கடமை முடிந்தது. இனிமேல் நாம் மீளா உறக்கத்தில் ஈடுபட வேண்டும். (மார்டியானை நோக்கி) நீ இங்கிருந்து உயிரோடு மீள்வதே உனக்குக் கிடைத்த மாபெரும் பரிசாகும். போ... (மார்டியான் போகிறான்)... ஈராஸ்! கழற்று!... கவசத்தைக் கழற்று! அஜாக்சின் ஏழு மடிப்புக் கொண்ட கவசம்கூட எனது நாடித் துடிப்பின் வேகத்தைத் தடுக்க முடியாது. ஏ! விலா எலும்புகளே! உடையுங்கள். உயிர் போகட்டும்; ஏ! இருதயமே! நீ விலா எலும்புகளைவிடப் பலம் பெற்று விட்டாயே! உடைந்து மறை! விலகு! ஈராஸ்! விலகு! இனி நான் வீரனில்லை. இனி எனக்குக் கவசம் தேவையில்லை... போ... ஈராஸ்!... நீ உயர்குடியில் பிறந்தவன்!... போ... என்னிடமிருந்து சற்று நேரம் விலகியிரு... (ஈராஸ் போகிறான்)... கிளியோபாட்ரா! உயிரை விடுவதில் நான் உன்னை வெல்லப் போகிறேன்... உன் மன்னிப்புக்காக நான் அழுகிறேன். இனி எனக்கு வாழ்க்கை என்பது ஒரு துயரச்சுமை! வாழ்க்கை ஒளி அணைந்து விட்டதால் இனி உறக்கம்தான்! இனி அடையக் கூடிய சாதனை எதுவுமில்லாததால் எல்லா உழைப்பும் வீண்தான்! பலம் வாய்ந்த முயற்சிகள் எல்லாம் தமது பலத்தாலேயே தம்மை அழித்துக் கொள்கின்றன. வெற்றிக்கு மூலமே தோல்விக்கு

மூலமாக இருக்கிறது. முடி... எல்லாம் முடிந்து விட்டது... ஈராஸ்... நான் வருகிறேன்; என் அரசியே!— எனக்காகக் காத்திரு! சொர்க்கத்தில் உயிர்கள் மலர் களில் உட்காரும்பொழுது நாம் கைகோத்து நின்று, ஆவிகள் எல்லாம் நம்மை நோக்கச் செய்வோம். முன்னாள் காதலராகிய டிடோவும், ஏனசும் சொர்க்கத் தில் ஆதரவு இழப்பார்கள். எல்லா ஆவிகளும் நம்மையே ஆதரிக்கும். வா. ஈராஸ்! ஈராஸ்!

[ஈராஸ் திரும்பி வருகிறான்]

ஈராஸ் : பிரபு! என்ன செய்ய வேண்டும்?

அந்தோ : கிளியோபாட்ரா இறந்து விட்டதால் நான் இனி உயிர் வாழ்வது அவமானம். கடவுளர்களும் எனது சிறுமை கண்டு வெறுக்கின்றனர். வாளின் பயத்தால் வையகத்தையே பகுத்தும் பிரித்தும் அரசாண்ட நான், கடலின் மேல் கப்பல்களை நிறுத்தி அவற்றால் நகரங் களை உண்டாக்கிய நான், ஒரு பெண்ணின் துணிவுகூட இல்லாமல் இன்று என்னையே வெறுத்துக் கொள் கிறேன். அவள் தன்னையே கொன்று கொண்டதால் அவள் என்னைவிடத் தகுதி வாய்ந்தவள். அவள் சீசரைப் பார்த்து, "என்னை வென்றவள் நான் ஒருத்தி தான்" என்று சொல்வதுபோல் தோன்றுகிறது. ஈராஸ்! நீ உறுதி கூறியிருக்கிறாய்... நெருக்கடியான நிலை ஏற்படுகின்ற பொழுது, வெட்கமும் அவமானமும் என்னைத் தாக்குகின்ற பொழுது, எனது ஆணைப்படி என்னைக் கொல்ல நீ உடன்பட்டிருக்கிறாய். அதைச் செய். அந்தச் சமயம் இப்பொழுது வந்திருக்கிறது. நீ என்னைக் கொல்வதன் மூலம் சீசருக்குத் தோல்வியை ஏற்படுத்துகிறாய்... அஞ்சாதே... தைரியத்தை வரவழைத்துக் கொள்.

ஈராஸ் : கடவுள் என்னைக் காப்பாராக! பார்த்தியர்களின் அம்புகளே செய்யத் தவறியதை, பகைவர்கள் யாராலும் செய்ய முடியாததை நான் செய்வதா?

அந்தோ : ஈராஸ்! இப்பொழுது நீ என்னைக் கொல்லா விட்டால் நாளை என்ன நடக்கும் தெரியுமா? ரோமில் நீ ஒரு ஜன்னலின் வழியாகக் காணப் போவது என்ன தெரியுமா? உனது தலைவனைக் கைதியாகக் காண்பாய். அவனது இரு கரங்களும் விலங்கிடப்பட்டு, தலை தொங்க, முகம் வெட்க, சீசர் பவனிவரும் தேருக்குப் பின்னால் அவன் நடந்து வருவான். அந்தக் காட்சியைக் காணப் போகிறாயா?

ஈராஸ் : முடியாது. என்னால் அந்தக் காட்சியைக் காண முடியாது.

அந்தோ : அப்படியானால் வா. உனது கத்தியால் என்னைக் கொல். உனது தகுதி வாய்ந்த கத்தியை எடு; உனது தாயகத்துக்குத் தேவையான மாபெரும் சேவையைச் செய்.

ஈராஸ் : பிரபு! என்னை மன்னியுங்கள்.

அந்தோ : உனக்கு நான் அடிமைத் தனத்திலிருந்து விடுதலை வழங்கியபொழுது, நீ எனக்கு உறுதி கூறி இருக்கிறாய். நான் சொல்லும்பொழுது இந்தச் செயலை நிறைவேற்ற உடன்பட்டிருக்கிறாய். அதை உடனே செய். இல்லாவிட்டால் இதுவரை நீ செய்து வந்த சேவை எல்லாம் தற்செயலாகச் செய்தனவாகவே கருதுவேனே அல்லாமல் மனம் விரும்பிச் செய்தன வாகக் கருதமாட்டேன். ம்...கத்தியை எடு...வா...

ஈராஸ் : அப்படியானால் உங்கள் முகத்தைத் திருப்பிக் கொள்ளுங்கள்...உலகமே வணங்கும் அந்த உன்னதமான முகத்தைத் திருப்பிக் கொள்ளுங்கள்.

அந்தோ : சரி வா...(முகத்தைத் திருப்பிக் கொள்கிறான்).

ஈராஸ் : எனது கத்தியைக் கையில் எடுத்து விட்டேன்.

அந்தோ : எடுத்த கத்தியால் காரியத்தை உடனே முடி.

ஈராஸ் : எனது இனிய தலைவ! சக்கரவர்த்தி! பலியிடுவதற்கு முன் தங்களிடமிருந்து இறுதியாக விடை பெறுகிறேன்.

அந்தோ : இறுதி விடை ஏற்கெனவே அளித்து விட்டேன். மனிதா! இறுதி விடை தருகிறேன்!

ஈராஸ் : இறுதி விடை பெறுகிறேன்: தலைவா! நான் இப்பொழுது தாக்கலாமா?

அந்தோ : இப்பொழுதே தாக்கு ஈராஸ்!

ஈராஸ் : ...சரி...இவ்வாறு நான் அந்தோனியின் மரணத் துயரத்திலிருந்து தப்புகிறேன்.

[தன்னையே குத்திக் கொண்டு சாகிறான்.]

அந்தோ : ஆ! ஈராஸ்! நீ என்னைவிட மும்மடங்கு தகுதியானவன்! வீரமிக்க ஈராஸ்! நான் என்ன செய்ய வேண்டுமோ அதை நீ எனக்குக் கற்பித்து விட்டாய். ஆனால் உன்னால் அதைச் செய்ய இயலவில்லை. (என்னைக் கொல்லுதல்) எனது அரசியும், ஈராசும் தங்களது வீரச் செயலால் வீர வரலாற்றிலேயே ஒரு

பொன்னான இடத்தைப் பெற்று விட்டார்கள். ஆனால் நான் மணமகளின் மகிழ்ச்சியோடு சாவை அணைக்கப் போகிறேன். வா...ஈராஸ்! உனது தலைவன் தன் சாவைப் பொறுத்தவரை உனது சிறப்பான மாணவன் ஆவான்!... இப்படிச் சாகிறேன். (கத்தியை நிறுத்தி வைத்து அதன்மீது விழுந்து மரண காயம் படுகிறான்)... என்ன?... நான் இன்னும் சாகவில்லையா? சாக வில்லையா? ஏவலர்களே! ... ஓ ... என்னைக் கொல்லுங்கள்.

[டெர்செட்டஸ் என்னும் வீரனும், காவலன் ஒருவனும் வருகின்றனர்.]

முதல் காவலன் : என்ன சப்தம்?

அந்தோ : நண்பர்களே! எனது செயலை நான் சரிவரச் செய்யவில்லை, நான் தொடங்கியதை நல்லவிதமாக முடித்து வையுங்கள்.

இரண்டாம் காவலன் : ஐயோ! நட்சத்திரம் விழுந்து விட்டது!

முதல் : எல்லாம் முடிவுக்கு வந்து விட்டது.

எல்லோரும் : ஐயோ! ஐயோ! (அழுகின்றனர்)

அந்தோ : என்னை நேசிப்பவன் என்னைக் குத்திக் கொல்லட்டும்.

முதல் : நான் மாட்டேன்.

இரண்டாம் : என்னால் முடியாது.

மூன்றாம் : யாராலும் முடியாது. (ஓடுகின்றனர்)

டெர்செட்டஸ் : சாவும், துரதிர்ஷ்டமும் தங்களது வீரர்களை ஓடச் செய்கின்றன. தங்களை வீழ்த்திய இந்த இரத்தம் தோய்ந்த கத்தியை சீசரிடம் காட்டினால் அவரிடம் நமக்கு நல்ல வரவேற்புக் கிடைக்கும்.

[டயோமெட் வருகிறான்.]

டயோமெட் : அந்தோனி எங்கே?

டெர்செட்டஸ் : அதோ அங்கே...டயோமெட்...அங்கே!

டயோமெட் : அவர் உயிர் வாழ்கிறாரா! நீ பேச மாட்டீரா! ஐயா! (டெர்செட்டஸ் பதில் பேசாது வெளியேறுகிறான்.)

அந்தோ : டயோமெட்! நீ அங்கேயா இருக்கிறாய்! உன் கத்தியை எடுத்து என்னை ஒரே வெட்டில் கொன்று வீழ்த்து.

டயோமெட் : பிரபு! எனது தலைவி கிளியோபாட்ரா என்னைத் தங்களிடம் அனுப்பினாள்...

அந்தோ : அவள் உன்னை எப்பொழுது அனுப்பினாள்?

டயோ : இப்பொழுதுதான் பிரபு!

அந்தோ : அவள் எங்கிருக்கிறாள்?

டயோ : நினைவுச் சின்னச் சமாதியில் அடைபட்டிருக்கிறாள். தாங்கள் தற்கொலை செய்து கொண்டு விடுவீர்களோ என்று அவள் பெரிதும் அஞ்சுகிறாள். அவள் சீசருடன் சேர்ந்து சதிசெய்து விட்டதாகத் தாங்கள் எண்ணியபொழுது, தங்கள் அர்த்தமற்ற கோபத்தைத் தணிக்க முடியாதபொழுது, அடிப்படை

யற்ற தங்கள் அவநம்பிக்கைகயைப் போக்குவதற்காக, அவள் தான் இறந்து விட்டதாகத் தங்களுக்குச் செய்தி அனுப்பினாள். ஆனால் அந்தப் பொய்யினால் தவறான விளைவுகள் ஏற்படக் கூடும் என்று அஞ்சி என்னை உண்மையைக் கூற அனுப்பியிருக்கிறாள். நானும் வந்து விட்டேன். ஆனால் என் வருகை தாமதமாகி விட்டதே என்று அஞ்சுகிறேன்.

அந்தோ : நல்ல டயமெட்! அதிக தாமதமாகி விட்டாய். பரவாயில்லை. எனது ஏவலர்களை அழை. உடனே அழை.

டயமெட் : ஏ! காவலர்களே! வாருங்கள்! உங்கள் பிரபு உங்களை அழைக்கிறார். வாருங்கள்...

[அந்தோனியின் நான்கு, ஐந்து காவலர்கள் வருகின்றனர்.]

அந்தோ : கிளியோபாட்ரா இருக்கக் கூடிய இடத்துக்கு என்னைத் தூக்கிச் செல்லுங்கள். நான் உங்களுக்கு இடக்கூடிய இறுதிக் கட்டளை இதுதான்!

முதல் காவலன் : ஐயோ! ஐயோ! உங்களுக்கு முன் நாங்கள் இறப்பது உறுதி அரசே!

எல்லோரும் : மிகவும் துயரமான நாள்.

அந்தோ : இல்லை, எனது நல்ல துணைவர்களே! உங்கள் வருத்தத்தால் கொடிய விதிக்கு வாழ்த்துக் கூறாதீர்கள். நம்மைத் தண்டிக்க வரும் விதியை நாம் விரும்பி வரவேற்றால் அந்த வரவேற்பே அதற்கு ஒரு பலத்த அடியாகும்! என்னைத் தூக்கிச் செல்லுங்கள். இது

வரை உங்களை நான் நடத்திச் சென்றேன். இப்பொழுது நீங்கள் என்னைத் தூக்கிச் செல்லுங்கள். நண்பர்களே! எல்லோருக்கும் என் நன்றி உரியது!

[காவலர்கள் அந்தோனியைத் தூக்கிச் செல்கின்றனர்.]

## காட்சி—15

இடம் : அலெக்சாண்டிரியா— நினைவுச் சின்னச் சமாதி

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ் ஆகியோர் தோன்றுகின்றனர்.]

கிளியோபாட்ரா : ஓ, சார்மியான். நான் இங்கிருந்து ஒருகாலும் போகமாட்டேன்.

சார்மியான் : ஆறுதல் கொள்ளுங்கள், அன்பான தேவி!

கிளியோ : இல்லை. என்னால் முடியாது. புதிய பயங்கர நிகழ்ச்சிகளெல்லாம் நன்கு நடக்கட்டும். ஆனால் ஆறுதல் இனித் தேவையில்லை. நமது துயரத்தின் அளவு, அதன் காரணத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது, அந்தக் காரணத்தின் அளவுக்குப் பெரிதாக இருக்க வேண்டும். (நினைவுச் சின்னச் சமாதிக்குக் கீழே டயமெட் வருகிறான். சமாதிக் கட்டடத்தின் மேலே இருந்தவாறே, கிளியோபாட்ரா கீழே நிற்கும் டயமெட்டுடன் பேசுகிறாள்) என்ன? அவர் இறந்து விட்டாரா?

டயமெட் : அவர் செத்துக் கொண்டிருக்கிறார். ஆனால் சாகவில்லை. சமாதிக்கு மறுபுறத்தில் பாருங்கள். அவரை அவரது காவலர்கள் தூக்கி வந்துள்ளார்கள்.

[அந்தோனியை அவனது காவலர்கள் தூக்கியவாறு சமாதிக் கட்டடத்தின் கீழ் வாயிலில் நுழைகின்றனர்.]

கிளியோ : கதிரவனே! நீ சுற்றி வரும் இந்த உலகைச் சுட்டுப் பொசுக்கு! பூமி இருளட்டும். ஓ! அந்தோனி! அந்தோனி! உதவுங்கள், சார்மியான்? இராஸ்! உதவுங்கள். கீழே நிற்கும் நண்பர்களே! உதவுங்கள். அவரை நாங்கள் மேல் மாடிக்கு இழுக்க உதவுங்கள்.

அந்தோ : சீசரின் ஆற்றல் அந்தோனியை,வெல்லவில்லை. அந்தோனி தன்னைத்தானே வென்று கொண்டு விட்டான்.

கிளியோ : அதுதான் உண்மை! அந்தோனியை அந்தோனி தவிர வேறு யாராலும் வெல்ல முடியாது. ஆனால் இது வருந்தத்தக்கது.

அந்தோ : நான் சாகிறேன், அன்பே! சாகிறேன். ஆனால் உன்னை ஓராயிரம் தடவை முத்தமிட அவகாசம் தரும்படி சாவை வேண்டுகிறேன்.

கிளியோ : எனக்குத் துணிவு இல்லை, பிரபு! எனக்குத் துணிவு இல்லை. மன்னியுங்கள். நான் கீழே வந்தால் கைது செய்யப்படலாம். சீசரின் வெற்றி ஊர்வலத்தில் நான் கைதியாக வருவதன் மூலம் அதன் அழகை அதிகப்படுத்தக் கூடாது. நான் எனது வாழ்வைக் கத்தியாலோ, மருந்தாலோ, அல்லது பாம்பாலோ

முடித்துக் கொள்வேன். உங்கள் மனைவி ஆக்டேவியா தனது கண்ணாலும் அமைதியாலும் என் காட்சியால் மகிழக்கூடாது. ஆனால் வாருங்கள், அந்தோனி, இங்கே மேலே வாருங்கள்...உதவுங்கள் தோழியர்களே—அவரை மேலே இழுக்க உதவுங்கள்...

அந்தோ : விரைந்து என்னை மேலே இழுங்கள். இன்றேல் நான் இறந்து விடுவேன்.

(அந்தோனி ஒரு கயிறு கட்டிய கூடையில் இருக்கிறான். அத்தக் கயிற்றைப் பிடித்துக் கிளியோபாட்ராவும் தோழியரும் இழுக்கின்றனர். கூடை மேலே வருகிறது.)

கிளியோ : இது ஒரு நல்ல விளையாட்டு! எனது பிரபு எவ்வளவு கனமாக இருக்கிறார்! நமது பலமெல்லாம் துயரத்தில் மறைந்து விட்டது. அதனால் நம் பிரபு கனமாகக் காட்சி தருகிறார். எனக்கு மட்டும் ஜூனோவின் அதிகாரம் இருந்தால், நான் எனது தூதன் மெர்க்குரிக்கு ஆணையிட்டு, உங்களை மேலே கொண்டுவந்து ஜூபிடருக்கு அருகில் அமர்த்தச் செய்திருப்பேன்...இன்னும் சிறிது மேலே வருக...ஆசைக்காரர்கள் எப்பொழுதுமே முட்டாள்கள்; வருக!வருக!... (கூடையிலிருந்து அந்தோனியை மாடிக்குள் இழுக்கின்றனர்)...வருக! வருக! நீங்கள் வாழ்ந்த இடத்தில் சாவுங்கள். முத்தத்தில் புத்துயிர் பெறுங்கள். எனது இதழ்கள் உங்கட்கு உயிரைத் தருமென்றால் நான் தொடர்ந்து அதைச் செய்யத் தயாராய் இருக்கிறேன்.

எல்லோரும் : துயரமான காட்சி!

அந்தோ : நான் செத்துக் கொண்டிருக்கிறேன்! அரசி! எனக்குச் சிறிது மது கொடு. நான் சிறிது பேசுகிறேன்.

கிளியோ: இல்லை. நான் கடுமையாகத் துரதிர்ஷ்டத்தைத் தூற்றப் போகிறேன். எனது தூற்றுதலால் அதன் சக்கரம் ஒடியட்டும்.

அந்தோ: ஒரு வார்த்தை, இனிய அரசி! சீசருடன் உடன் பாடு செய்து கொள். அப்பொழுதுதான் உனது மானமும் பாதுகாப்பும் நிலைக்கும்.

கிளியோ: இல்லை. உடன்பாடும் மானமும் ஒன்றாக மாட்டா.

அந்தோ: அன்பே! கேள். சீசரிடம் உள்ளவர்களில் புரொக்கியூலியஸைத் தவிர வேறு யாரையும் நம்பாதே.

கிளியோ: எனது தீர்மானத்தையும், கைகளையும்தான் நான் நம்புவேனே தவிரச் சீசரின் ஆட்களில் யாரையும் நம்பமாட்டேன்.

அந்தோ: வருந்தத்தக்க சாவு வந்துவிட்டது. அதற்காக அழாதே; துயரப்படாதே. அதற்குப் பதிலாக நான் முன்பு உலகத்தின் மாபெரும் மன்னனாக வாழ்ந்த பொன்னாளை நினைத்துப் பார். இப்பொழுதும் நான் கீழான சாவை அடையவில்லை. எனது தலையை நான் என் நாட்டு மக்கள் முன்பு வெட்கத்தால் தொங்கப் போடவில்லை. ரோமன் ஒருவன் மற்றொரு ரோமனால் வெற்றிகரமாக வெல்லப்பட்ட கதை இது! இப்பொழுது எனது ஆன்மா மறைகிறது. இனி என்னால் பேச முடியாது.

கிளியோ: மனிதகுல திலகமே! தாங்கள் மரணமடைவீர்களா! தாங்கள் என்னைப் பற்றிக் கவலைப்படவில்லையா? தங்கள் மறைவிற்குப் பிறகு ஒரு பன்றிக்

கூடமாகக் காட்சியளிக்கும் இந்த உலகத்தில் நான் வாழ்வதா?... ஓ...பாருங்கள்... தோழியர்களே!... (அந்தோனி சாகிறான்) பூமியின் முடி சாய்ந்து விட்டது. பிரபு! போர் மாலை வாடி விட்டது. வீரர்களின் தூண் வீழ்ந்து விட்டது! சிறுவர்களும் சிறுமியர்களும் இப்பொழுது மனிதர்களுக்குச் சமமாகி விட்டனர். திறமை மறைந்து விட்டது. பூமியில் இனிக் குறிப்பிடத் தக்கது எதுவுமில்லை.

(மயங்கி விழுகிறாள்)

சார்மியான் : அரசி! அரசி!

இராஸ் : நமது அரசியும் செத்து விட்டார்களா?

சார்மியான் : தேவி!

இராஸ் : தேவி!

சார்மியான் : அம்மா! அம்மா! அம்மா!

இராஸ் : அரசி! அரசி!

சார்மியான் : அமைதி! அமைதி! இராஸ்.

கிளியோ : இனி நான் அரசியில்லை. எல்லா உணர்ச்சி களுக்கும் அடிமைப்பட்ட மற்ற பெண்களைப் போலத்தான் நானும். பால்காரியாக வேலை பார்த்துச் சிறிய வேலைகளையும் தயங்காது செய்து பிழைக்கும் சாதாரணப் பெண்ணைப் போன்றவள்தான் நானும்! எனது செங்கோலைத் தூக்கித் தீயமனக் கடவுளர் மீது நான் எறிவது நல்லது. விலைமதிப்பற்ற நமது இரத்தினமாகிய அந்தோனியை அவர்கள் திருடியது

வரை இவ்வுலகம் அவர்களது சொர்க்கத்துக்கு ஈடாக இருந்தது என்று சொல்வேன். பொறுமை என்பது முட்டாள்களுக்கே பொருத்தமானது. பொறுமையின்மை பைத்தியக்கார நாய்க்கே சரி. சாவு நம்மை எடுத்துச் செல்ல வருமுன் நாம் சாவின் வாயிலை அடைந்தால் அது என்ன பாவமா? தோழியர்களே! உங்கள் எண்ணம் என்ன? என்ன? மகிழ்ச்சி பெறுங்கள். சார்மியான்! தோழியர்களே! நமது விளக்கு அணைந்து விட்டது. அஞ்சாதீர்கள்! இவரை நாம் விலைக்கு வாங்குவோம். இவரைப் புதைத்தபின் நாம் தற்கொலை செய்து கொள்வோம். வாருங்கள். இவரது உடல் குளிர்ந்து விட்டது. நமது உயிரை விரைவில் முடித்துக் கொள்வது என்ற உறுதியைத் தவிர இப்பொழுது நமக்கு நண்பர்களே இல்லை. (பிணத்தைத் தாங்கிக் கொண்டு புதைக்கச் செல்கின்றனர்.)

## களம் 5 காட்சி – 1

இடம் : அலெக்சாண்டிரியா—சீசரின் முகாம்.

[சீசர், அக்ரிப்பா, டோலபெல்லா, மெசினஸ், காலஸ், புரொக்கியூலியஸ் மற்றும் பலர் வருகின்றனர்]

**சீசர் :** அவனிடம் போ...டோலபெல்லா. அவனை அடி பணியச் சொல். முழுத் தோல்வி அடைந்த பிறகு சரணடையத் தாமதிப்பது வெட்கத்தக்கது, என்றும் சொல்.

**டோலபெல்லா :** அப்படியே செய்கிறேன். சீசர் அவர்களே! வருகிறேன். (செல்லுதல்) (அந்தோனியின் கத்தியுடன் டெர்செட்டஸ் வருகிறான்)

சீசர் : நீ எங்கிருந்து வருகிறாய்? கத்தியுடன் நம் முன்னால் இவ்வாறு நீ வரக் காரணம் என்ன?

டெர்செட்டஸ் : என் பெயர் டெர்செட்டஸ். நான் அந்தோனியிடம் வேலை பார்த்தேன். அவரிடம் பணியாற்றுவதே ஒரு பெரும் பேறு! அவர் உயிர் வாழ்ந்த வரை அவர்தான் என் தலைவர். அவரது பகைவர்களை அழிப்பதில் என் வாழ்வை நான் அர்ப் பணித்தேன். தாங்கள் என்னை வேலைக்கு எடுத்துக் கொண்டால், நான் அவரிடம் பணியாற்றியது போலவே தங்களிடமும் பணியாற்றுவேன். தாங்கள் என்னை விரும்பா விட்டால் என் வாழ்வையே முடித்துக்கொள்ள தயாராய் இருக்கிறேன்.

சீசர் : நீ என்ன சொல்கிறாய்?

டெர்செட் : நான் சொல்வது என்னவென்றால், சீசர் அவர்களே! அந்தோனி இறந்து விட்டார்.

சீசர் : அந்தோனியைப் போன்ற ஒரு பெருவீரரின் சாவு ஒரு பெரும் ஆரவாரத்தை ஏற்படுத்தியிருக்க வேண்டுமே. சிங்கங்கள் வீதிக்கு வந்திருக்க வேண்டும். மனிதர்கள் சிங்கக் கூண்டுக்குள் தூக்கி எறியப்பட்டிருக்க வேண்டும். அந்தோனியின் சாவு ஒரு தனிமனிதனின் வீழ்ச்சியில்லை. அவனது பெயரில் ரோமப் பேரரசின் ஒரு பகுதியே கலந்திருக்கிறது.

டெர்செட் : அவர் இறந்து விட்டார் சீசர் அவர்களே! நீதி விசாரணைக்குப் பிறகு ஒரு நீதிபதியால் அவர் தூக்கி விடப்படவில்லை. அல்லது தனது பணியாளால் கொல்லப்படவில்லை. அவர் தனது வாழ்வைத் தன் கையாலேயே முடித்துக் கொண்டார். அவரது சாதனை களுக்கெல்லாம் காரணமாக இருந்த அவரது கைகளே

அந்தக் காரியத்தையும் செய்தன. அவரது இதயம் அளித்த துணிவால்அவர் தன் இதயத்தையேபிளந்தார். இதுதான் அவரது கத்தி! நான் அவரது காயத்திலிருந்து கத்தியை உருவி வந்தேன். அவரது பெருமை மிக்க இரத்தம் தோய்ந்த இந்தக் கத்தியைப் பாருங்கள்.

சீசர் : நண்பர்களே வருந்துகிறீர்களா? இந்தத் துயரச் செய்தியைக் கேட்டதும் அரசர்கள் கண்ணீர் சிந்துவர். அப்படியிருக்க நான் மட்டும் வருந்த மாட்டேனா? நான் வருந்தாவிட்டால் கடவுளர் என்னைக் கண்டிக் கட்டும்.

அக்ரிப்பா : நாம் எதற்காக முயன்றோமோ அது, தானே நடந்திருக்கும் பொழுது நாம் அழுகிறோம். இது வியப்புத்தான்.

மெசினஸ் : பலகீனமும் பண்பாடும் அவரிடம் சமமாக உள்ளன.

அக்ரிப்பா : பெரிய ஆன்மா மனித இனத்துக்கு வழி காட்டியதில்லை. கடவுளர்கள் மனிதனிடம் பொறாமை கொண்டுள்ளனர். அதனால்தான் அவர்கள் மனிதனை ஏதாவது ஒரு விதத்தில் குறைபாடுள்ளவனாகப் படைத் திருக்கிறார்கள். இல்லாவிட்டால் மனிதன் கடவுளாக வந்து விடுவான். அதைத் தடுக்கவே இந்த வழி!

மெகினஸ் : இத்தகைய சாவு சீசருக்கு அழுகையை வர வழைப்பது சரிதான்!

சீசர் : ஓ! அந்தோனி! நான் இதற்கா உன்னைப் பின் தொடர்ந்து வந்தேன். ஒரு நோயைத் தீர்ப்பதற்கு அறுவைச் சிகிச்சை தேவைதான். எனது வீழ்ச்சியை நீயோ, அல்லது உனது வீழ்ச்சியை நானோ பார்க்க

வேண்டும் என்பது விதி. இந்த உலகில் நாம் இருவரும் சமாதானமாக இணைந்து வாழ முடியவில்லை. இருப்பினும் நான் இரத்தக் கண்ணீர் வடிக்கிறேன். ஆனால் நீயோ எனது சகோதரன், எனது பெருமைக்குச் சமமான போட்டியாளன், அரசியற் பங்காளி, போர்க் களத்து நண்பன், தோழன். எனது உடலின் கை, எழுச்சி ஊட்டிய இதயம்...இருந்தும் நமது விதி நாம் இருவரும் இணைந்துபோக அனுமதிக்கவில்லை. அதனால் நாம் பிரிந்தோம்...கேளுங்கள் நண்பர்களே! சரியான சமயத்தில் உங்கட்குச் சொல்கிறேன்— (எகிப்தியன் ஒருவன் வருகிறான்) இதோ இவனைப் பார்த்தால் ஏதோ ஒரு முக்கியமான செய்தி கொண்டு வந்திருப்பதுபோல் தெரிகிறது. இவன் சொல்வதைக் கேட்போம். நீ யார்? எங்கிருந்து வருகிறாய்?

எகிப்தியன் : ஓர் ஏழை எகிப்தியன்! எனது தலைவியாகிய அரசி கிளியோபாட்ரா அவளுக்கு உரிய ஒரே சொத்தாகிய நினைவுச் சின்னச் சமாதியில் தன்னை அடைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் தங்களது ஆலோசனைகளை அறிய விரும்புகிறாள். அதன்படி அவள் நடக்கவும், புதிய வாழ்க்கைக்குத் தன்னைத் தயார்படுத்திக் கொள்ளவும் அவள் விரும்புகிறாள்.

சீசர் : அவள் தைரியமாக இருக்கட்டும். நான் எவ்வளவு அன்பாகவும், மரியாதையாகவும் அவளை நடத்தப் போகிறேன் என்பதை அவள் விரைவில் அறிவாள். கீழ்த்தரமாக நடத்த சீசரால் முடியாது.

எகிப்தியன் : கடவுளர்கள் தங்களைக் காக்கட்டும்.

(போகிறான்)

சீசர் : வா, புரொக்கியூலியஸ்! போ...அவளிடம் சென்று நாம் அவளுக்கு யாதொரு அவமானமும் செய்ய விரும்ப

வில்லை என்று சொல். அவளது துயரத்தைத் துடைக்க தேவையான ஆறுதல்களைக் கூறு. இல்லாவிட்டால், பேரரசியான அவள் தற்கொலை செய்து கொண்டு விடுவாள். நமக்குத் தோல்வி ஏற்பட்டுவிடும். ரோமில் நடக்க இருக்கும் வெற்றி ஊர்வலத்தில் அவளது காட்சி மகத்தானதாகும்! போ... விரைந்து சென்று அவள் சொல்வதையும், அவளைப் பற்றி நீ அறிந்ததையும் வந்து சொல்.

புரொக்கியூலியஸ் : அப்படியே செய்கிறேன். (செல்கிறான்)

சீசர் : காலஸ்! நீயும் போ. (காலஸ் போகிறான்) எங்கே டோலபெல்லா! அவன் புரொக்கியூலியசைப் பின்தொடர வேண்டும்.

அனைவரும் : டோலபெல்லா! (என்று அழைக்கின்றனர்)

சீசர் : அவன் தனியே இருக்கட்டும். அவன் என்ன பணியில் ஈடுபட்டுள்ளான் என்பது நினைவுக்கு வருகிறது. அவன் விரைவில் தயாராக வருவான். என்னோடு எனது பாசறைக்கு வாருங்கள். இந்தப் போரில் நான் எப்படி இழுக்கப்பட்டேன் என்பதை விரிவாக நீங்கள் அங்கே அறிவீர்கள். எனது கடிதங்களை நான் எவ்வளவு அமைதியாகவும் பெருந்தன்மையாகவும் அந்தோனிக்கு எழுதினேன் என்பதையும் அறிவீர்கள். என்னுடன் வந்து அவற்றைக் காணுங்கள். (செல்கிறான்)

## காட்சி—2

இடம் : அலெக்சாண்டிரியா நினைவுச் சின்னச் சமாதியில் ஓர் அறை.

[கிளியோபாட்ரா, சார்மியான், இராஸ் ஆகியோர் வருகின்றனர்]

கிளியோபாட்ரா : எனது விதவை வாழ்க்கை, வரப்போகும் நல்ல வாழ்க்கைக்கு ஒரு தொடக்கமாகும். சீசரின் புகழ் சாதாரணமே ஆகும். அவர் ஒரு பெரிய அதிர்ஷ்டக்காரர் அல்லர்; அதிர்ஷ்டத்தின் வேலையாள் ஆவார். அதன் விருப்பத்தை நிறைவேற்றும் பிரதிநிதி ஆவார். எல்லாச் செயல்களையும் முடிவுக்குக் கொண்டு வரும் ஒரு செயலைச் (தற்கொலை) செய்வது பெரிய சாதனை ஆகும். அந்தச் சாதனையானது ஆபத்துக்களையும், மாறுதல்களையும் நீக்குகிறது. நீண்ட தூக்கத்தை ஏற்படுத்துகிறது. மாமன்னர்களும் சாதாரண மனிதர்களும் உண்டு, உயிர் வாழும் உணவுத் தேவையை நீக்குகிறது.

[நினைவுச் சின்னச் சமாதி வாயிலில் புரொக்கியூலியஸ், காலஸ் மற்றும் வீரர்கள் சிலர் நுழைகின்றனர்]

புரொக்கியூலியஸ் : எகிப்தின் அரசிக்கு சீசர் தன் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறார். சீசர் தங்கட்கு என்ன செய்ய வேண்டும் என்று தாங்கள் எதிர்பார்ப்பதாக என்னை அறிந்து வர அனுப்பி உள்ளார்.

கியோ : உன் பெயர் என்ன?

புரோக் : என் பெயர் புரொக்கியூலியஸ்.

கிளியோ : அந்தோனி உன்னைப்பற்றி என்னிடம் சொல்லி யிருக்கிறார். உன்னை நம்பலாம் என்பது அவரது வார்த்தை. எவரையும் நம்புவதால் எதுவும் பயனில்லை யாதலால் நான் ஏமாற்றப்பட்டாலும் கவலையில்லை. நான் பிச்சையெடுக்க வேண்டுமென்று சீசர் விரும்பி னால், போய்ச் சொல். நான் ஓர் அரசைப் பிச்சை கேட்பதாகச் சொல். வெற்றி கொண்ட எகிப்தை அவர் என் மகனுக்கு வழங்கினால், அவர் வழங்குவது என்னுடையதுதான், அவர் முன்னால் நான் மண்டி யிட்டு நன்றி சொல்வேன்.

புரொக் : மகிழ்ச்சியாக இருங்கள். தாங்கள் ஓர் பேரரசரின் பாதுகாப்பில் இருக்கிறீர்கள். எதற்கும் அஞ்ச வேண்டிய தில்லை. நீங்கள் வெளிப்படையாக சீசரிடம் எதையும் வேண்டலாம். அவர் மிகவும் அன்பானவர். அன்புடை யோர் அனைவர்க்கும் அவர்தம் தேவைகளை நிறை வேற்றுவார். தங்கள் தேவைபற்றி அவரிடம் சொல் கிறேன். அவர் ஒரு வெற்றி வீரராய் இருந்தும், அவரிடம் கருணைக்காக மன்றாட வேண்டியதில்லை. சொன்னாலே போதும். அவரது அன்புணர்ச்சி உடனே அதனை நிறைவேற்றும்.

கிளியோ : உன்னை வேண்டிக் கொள்கிறேன். அவரிடம் சொல். நான் அவரது ஆதரவை எதிர்பார்த்திருப்ப தாகச் சொல். கீழ்ப்படியும் கொள்கையை நான் உடனே கற்றுக் கொள்கிறேன். அவரைச் சந்திக்கவும் தயாராய் இருக்கிறேன்.

புரொக் : தேவி! இதனை அறிவிக்கிறேன். ஆறுதல் கொள்க. தங்கள் நிலை, தங்களை இந்நிலைக்கு ஆளாக்கியவரின் அனுதாபத்திற்கு உரியதே.

காலஸ் : எவ்வளவு எளிதாக இவள் எதிர்பாராவிதமாக முற்றுகைக்கு ஆளாகி விட்டாள்.

[புரொக்கியூலியசும், மற்றும் இரு வீரர்களும் ஓர் ஏணியின் வழியே மேலே ஏறி, ஜன்னலின் வழியே மாடியில் குதித்துக் கிளியோபாட்ரா வின் பின்புறம் வருகின்றனர். சில வீரர்கள் கம்பிகளை வளைத்துக் கதவுகளைத் திறக் கின்றனர்]

காலஸ் : (புரொக்கியூலியசிடமும், மற்றொரு வீரனிட மும்) சீசர் வரும்வரை இவளுக்குப் பாதுகாப்பாக இருங்கள். (செல்கிறான்)

இராஸ் : அரசி!

சார்மியான் : அம்மா! கிளியோபாட்ரா! தாங்கள் கைதாகி விட்டீர்கள் அம்மா!

கிளியோ : வேகம்! வேகம்! நல்ல கைகளே! நடத்துங்கள்... (தற்கொலை செய்து கொள்ளச் சிறு கத்தியை உருவு கிறாள்)

புரொக் : நிறுத்துங்கள்! அம்மா! நிறுத்துங்கள்... (அவள் கையைப் பற்றிக் கத்தியைப் பறித்துக் கொள்கிறான்.) இத்தகைய தீமைகளைச் செய்து கொள்ளாதீர்கள். உங்களுக்கு நாங்கள் பாதுகாப்பே ஒழிய, ஆபத்தல்ல.

கிளியோ : என்ன? நாய்களைக் கூட அவற்றின் நோயி லிருந்து விடுவிக்கும், சாவுகூட எனக்குக் கிடையாதா?

புரொக் : கிளியோபாட்ரா! தற்கொலை மூலம் எனது அரசரின் அன்பு வாய்ப்பைத் தகர்க்காதீர்கள். உலகம் அவரது பெருந்தன்மையை உணரட்டும். ஆனால் உங்கள் சாவு அதைத் தடுத்துவிடும் அன்றோ!

கிளியோ : ஏ, சாவே! நீ எங்கே இருக்கிறாய்! இங்கே வா... வா... வா... பல குழந்தைகளுக்கும் பிச்சைக் காரர்களுக்கும் சமமான ஓர் அரசி இங்கே இருக்கிறாள். அவளை அழைத்துச் செல்...

புரோக் : சஞ்சலமடையாதீர்கள் தேவி!

கிளியோ : ஐயா! நான் புலால் உண்ணமாட்டேன்; மது அருந்த மாட்டேன். ஐயா! உறங்காதிருக்கப் பேச்சு உபயோகப்படுமென்றால் நான் உறங்கமாட்டேன். இந்த ஊன் இல்லம் (உடல்) என்னால் ஒழியப் போகிறது. சீசர் அதனை என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளட்டும். தெரிந்து கொள்ளுங்கள் ஐயா! நான் கைகளில் விலங்கோடு உங்கள் அரசரின் அவையில் காத்திருக்க மாட்டேன். அல்லது கொடிய ஆக்டேவி யாவின் கொடூரமான கண்கள் என்னை ஆரவாரிக்கும் ரோமானியர்களுக்குக் காட்சிப் பொருளாக்குவார்களா? அதற்குப் பதிலாக எகிப்தில் உள்ள ஒரு சாக்கடை எனது புதைகுழியாகட்டும். நைல் மண்ணில் நான் அனாதையாகச் சாகட்டும். நீர் ஈக்கள் என்னைக் கொத்தித் தின்னட்டும். எகிப்தின் பிரமிடுகளில் என்னை இரும்புச் சங்கிலியால் தூக்கிலிடட்டும்.

புரோக் : தங்கள் அச்சம் ஆதாரமற்றது. சீசர் தங்களை அவமானப்படுத்தமாட்டார்.

[டோலபெல்லா வருகிறான்]

டோலபெல்லா : புரொக்கியூலியஸ்! நீ செய்ததை சீசர் அறிவார். அவர் உனக்காக என்னை அனுப்பியிருக் கிறார். அரசியின் பாதுகாவலை நான் ஏற்றுக் கொள்கிறேன்.

புரொக் : அப்படியே செய்க. டோலபெல்லா! அது எனக்குத் திருப்தியே. தேவியிடம் பெருந்தன்மையாக நடந்து கொள். (கிளியோபாட்ராவிடம்) தாங்கள் என்னைத் தூதனாக நடத்த விரும்பினால், நான் தங்கள் செய்தியைச் சீசரிடம் சொல்லத் தயார்.

கிளியோ : சொல், நான் சாகப்போவதாக...

[புரொக்கியூலியசும், சில வீரர்களும் செல்கின்றனர்]

டோலபெல்லா : அரசி! தாங்கள் என்னைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா?

கிளியோ : என்னால் சொல்ல இயலாது.

டோலபெல்லா : நிச்சயமாகத் தங்கட்கு என்னைத் தெரியும்.

கிளியோ : நான் எதையும் கேள்விப்பட்டிருக்கலாம்; அல்லது அறிந்திருக்கலாம். அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. பையன்களும், பெண்களும் தாங்கள் கண்ட கனவைப்பற்றிச் சொல்லும் பொழுது நீ சிரிக்கிறாய். அதுதானே உனது தந்திரம்? இல்லையா?

டோல : எனக்குப் புரியவில்லை தேவி!

கிளியோ : அந்தோனி என்னும் அரசரைப்பற்றி நான் கனவு கண்டேன். அத்தகைய மற்றொரு அந்தோனியைப்பற்றிக் கனவு காண மற்றொரு உறக்கத்தை நான் விரும்புகிறேன்.

டோல : தங்களுக்கு விருப்பமாயிருந்தால்...

கிளியோ : அவரது முகம் சொர்க்கம்போல் இருந்தது. அவரது கண்கள் ஞாயிறும், திங்களும் போல் விளங்கின. அவை இவ்வுலகிற்கு ஒளியை அள்ளி வீசின.

டோல் : மிக அற்புதமான படைப்பு!

கிளியோ : அவர் கடல்மீது நடந்தார். அவரது ஓங்கிய கைகள் உலகின் சிகரமாக விளங்கின. அவரது நட்புப் பேச்சு இன்னிசையாக இருந்தது. அவரது கோபப் பேச்சு இடிமுழக்கமாக அமைந்தது. அவரது அன்பில் குளிர்காலம் இல்லை. அவரது அன்பு அறுவடைக் காலம்போல் இருந்தது. அறுக்க அறுக்க மேலும் மேலும் விளைந்தது. அவரது விளையாட்டுக்கள் கடல் மீனைப் போல இருந்தன. மன்னர்களும் பிரபுக்களும் அவருக்குப் பணிவிடை செய்தனர். தீவுகளும் நாடுகளும் அவரது சட்டைப் பையிலிருந்து வெள்ளி நாணயங்களைப்போல வீழ்ந்தன. எனது கனவில் நான் கண்டதுபோல ஒரு மனிதன் இருந்தான்; அல்லது இருந்திருக்கலாம் என்று நீ நினைக்கிறாயா!

டோல : அரசி!...முடியாது...அப்படி ஒரு மனிதன் இருக்க முடியாது.

கிளியோ : நீ பொய் சொல்கிறாய். உனது பொய் கடவுளின் காதுகளுக்கும் எட்டுகிறது. அந்தோனியைப் போல ஒரு மனிதன் இருந்திருந்தால் அவரை முழு அளவில் கனவில் காட்ட முடியாது. கற்பனைப் படைப்பு களுக்குப் போட்டியான படைப்புக்களை அமைக்க இயற்கைக்கும் வலிமை இல்லை. ஆனாலும் இயற்கை ஓர் அந்தோனியை உருவாக்க விரும்பினால் அது கற்பனைக்கு எட்டாத ஓர் உச்சகட்டமாக அமையும். அந்தப் படைப்பு கற்பனையிலிருந்து கொண்டுள்ள வேறுபாட்டால் வெறும் நிழலான கற்பனையை நிர்மூல மாக்கும்.

டோல : நான் சொல்வதைக் கேளுங்கள் தேவி! தங்கட்கு ஏற்பட்டுள்ள குழப்பம் மிகப் பெரிது! அதற்கேற்ப நீங்கள் பெரிதும் வருந்துகிறீர்கள். உங்கள் வருத்தத்தை நான் மனமார உணர்கிறேன்.

கிளியோ : மிக்க நன்றி! என்னை சீசர் என்ன செய்ய நினைக்கிறார் என்று உனக்குத் தெரியுமா?

டோல : அதுபற்றி நான் அறிந்ததை உங்களிடம் சொல்வதை நான் வெறுக்கிறேன்.

கிளியோ : இல்லை; உன்னை வேண்டிக் கொள்கிறேன். சொல்...

டோல : சீசர் பெருந்தன்மை மிக்கவராக இருந்தாலும்—

கிளியோ : என்னை அவர் வெற்றி ஊர்வலத்தில் இழுத்துச் செல்வார்... இல்லையா?

டோல : ஆம். தேவி...அப்படித்தான்... அது எனக்குத் தெரியும். (முரசு முழங்குகிறது. "சீசர் பராக்! வழி விடுக" என்ற முழக்கம் கேட்கிறது. சீசர், காலஸ், புரொக்கியூலியஸ், மெசீனஸ், செல்யூகஸ், மற்றும் பலர் வருகின்றனர்.)

சீசர் : எகிப்திய அரசி யார்?

டோல : தேவி! அவர்தான் பேரரசர்! (கிளியோபாட்ரா சீசரை மண்டியிட்டு வணங்குகிறாள்)

சீசர் : எழுந்திரு...நீ மண்டியிடக் கூடாது...உன்னை வேண்டுகிறேன்...எகிப்து! எழுந்திரு!

கிளியோ : எனது பிரபுவின் முன்னால் நான் வணங்க வேண்டும் என்பது கடவுளின் விதி!

சீசர் : உனக்கு எதிராக எந்தத் தீங்கும் நினைத்திருப்பதாக எண்ணாதே. நீ செய்த தீமைகளை நான் ஆழமாக உணர்ந்தாலும், அவற்றைத் தற்செயலாக நிகழ்ந்தன வாகவே கருதுகிறேன்.

கிளியோ : உலகின் மணிமுடியே! நான் குற்றமற்றவள் என்று வாதாட என்னால் முடியாது. பெண் இனத் துக்கு அவமானம் விளைவிக்கும் பலகீனம் என்னிடம் இருந்தது என்பதை ஒப்புக் கொள்கிறேன்.

சீசர் : கிளியோபாட்ரா. அறிந்து கொள். உனது குற்றங் களைக் குறைத்து மதிப்பிடுவேனே ஒழிய தண்டனை வழங்க மாட்டேன். நீ எனது கருத்துக்கு இசைந்தால், அதனால் உனக்கு நன்மையே விளையும். ஆனால் நீ அந்தோனியைப் பின்பற்றி தற்கொலை செய்து கொண்டு, எனக்குக் கொடுமை செய்தால், நீ எனது நல்ல நோக்கத்தைத் தடைப்படுத்தி உனக்கு வரக்கூடிய நன்மையை இழந்தவளாவாய். நான் காக்க விரும்பிய உனது குழந்தைகளையும் கொன்றவள் ஆவாய். நான் விடை பெறுவேன்.

கிளியோ : பூமி உங்களுடையது. ஆகையால் நீங்கள் உலகெங்கும் செல்லலாம். நாங்கள் உங்கள் புகழின் அடையாளச் சின்னங்கள். தாங்கள் விரும்பி வைக்கும் இடத்தில் நாங்கள் இருக்க வேண்டியவர்கள். இதோ, பிரபு!

சீசர் : உனது உடைமைகளைப் பொறுத்தவரை நான் என்ன செய்ய வேண்டும் என்பதற்கு நீ ஆலோசனை கூறலாம்.

கிளியோ : எனது உடைமைகளான பொருள், நகை பற்றிய பட்டியல் இது! சரியாக இவை மதிப்பிடப்பட்டுஉள்ளன.

சில்லரைப் பொருள்கள் இதில் சேர்க்கப்படவில்லை. செல்யூகஸ் எங்கே?

செல்யூகஸ் : இதோ தேவி!

கிளியோ : இவன்தான் எனது பொருளாளர்! பிரபு உண்மையைப் பேசாவிட்டால் தண்டனை கிடைக்கும் என்ற அடிப்படையில் இவன் பேசட்டும்...எனக்கென்று நான் எதையும் வைத்துக் கொள்ளவில்லை. உண்மையைச் சொல் செல்யூகஸ்!

செல்யூ : அம்மா! பொய்யைச் சொல்லித் தண்டனை அடைவதற்குப் பதிலாக நான் என் வாயை மூடிக் கொண்டிருப்பது நல்லது.

கிளியோ : என்ன? நான் எதையாவது ஒளித்து வைத்திருக்கிறேனா?

செல்யூ : நீங்கள் வெளிப்படுத்தியிருக்கும் செல்வத்தை விலைக்கு வாங்கும் அளவுக்கு ஒளித்து வைத்து இருக்கிறீர்கள்.

சீசர் : பரவாயில்லை...வெட்கப்பட வேண்டாம். கிளியோபாட்ரா! உனது செயலில் உள்ள அறிவை நான் அங்கீகரிக்கிறேன்.

கிளியோ : பாருங்கள் சீசர்! பாருங்கள். நிலைமை எவ்வாறு மாறுகிறது என்று பாருங்கள். மனிதர்கள் அதிகாரத்தில் இருப்பவர்களைத்தான் பின்பற்றுகிறார்கள். எனது வேலைக்காரன் இப்பொழுது உங்களவன் ஆகிவிட்டான். நாம் நமது நிலையை மாற்றிக் கொண்டால் உங்களது வேலைக்காரர்கள் எல்லாம் என்னுடையவர்கள் ஆகிவிடுவார்கள். இந்த செல்யூகசின் நன்றி கெட்டதனம் எனக்கு ஆத்திரம் ஊட்டுகிறது. ஏ

அடிமை! கணிகை ஒருத்தியைவிட நீ மோசமானவன். உனக்கு என்ன வந்தது? நீ போய்விடு. உனக்கு ஆணை இடுகிறேன். உனது கண்களுக்கு இறகு இருந்தாலும், நான் பறந்து வந்து எனது கண்களால் அவற்றைப் பறித்துவிடுவேன். அடிமை! முட்டாள்! நாய்! கயவன்!

சீசர் : அரசியே! உன்னை நான் வேண்டிக் கொள்கிறேன்.

கிளியோ : ஓ! சீசர்! இது எவ்வளவு கொடிய அவமானம்! நீங்கள் மிகவும் அன்போடு இங்கு வருகை தந்திருக்கிறீர்கள். பணிவான என்னைப் பெருமைப் படுத்தியிருக்கிறீர்கள். ஆனால் எனது சொந்த வேலைக்காரனே எனது அவமானத்தை அதிகப்படுத்தி விட்டான். சொல்லுங்கள் சீசர்! பெண்களுக்கு உரிய சில நகைகள், முக்கியமில்லாத பொம்மைகள், சாதாரணப் பரிசுப் பொருள்கள் ஆகிய சிலவற்றை நான் வைத்துள்ளேன். (தங்கள் மனைவி) விவியாவுக்கும், (சகோதரி) ஆக்டேவியாவுக்கும் கொடுத்து அவர்கள் உதவியைப் பெறுவதற்காகச் சில விலை உயர்ந்த பொருள்களை வைத்துள்ளேன். எனது சோற்றை உண்ட ஒருவன் இதை எல்லாம் வெளிப்படுத்துவதா? கடவுளே எனது வீழ்ச்சியைவிட இந்தஅடிமை செய்த அவமானம் என்னால் பொறுக்க முடியவில்லை. (செல்யூகசிடம்) உன்னை வேண்டுகிறேன். இங்கிருந்து போய்விடு. எனது வளம் குறைந்தாலும், உணர்ச்சி குறையவில்லை. நீ ஒரு மனிதனாக இருந்தால், என்மீது கருணை வைத்து இங்கிருந்து போய்விடு.

சீசர் : போ...செல்யூகஸ்! (செல்யூகஸ் போகிறான்)

கிளியோ : மண்ணாளும் வேந்தர்களான நாம் பிறரது சொல்களுக்கெல்லாம் தவறாக எடைபோடப்

படுகிறோம். நமது வீழ்ச்சியின்போது பிறரது செயல் களுக்கெல்லாம் நாம் பொறுப்பேற்கிறோம். எனவே நமது நிலை இரங்கத்தக்கது.

சீசர் : கிளியோபாட்ரா! நீ வெளிப்படுத்தியுள்ள பொருள் களும், மறைத்துள்ள பொருள்களும் உன்னிடமே இருக்கட்டும். உனக்கு வணிகர்கள் விற்ற பொருளை எல்லாம் உன்னிடமிருந்து பெற்றுச் செல்வனாக மாற சீசர் ஒரு வணிகனில்லை. ஆகவே மகிழ்ச்சியாய் இரு! உனது சிந்தையைச் சிறையாக்காதே! அரசியே! உனது ஆலோசனைப்படி உன்னை நடத்த எண்ணியுள்ளேன். அச்சமின்றி உண்டு, உறங்கு. எனது கருணையும் கவனமும் உன்னிடம் நிறைய உண்டு. நான் உனது தோழன். மகிழ்ச்சியாய் இரு...வருகிறேன்.

கிளியோ : பிரபு! தலைவ!

சீசர் : இல்லை வருகிறேன்.

[முரசு முழங்குகிறது. சீசர் தன் வீரர்கள் அனைவருடனும் செல்கிறார்.]

கிளியோ : தோழியர்களே! அவர் பேசுகிறார். நான் தற்கொலை செய்து கொள்ளாத முறையில் அவர் தந்திரமாகப் பேசுகிறார். ஆனால் கவனி, சார்மியான்

[சார்மியான் காதில் ஓர் இரகசியம் சொல்கிறாள்.]

இராஸ் : முடிந்தது! அரசி! ஒளியுள்ள நாள் முடிந்தது. நாம் இரவு நோக்கி உருள்கிறோம்.

கிளியோ : அது பற்றி ஏற்கெனவே கட்டளையிட்டு விட்டேன். போ...விரைந்து வரச் செய்...

சார்மியான் : தேவி! அப்படியே செய்கிறேன்.

[டோலபெல்லா திரும்பி வருகிறான்.]

டோலபெல்லா : அரசி எங்கே?

சார்மியான் : அதோ இருக்கிறார். (போகிறாள்)

கிளியோ : டோலபெல்லா!

டோல : தேவி! உங்கள் மேல் நான் வைத்துள்ள அன்பு மதத்தின் மேல் வைத்துள்ள அன்புக்குச் சமமாகும். அந்த அன்பால் சொல்கிறேன். சீசர் சிரியா வழியாக ரோமுக்குப் பயணம் செல்ல இருக்கிறார். இன்னும் மூன்று நாளில் உங்களையும் உங்கள் குழந்தைகளையும் அவர் முன் கூட்டியே ரோமுக்கு அனுப்பத் திட்டமிட்டுள்ளார். இதை நன்கு பயன்படுத்திக் கொள்ளுங்கள். நான் உங்கட்கு மகிழ்ச்சி தர இதைக் கூறினேன். எனது வாக்குறுதியையும் நிறைவேற்றி விட்டேன்.

கிளியோ : டோலபெல்லா! உனக்கு நான் என்றும் கடமைப் பட்டுள்ளேன்.

டோல : நான் உங்கள் பணியாள்! வருகிறேன். அரசி! நான் சீசரிடம் செல்ல வேண்டும்.

கிளியோ : வணக்கம், நன்றி! (டோலபெல்லா செல்கிறான்) இராஸ்! இப்பொழுது என்ன நினைக்கிறாய்? நீயும் நானும் எகிப்தியப் பொம்மையாக ரோமில் காட்டப்படுவோம். நாம் ஏழைக் கூலிகளின் முதுகில் ஏற்றப்படுவோம். அவர்கள் உண்ட மட்டமான உணவால் அவர்கள் விடும் கெட்ட சுவாசத்தை நுகர்வோம்.

இராஸ் : ஐயோ! கடவுளே!

கிளியோ : இல்லை. அது நிச்சயம்.

இராஸ் : நான் அதை நிச்சயம் காணமாட்டேன். எனது நகங்கள் என் கண்களைவிட வலிமையானவை என்பது உறுதி.

கிளியோ : ஆம்...அவர்களது தயாரிப்பை முட்டாள் தனமாக்கி, அவர்களது தீய எண்ணத்தை முறியடிக்க அதுதான் வழி. (சார்மியான் திரும்பி வருகிறாள்) சார்மியான்! தோழியர்களே! என்னை அரசியாக ஆக்குங்கள். சிறந்த அரச உடைகளைக் கொண்டு வாருங்கள். அந்தோனியை மீண்டும் சந்திக்க எனது கப்பலில் நான் சிட்னஸ் நதியில் பிரயாணம் செய்வது போல் கற்பனை செய்கிறேன். இராஸ்! போ. சார்மியான்! விரைவில் முடிக்க வேண்டும். இந்தப் பணியை நீ முடித்ததும் உனக்கு நான் இறுதி விடுமுறை தருவேன். நமது மணிமுடி முதலிய அனைத்தும் கொண்டு வாருங்கள்...அது என்ன சப்தம்?... (இராஸ் போகிறாள். ஏதோ ஒலி கேட்கிறது) (ஒரு வேலையாள் வருகிறான்.)

வேலையாள் : அதோ ஒரு பட்டிக்காட்டான் வந்துள்ளான். அவனை உள்ளே வராமல் தடுக்க இயலவில்லை. அவன் உங்கட்கு அத்திப்பழம் கொண்டு வந்துள்ளான்.

கிளியோ : அவன் உள்ளே வரட்டும். (வேலையாள் செல் கிறான்.) எவ்வளவு சிறிய ஒரு பொருள் எவ்வளவு பெரிய காரியத்தைச் செய்ய முடிகிறது. அவன் எனக்கு விடுதலையைக் கொண்டு வருகிறான். எனது தீர்மானம் உறுதியானது. என்னிடத்தில் இனிப் பெண்ணின் புலகினம் இல்லை. தலையிலிருந்து கால்வரை நான்

கல்போல் உறுதி பெற்றுள்ளேன். நிலையில்லாத சந்திரனின் அதிகாரத்தில் இனி நான் இருக்கப் போவதில்லை.

[வேலையாள் பட்டிக்காட்டானான ஒரு கோமாளியை அழைத்து வருகிறான். கோமாளி ஒரு கூடையில் அத்திப்பழம் கொண்டு வருகிறான். இந்த அத்திப்பழத்தில் ஒரு விஷப் புழு இருக்கும். இது உடலில் பட்டால் உடனே மரணம் நேரும். இந்த உண்மை தெரியாததால் சீசரின் வேலையாட்கள் கோமாளியை உள்ளே அனுமதித்து விட்டனர்.]

வேலையாள் : இவன்தான் அந்த ஆள்.

கிளியோ : சரி. இவன் இருக்கட்டும். நீ போகலாம்.

[வேலையாள் செல்கிறான்]

கிளியோ : (கோமாளியை நோக்கி) நைல் நதி தீரத்தில் வளரும் அந்தப் புழுவைக் கொண்டு வந்தாயா? வலியின்றிக் கொல்லும் அந்தப் புழு வந்துள்ளதா?

முட்டாள் : ஆம், கொண்டு வந்துள்ளேன். ஆனால் நீங்கள் அதனைத் தொடுவதற்கு நான் காரணகர்த்தாவாக இருக்க முடியாது. அது கடித்தால் உடனே மரணம் நேரும். அது கடித்து இதுவரை பிழைத்தவர்கள் இல்லை.

கிளியோ : அதனால் இறந்தவர்கள் யாரையாவது உனக்கு நினைவிருக்கிறதா?

முட்டாள் : நிறையப் பேரை நினைவிருக்கிறது. ஆண்களும் பெண்களும் பலியாகியிருக்கிறார்கள். நேற்று ஒருவரைப் பற்றிக் கேள்விப்பட்டேன். நேர்மைக்காக அன்றிப் பெண்கள் பொய் சொல்லக் கூடாது. ஒரு நேர்மையான

பெண் ஏதோ பொய் காரணமாக இதனை உபயோகித்து இறந்து விட்டாள். இதனால் அவளுக்கு ஒரு வலியும் இல்லை. பிறர் கூறுவதை எல்லாம் நம்புபவன் அவர் தம் செய்கையில் பாதியால்கூட எந்தப் பலனும் அடைய முடியாது. ஆனால் இது உறுதி! இது ஒரு அதிசயமான புழு!

கிளியோ : சரி, நீ போகலாம். வணக்கம்!

முட்டாள் : நீங்கள் எல்லாம் புழுவால் மகிழ்ச்சி பெறுங்கள்.

[கூடையைக் கீழே வைக்கிறான்]

கிளியோ : வணக்கம்.

முட்டாள் : இது அதன் இயல்புப்படி கடிக்கும்.

கிளியோ : சரி...வணக்கம்.

முட்டாள் : கவனியுங்கள். இந்தப் புழுவை நம்பக் கூடாது. இதைப் பாதுகாப்பாக வைத்திருங்கள். ஏனெனில் இது மிகவும் கொடுமையானது.

கிளியோ : கவலைப்படாதே. எச்சரிக்கையாகக் கவனித்துக் கொள்கிறோம்.

முட்டாள் : நல்லது. அதற்கு ஒன்றும் கொடுக்காதீர்கள். அதற்கு உணவூட்டுவது பாவம்.

கிளியோ : அது என்னைத் தின்னுமா?

முட்டாள் : நான் படுமுட்டாள் என்று நீங்கள் நினைக்கக் கூடாது. பேய் கூடப் பெண்ணைத் தின்னாது. பேய் பிடிக்கா விட்டால் பெண் என்பவள் கடவுளுக்கு மிகவும் பிரியமானவள். ஆனால் இந்தப் பேய்கள் பெண்களின் மூலம் கடவுளுக்குப் பெருந்தீமை விளைவிக்கின்றன.

கடவுள் உருவாக்கும் ஒவ்வொரு பத்துப் பெண்களிலும் ஐந்து பெண்ணைப் பேய் கெடுத்து விடுகிறது.

கிளியோ : சரி...நீ போகலாம். வணக்கம்.

முட்டாள் : நல்லது......புழுவால் மகிழ்ச்சி பெறுங்கள். வருகிறேன். (செல்கிறான்)

[அரச மணிமுடி, பட்டாடை முதலியவற்றுடன் இராஸ் மீண்டும் வருகிறாள்.]

கிளியோ : எனது பட்டாடைகளைக் கொடு. மணிமுடியை அணிவி. சாகா வரம்பெற விரும்புகிறேன். இனி நான் எகிப்திய மதுவை அருந்தப் போவதில்லை. விரைவு! இராஸ்! விரைவு! அந்தோனியின் அழைப்புக் கேட்கிறது. எனது பெருந்தன்மையான செயலைப் பாராட்ட அவர் மீண்டு வருவதைப் பார்க்கிறேன். சீசரின் துரதிர்ஷ்டம் கண்டு அவர் சிரிப்பது கேட்கிறது. சீசரின் அதிர்ஷ்டம் குறுகிய காலத்தது! நீண்ட நாள் நீடிக்க முடியாதது! கணவரே! நான் வருகிறேன். தற்கொலை செய்து கொள்ள எனக்கிருக்கும் தைரியம், நான் உங்கட்கு மனைவி என்ற தகுதியைத் தருகிறது. நான் நெருப்பும் காற்றும் ஆவேன். வாழ்வின் பலகீனங்கள் இனி எனக்கு இல்லை. ஆகவே இராஸ்! முடித்து விட்டாயா? வா...எனது இறுதி அன்பு முத்தத்தைப் பெறு. அன்புச் சார்மியான்! இறுதி விடை பெறுகிறேன். இராஸ்! இறுதி விடை பெறுகிறேன். (அவர்கள் இருவரையும் முத்தமிடுகிறாள். முன்பே புழுவைத் தொட்டதால் இராஸ் கீழே விழுந்து சாகிறாள்) என்ன? எனது இதழில் புழுவின் நஞ்சு இருக்கிறதா? நீ வீழ்கிறாயே! நீயும் இயற்கையும் இப்படி மென்மையாகப் பிரிய முடியுமானால், மரண அடி என்பது காதலனின் கிள்ளுதல் போல விரும்பத்தக்கதே ஆகும். இப்படி

வழியில்லாமல் நீ சாக முடியுமானால் இந்த வாழ்க்கையை உதற யாருமே வருத்தப்பட வேண்டியதில்லை.

சார்மியான் : இருண்ட மேகமே! மழையே! மறையுங்கள். கடவுளர்கூட அழுகிறார்கள் என்பது நிச்சயம்.

கிளியோ : இராசின் முதற்சாவு என்னைக் கேவலமாக்குகிறது. அவள் முதலில் அந்தோனியைச் சந்திக்கும் பொழுது அவர் அவளிடம் என்னைப் பற்றிக் கேட்பார். அவளுடைய பதிலுக்குப் பரிசாக அவளுக்கு முத்தம் அளிப்பார். அந்த முத்தம்தான் எனக்குச் சொர்க்கமாகும்!

வா! எமனே வா! (ஒரு பழத்தை எடுத்துத் தன் மார்பில் தேய்க்கிறாள். அதில் உள்ள புழு அவளைக் கடிக்கிறது) உனது கூரிய பல்லால் எனது வாழ்க்கை என்னும் அவிழாத சிக்கலைக் கடி. நஞ்சு நிறைந்த முட்டாளே! சினம் கொண்டு உன் வேலையை முடி. மாபெரும் சீசரை ஒரு மடையன் என்று நீ அழைப்பதை நான் கேட்கலாமா?

சார்மியான் : ஓ! கீழ்த்திசைச் சுடரே!

கிளியோ : அமைதி! அமைதி! எனது குழந்தை என் மார்பைச் சுவைத்து என்னைத் தூங்க வைப்பதை நீ காணவில்லையா?

சார்மியான் : ஐயோ! கொடுமை! கொடுமை!

கிளியோ : வலி நிவாரணி போல் இனிமை, தென்றல் போல் மென்மை—ஓ! அந்தோனி! இன்னும் ஒரு புழு கடிக்கட்டும்—(மற்றொரு அந்தப் பழத்தைத் தன்

கையில் தேய்க்கிறாள். அதில் உள்ள புழு கடிக்கிறது)... நான் இவ்வுலகில் தங்கி என்ன செய்ய வேண்டும்... (என்று சொல்லிக் கொண்டு கீழே விழுந்து சாகிறாள்.)

சார்மியான் : சாவு தன் பிடிப்பில் ஓர் இணையற்ற மங்கையை எடுத்து வைத்திருப்பதால் பெருமைப் படலாம். கண் இமைகளே! மூடிக் கொள்ளுங்கள். இவை போன்ற கம்பீரமான அரச கண்களை இனிக் கதிரவன் காண முடியாது. தேவி! தங்கள் மணிமுடி குலைந்து விட்டது. அதை நான் ஒழுங்கு படுத்திவிட்டு என் வேலையை முடித்துக் கொள்கிறேன். (வீரன் ஒருவன் உள்ளே விரைந்து வருகிறான்.)

முதல் வீரன் : அரசி எங்கே?

சார்மியான் : மெல்லப் பேசு; அவளை எழுப்பி விடாதே.

முதல் வீரன் : சீசர் அனுப்பினார்...

சார்மியான் : (ஒரு பழத்தைத் தன்மேல் தேய்த்தவாறு) தாமதமாக வந்த தூதன் நீ. வா...விரைந்து வா. காரியத்தை முடி...உன்னை இப்பொழுது இலேசாக உணர்கிறேன்.

முதல் வீரன் : ...ஓ!...இன்னும் சரியாக முடியவில்லை. சீசர் ஏமாந்து போனார்.

இரண்டாம் வீரன் : சீசரிடமிருந்து டோலபெல்லா வந்துள்ளான், அவனை அழை.

முதல் வீரன் : இனி இங்கே என்ன வேலை இருக்கிறது? சார்மியான்! எல்லாம் நல்ல விதமாக முடிந்ததா?

சார்மியான் : நல்ல விதமாக முடிந்தது. அரசிக்கு ஏற்ற வகையில் அருமையாக முடிந்தது...ஆ! வீரனே!

[கீழே விழுந்து சாகிறாள்.]

[டோலபெல்லா மீண்டும் வருகிறான்.]

டோலபெல்லா : இங்கே எல்லாம் எப்படி இருக்கிறது?

இரண்டாம் வீரன் : எல்லோரும் இறந்து விட்டார்கள்.

டோல : சீசர்!...இவர்களின் சாவிலிருந்து தங்கள் ஆசை தெளிவாகிறது. நீங்கள் தடுக்க விரும்பிய செயல் நடந்து விட்டது. அதனைக் காண நீங்களே வருகிறீர்கள்.

("சீசர் வருகிறார்; வழிவிடுக" என்ற முழக்கம் கேட்கிறது. சீசர் வருகிறார். படைவீரர்கள் பின் தொடர்கின்றனர்.)

டோல : பிரபு! நீங்கள் ஒரு சரியான சோதிடர்! நீங்கள் அஞ்சியது நடந்து விட்டது.

சீசர் : வீரமான முடிவு! அவள் நம் நோக்கத்தைப் புரிந்து கொண்டிருக்கிறாள். அரசியாக இருந்ததால் தனக்குரிய முடிவைத் தேடிக் கொண்டு விட்டாள். இவர்கள் எப்படிச் செத்தார்கள்? இவர்கள் உடலில் இரத்தம் வரவில்லையே.

டோல : இவர்களைக் கடைசியாகச் சந்தித்தது யார்?

முதல் வீரன் : ஒரு பட்டிக்காட்டான்—இவளுக்கு அத்திப் பழம் கொண்டு வந்தான். இதுதான் அவனது கூடை.

சீசர் : அதில் விஷம் கலந்திருக்குமோ?

முதல் வீரன் : ஓ! சீசர்! இந்த சார்மியான் சற்று நேரம் முன்புவரை உயிரோடிருந்தாள். நின்று பேசிக் கொண் டிருந்தாள். கிளியோபாட்ராவின் தலையில் விலகி யிருந்த மணிமுடியைச் சரிசெய்து கொண்டு இருந்தாள். திடீரென்று நடுங்கியவாறு கீழே விழுந்தாள்... அவ்வளவு தான்...

சீசர் : ஓ! பெருந்தன்மையான பலகீனமே! இவர்கள் நஞ்சு குடித்திருந்தால் உடலில் வீக்கம் தெரியும். ஆனால் கிளியோபாட்ரா உறங்குவது போல் தெரிகிறது. இன்னொரு அந்தோனியைப் பிடிப்பது போல் தெரிகிறது.

டோல : இதோ இவளது மார்பில் சிறிது இரத்தம் தோய்ந் திருக்கிறது. ஏதோ சிறு வீக்கம் தெரிகிறது. அதே போன்று இவள் கையிலும் தெரிகிறது.

முதல் வீரன் : இது பாம்பின் சுவடு! நைல் நதிக் குகைகளில் அத்திப்பழப் பூச்சியால் விடப்படும் மண் அடையாளம் போல இந்த அத்தி இலைகளில் இப்பொழுது அடை யாளம் விடப்பட்டுள்ளது.

சீசர் : அப்படித்தான் இவள் செத்திருக்க வேண்டும். இவள் எளிதான வலியற்ற முறையில் சாவதற்கு உரிய வழியைக் கற்றுக் கொள்ளப் பல சோதனைகளைச் செய்ததாக இவளது மருத்துவர் சொல்கிறார். இவளது படுக்கையை எடுங்கள். இவளது தோழிகளையும் சமாதிக்குத் தூக்கிச் செல்லுங்கள். இவள் இவளது அந்தோனிக்கு அருகில் புதைக்கப்பட வேண்டும். உலகில் உள்ள எந்தச் சமாதியும் இந்தக் காதலர்களின்

சமாதிக்கு ஈடாகாது. இத்தகைய மாபெரும் செயல்கள் இவற்றைச் செய்தவர்களுக்கு உரிய பலனைத் தராமல் போகா. அவனது புகழால் துயரம் உற்றவர்களுக்குக் கூட இவர்களது கதை இரக்கம் தரத்தக்கதே ஆகும். இவர்களது இறுதிச் சடங்கில் நமது படை அணிவகுத்து மரியாதை செலுத்தட்டும். வா, டோலபெல்லா, இந்தக்காதலர்களின் பெருமைக்கு ஏற்ற வகையில் இறுதிச் சடங்கை நடத்த ஆவன செய்...

(செல்கிறான்.)

முற்றும்

# பொன்முடி பதிப்பகம்

(தோற்றம் : 3—6—1963)

123, முத்துப்பட்டணம் III தெரு, காரைக்குடி-623001

போன் : 2124

## "பொற்கிழிக் கவிஞர்" அரு. சோமசுந்தரன் நூல்கள்

| | |
|---|---|
| மலேசியா | 20 00 |
| சிங்கப்பூர் | 20 00 |
| ஹாங்காங் | 15 00 |
| தாய்லாந்து | 20 00 |
| பிலிப்பைன்சு | 20 00 |
| இந்தியா | 20 00 |
| இலங்கை | 20 00 |
| நேபாளம் | 16 00 |
| பிரிட்டன் | 15 00 |
| பிரான்சு | 15 00 |
| ஜெர்மனி (மேற்கு) | 15 00 |
| சுவிட்சர்லாந்து | 15 00 |
| இத்தாலி | 20 00 |
| பெல்ஜியம் | 15 00 |
| ஹாலந்து | 15 00 |
| ஆஸ்திரியா | 15 00 |
| வாட்டிகன் | 15 00 |
| ஐரோப்பா | 18 00 |
| வள்ளல் அழகப்பர் | 10 00 |
| ஆங்கில அருங் கதைகள் | 10 00 |
| கவியரங்கில் கவிஞர் சோமசுந்தரன் | 6 50 |
| திருமுறைகள் வீட்டு நூல் | 15 00 |
| பொற்கிழிக் கவிஞர் சோம சுந்தரன் கவிதைகள் | 11 00 |
| கட்டுரைக் கற்கண்டு | 5 00 |
| கட்டுரைப் பெட்டகம் | 9 00 |
| கட்டுரைக் கற்பகம் | 15 00 |

| | |
|---|---|
| கட்டுரை இலக்கியம் | 20 00 |
| கட்டுரைக் கதம்பம் | 10 00 |
| ஷேக்ஸ்பியரின் மாக்பெத் | 16 00 |
| மன்னன் லியர் | 20 00 |
| பன்னிரண்டாம் இரவு | 14 00 |
| ஒதெல்லோ | 25 00 |
| எண்ணிய எண்ணியாங்கு | 18 00 |
| அந்தோணியும் கிளியோபாட்ராவும் | 25 00 |
| இரண்டாம் ரிச்சர்டு | 14 00 |
| வெனிஸ் வியாபாரி | 22 00 |
| ஜூலியஸ் சீசர் | 16 00 |
| புயல் | 16 00 |
| ஹாம்லெட் | 25 00 |
| கார் காலக்கதை | 25 00 |
| மூல பவுத்திர நோய் | 4 00 |
| மாணவர் பட்டி மன்றம் | 7 00 |
| பாரதியாரின் இராணுவ சிந்தனை | 8 00 |
| கவிதை வானில் | 9 00 |
| கவிதை மண்ணில் | 24 00 |
| கவிதைக் கடலில் | 25 00 |
| கவிதை ஆற்றில் | 25 00 |
| சுதந்திர தாகம் | 5 50 |
| அழகிய உளவாளி | 20 00 |
| சர்க்கஸ் அரசி | 20 00 |
| வேலின் முனை | 10 00 |
| தியாகக் குடும்பம் | 10 00 |

MK Colour Process, Madras-14.
Designed by P. N. Anandan